# செந்தமிழ் பெட்டகம்

1



த. கோவேந்தன்

# செந்தமிழ் பெட்டகம்

## தொகுதி - 1

தொகுப்பாசிரியர்

புலவர் த. கோவேந்தன்

**வேமன் பதிப்பகம்**

19, நியூ காலனி, ஜோசியர் தெரு,
நுங்கம்பாக்கம், சென்னை—600 034.
பேசி : 28211134

## நூல் விளக்கம்

| | |
|---|---|
| பெயர் | செந்தமிழ பெட்டகம்–1 |
| ஆசிரியர் | புலவா த கோவேந்தன் |
| உரிமை | பதிப்பகத்தார்க்கு |
| மொழி | தமிழ் |
| நூல் வகை | சமுதாய கட்டுரை |
| பதிப்பு | முதற்பதிப்பு |
| பதிப்பாண்டு | 2005 |
| தாள் | 14–2 கி கி வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு : | டெம்மி (14 x 21 5 செ மீ) |
| எழுத்து | 12 5 புள்ளி |
| பக்கம் | 312 |
| வெளியீடு | **வேமன் பதிப்பகம்**<br>9, நியூ காலனி, சோசியர் தெரு,<br>நுங்கம்பாக்கம், சென்னை – 34<br>☎ 2821 11 34 |
| அச்சகம் | ஜம்மு ஆப்செட்<br>சென்னை – 5 |

**விலை : ரூபா. 150–00**

## உள்ளே புகுமுன்

உலக மொழிகளில் தமிழ் - சமஸ்கிருதம் இரண்டும் தாய் - தந்தையராய் இணைந்து பிறமொழி பிள்ளைகளை பெற்ற பெருமை உடையது என்பதை மொழியியல் அறிஞர்கள் மறுப்பதற்கு இயலாது

பழங்கால அழகியல் பாரம்பரியங்களை கற்பிக்கும் போதனை முறைகளும், பொதுக் கல்வி வளர்ச்சிக்கு உறுதுணையாகவும் நின்று சிறந், ,தன இவ்விரு மொழிகளும் ஆகும்

கல்தோன்றி மண்தோன்ற காலத்தே முன் தோன்றிய தமிழன் தாம் உண்டாக்கிய தமிழ் - சமஸ்கிருதமும் மொழிக்கும் - மக்களின் மேன்மைக்கும் அளித்த பங்களிப்பு எண்ணிலடங்கா கலை-இலக்கியம்-அறிவியல் விஞ்ஞானம் என படைத்தளித்த அருட் கொடைகள் ஏராளம், ஏராளம்

அத்தகை அருட்கொடைகள் சமுதாய தேவையை முன்னிறுத்தியும், நாட்டு நடப்பு களையும் பொருளாதார கொள்கை களையும், வரலாற்று அறிவையும், கலை, காவிய, விஞ்ஞான மேன்மையையும் வளர்த்து

செம்மாந்து நின்று உலகுக்கு வழி காட்டியதை யாராலும் மறுக்க முடியாது, மறக்கவும் கூடாது

இவ்விருமொழிகளும் ஒவ்வொரு காலத்தும் புதுமைத் தன்மையுடன் புதுப் பொலிவு பெற்று வாழ்வியல் இலக்கியங்களை தந்து அரும்பணியாற்றியது

மனிதன் வெளிப்படுத்திய இவ்விரு மொழிகளும் உலக மக்களுக்கு உலக மொழிகளின் சொற்களின் பயன்பாட்டி லிருந்து நாம் அறிந்து கொள்ள முடிகிறது

ஒரு மொழியின் வளர்ச்சி மனிதனின் மேன்மையை வளப்படுத்துவதாக இருக்க வேண்டும் அத்தகைய மொழிவளர்ச்சியே நாட்டின் வளர்ச்சிக்கு உறுதுணையாய் இருக்கும்; இருக்க வேண்டும் ஆயினும், தமிழின் மொழிவளர்ச்சி இத்தகைய வளர்ச்சி தமிழிக மக்களை மேன்மையுறச் செய்திருக் கிறதா என்றால் அது கேள்விக் குறிதான்

இந்நூலில் உள்ள ஆய்வுக் கட்டுரைகள் என் தந்தையாரால் பல்வேறு காலகட்டங் களில் எழுதப் பட்டவை தமிழ் மொழியின் நிண்டு (அகராதி) தொடங்கி பாரதி வரை மொழிக்கு ஆற்றிய பங்கினை வெளிச்ச மிட்டுக் காட்டும் கட்டுரைகள் அவரது ஆழ்ந்த தமிழறிவினையும், ஆய்வு நோக்கினையும் வெளிபடுத்தியுள்ளன

தமிழ் - சமஸ்கிருதத்தின் இலக்கியப் படைப்புகள், இலக்கணங்கள், நாடகம், கதைகள், சிறுகதைகள் தோற்றம் வளர்ச்சி

அவை ஆற்றிய பங்களிப்புகள் ஆய்வுக்கு பயன்படுவதுமட்டுமல்லாமல் மேலும் அவை செழுமையுற வழிகாட்டியும் உள்ளது

தம் இறுதிகாலததில் அவர் தந்த இந்தக் கட்டுரைகள் தமிழுலகுக்கு மேலும் ஒரு மைல்கல் என்றே சொல்லலாம் இதனை வெளியிடும் வேமன் பதிப்பகம் நண்பர் வேலாயுதம் நற்றமிழ் இலக்கியங்களை வெளியிடுவதில் ஆர்வம் உள்ள இளைஞர் இவரது பணி மேலும் தொடர தமிழ் மக்கள் சார்பில் வாழ்த்துவதும் நன்றி கூறுவதும் சாலப் பொருந்தும்

அன்புடன்

**கோ. எழில்முத்து**

# பதிப்புரை

மறைந்த தமிழறிஞர் புலவர் த கோவேந்தன் தமிழுக்கு தந்த படைப்புகள் ஏராளம், கவிதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு, இலக்கியம் என அவர் தடம் பதிக்காத துறைகள் இல்லை என்றே சொல்லலாம்

தமது இறுதி நாள் வரை தமிழுக்காவும் - தமிழர்களுக்காகவும் எழுத்தையே தவமாகக் கொண்டு அவர் தந்த படைப்புகள் தமிழுலகம் உலாகளாவும் பேசப்படும் தமது தமிழ்முச்சினை நிறுத்திக் கொண்ட ஆறு மாதங்களுக்கு முன்பு அவர் தந்த இந்த தமிழ்-சமஸ்கிருத ஆய்வுக்கட்டுரைகள், தமிழ் - சமஸ்கிருத வளர்ச்சியும் அவை தந்த இலக்கிய படைப்புகளும் தமிழுலகம் அறிய இந்நூல் பயன்படும்

தமிழ் - சமஸ்கிருதம் மொழியின் இலக்கிய வளர்ச்சி மட்டுமல்லாமல் மேலை - கீழை நாட்டு இலக்கிய அய்வுக் கட்டுரைகளும் இதில் இடம் பெற்றுள்ளன இந்நூல்

ஆசிரியர் தமிழறிஞர் புலவர் த கோவேந்தன் அவர்களுக்கு இந்நூலை கணிக்கையாக்கி நன்றி கூற கடமைப் பட்டுள்ளேன்

அவர் தமிழ் தொண்டு என்றும் நிலைத்து நிற்கும் என்பதற்கு நல் அடையாளமே இந்நூல்

அன்புடன்

**பதிப்பகத்தார்**

# பொருளடக்கம்

# செந்தமிழ் பெட்டகம்

**அகராதி**
**தோற்றம்**
**வளர்ச்சி**

---

ஒரு மொழியிலுள்ள சொற்கள் அனைத்தையும் அகர முதலிய எழுத்து வரிசையில் அமையும்படி ஒரு சேரத் தொகுத்து, அவற்றின் பொருள்களை அம் மொழியாலேனும் பிறமொழியாலேனும் விளக்கும் நூல் அகராதி எனப்படும் சொல்லின் பொருளைத் தவிர, அதன் தோற்றம், ஆட்சி, அது வந்துள்ள நூல், இடம் முதலியவற்றையும் பெரிய அகராதிகளில் காணலாம் இவ்வாறு பொதுப்பட அமைந்துள்ள சொல்லகராதியே யன்றி, ஏதேனும் ஒரு பொருட்கு அல்லது, ஒரு தொழிற்குரிய சொற்கள், சொற்களின் தோற்றம், ஒரு நாட்டின் பல பகுதிகளிலும் வழங்கும் மொழிபேதங்கள் இவற்றைப் பற்றித் தனித்தனி அகராதிகள் தோன்றுதலும் உண்டு அன்றியும், ஏதேனும் ஒரு நூலில் வந்துள்ள முக்கியமான சொற்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றை அகராதி முறையில் அமைத்து, அவை வந்துள்ள இடங்களையும் சுட்டி, அந்நூலின் பிற்சேர்க்கையாக வேனும் தனிப்படவேனும் வெளியிடுதலும் உண்டு

இவ்வகை முறையில் அமைந்துள்ளதற்கு அருஞ்சொல் அகராதி என்று பெயர் இங்ஙனமன்றி, ஒரு நூலிலுள்ள முக்கிய சொற்களை அல்லது பொருட்கூறு களைத் தொகுத்து அவற்றை அகர வரிசைப்படுத்தி, அவற்றின் கீழ், அவை பயின்றுள்ள தொடர்களையும் இடங்களையும் தருவது பிறிதொருவகை அகராதி இதனை ஆங்கிலத்தில் கங்கார்டன்ஸ் என்பர்

சொற்களைப் பற்றியது சொற் கோவை-அகராதி எனவும், பொருட் கூறுகளைப் பற்றியது பொருட் கோவை-அகராதி எனவும் கூறத்தகும் திருக்குறள் முதலிய தலைசிறந்த நூல்களுக்கு இவ்வகை அகராதிகள் இயற்றல் பெரும் பயன் அளிக்க வல்லது மேற்குறித்த அகராதி வகைகளேயன்றி, கலை முதலிய அறிவுத் துறைகள் பற்றிய சொற்களை முறைப்படுத்தி அருஞ்சொற்களை விளக்குவதும் ஒருவகை அகராதி யாகும் இதனை அறிவுத்துறை அருஞ்சொல் விளக்க அகராதி என்னலாம்

இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்குமுன் அசிரிய மக்கள் அகராதி இயற்றியதாகக் கூறப்படினும் அகராதி வகுக்கும் முறை மேனாட்டிலும் இந்நாட்டிலும் மெதுவாக வளர்ந்து வந்துள்ளது கிரேக்கர்களும் ரோமர்களும் கடின சொற்களுக்கும் அரிய சொற் களுக்கும் அருஞ்சொல் விளக்கங்கள் மட்டுமே இயற்றினர் இதுபோலவேதான் இந்தியாவிலும் வட மொழிச் சொற்களுக்குப் பொருள்விளக்க நூல் இயற்றி வந்தனர் இத்தகைய நூலை நிகண்டு என்று கூறுவர்

இம்முறையே மேனாடுகளில் பதினேழாம் நூற்றாண்டு வரை கையாளப்பட்டு வந்தது அங்கு முதன்முதலாக அகராதி தோன்றியது இத்தாலிய மொழியில் 1612-இல் ஆகும் இம்முறை பின்னர் நன்கு வளர்ந்து இப்போது இந்நாடுகளில் சிறந்த அகராதிகள் இயற்றப்பட் டிருக்கின்றன

அகராக்கு இணையாகப் பயன்படும் நூல்களை உரிச் சொற் பனுவல் என முற்காலத்தில் தமிழில் வழங்கினர் இப்பெயர், இச்சொல் ஒவ்வொரு பொருட்கு உரித்து, இச்சொல் பல பொருட்கு உரித்து என்று உணர்த்து தலால் தோன்றியது தொல்காப்பியரும் சில சொற் களுக்குப் பொருள் விளக்கஞ் செய்துள்ள பகுதியை உரியியல் என்று பெயரிட்டனர் ஆனால், இப்பெயர் காலப் போக்கில் மறைந்துவிட்டது வட மொழிப் பெயராகிய நிகண்டு என்பதே தமிழிலும் நிலைத்துவிட்டது நிகண்டு என்பதற்குத் தொகுதி என்று பொருள் தெய்வப் பெயர்த் தொகுதி, மக்கட் பெயர்த் தொகுதி முதலியனவாகச் சொற்களைத் தொகுதி தொகுதியாகப் பிரித்துக் கூறுதலால் இப் பெயர் தோன்றியது இப் பெயருள்ள ஒரு பகுதி வேதத்தின் அருவகை அங்கங்களுள் நிருத்தத்தில் அடங்கிய தென்பதும் இங்கே அறியத்தக்கது

இந்நிகண்டுகள் கடின பதங்களுக்கு மாத்திரம் பொருள் கூறின. 'வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா' என்பது தொல்காப்பியம் அன்றியும் ஆன்றோராட்சியில் வந்த செஞ்சொற்களை நிரலே கொடுத்து, அவற்றை விளக்குதலும் நிகண்டுகளின் நோக்கமாய் அமைந்தது 'வழக்கெனப்படுவது உயர்ந் தோர் மேற்றே' என்று தொல்காப்பியம் கூறுவது இதனை வலியுறுத்தும் சொற்களை ஆராய்ந்து தேர்ந்தெடுத்து, அவை வழங்கு முறை இவ்வாறு என்பதைத் துணிதலும் இந்நிகண்டுகளின் பிறிதொரு நோக்கம்

நிகண்டுகளின் வழிவழியே வந்ததுதான் அகராதி இப்பெயர் முதன்முதலிற் காணப்படுவது கி பி 1594-இல் இயற்றி முடித்த அகராதி நிகண்டு என்ற நூலின் பெயரிலேயாகும் இதன் ஆசிரியர் சிதம்பர ரேவண சித்தர் என்னும் வீரசைவப் புலவர் இவர் இட்ட பெயரே, இப்பொழுது டிக்ஷனரி என்று ஆங்கிலத்திற் கூறும் நூலுக்குரிய தமிழ்ப் பெயராய் அமைந்து விட்டது

அகராதிமுறை நமக்கு எளிதாகத் தோன்றுகிறது ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக வளர்ந்து வந்திருக்கிற தமிழ்-இலக்கியங்களின் சரித்திரத்தில் இந்த அகராதிமுறை கி பி 16 ஆம் நூற்றாண்டின் இறுதியில்தான் முதன்முதல் புலப்படுகிறது அப்பொழுதும் இம்முறை அரைகுறையாய்த்தான் கையாளப்பட்டது சொற்களின் முதலெழுத்து ஒன்றன் முறையையே ஆசிரியர்கள் நோக்கி வந்தனர். உதாரணமாக, அறிவன், அடியான், அருள், அவன், அஃது, அமர் முதலிய சொற்களை, முதலெழுத்தாகிய அகரம் ஒன்றையே நோக்கி, அவற்றை ஒரு முறையில் அமைத்தனர், இரண்டாவது முதலிய எழுத்துகளைக் கருதினார்களில்லை முதலெழுத்து முறையை அகராதி நிகண்டில் காணலாம் இதனால் அகரத்தில் தொடங்கும் ஒரு சொல்லைக் குறித்த ஓரிடத்தில் கண்டுபிடிப்பது எளிதிற் கூடுவதாயில்லை இரண்டாம் எழுத்தையும் நோக்கிச் சொற்களை முறைப்படுத்திய ஒரு நூல், அதற்குச் சுமார் நூறு ஆண்டுகளின் பின்னர்த் தோன்றியது இதன் பெயர் 'அகராதிமோனைக் ககராதி எதுகை' என்பது இம்முறையிலேயும் ஒரு சொல்லைக் குறிப்பிட்ட ஓரிடத்தில் காணுவதற்கு இயலாமலிருந்தது முதன் முதலில் சொற்களின் எழுத்துகள் அனைத்தையும் நோக்கி அகராதி முறையைக் கையாண்டவர்கள் 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வந்த ஐரோப்பியப் பாதிரிகளேயாவர்

இவர்கள் கையாண்ட முறையில் நமக்கு விளைந்த நன்மைகள் பல முதலாவது, பிற மொழிகளில் செப்பமாக அமைந்துள்ள அகராதி முறையைத் தமிழ் அகராதியிலும் கையாள முடிந்தது இரண்டாவது, பாதிரிமார்களுக்குத் தமிழ் புதிய வேற்று மொழியாகையினாலே, இம்மொழியிலுள்ள எல்லாச் சொற்களுக்கும் இவர்கள் பொருளுணர வேண்டியவர்களாயிருந்தனர் ஆகவே, அருஞ்சொல், எளியசொல்

என்ற வேற்றுமையின்றி, எளிய சொற்களுக்கும் பொருள் விளக்கம் செய்யவேண்டியது அவசியமாயிற்று மூன்றாவது, நூல் வழக்கிலன்றிப் பொதுமக்கள் பல்வேறிடங்களிலும் சிதைத்து வழங்கி வந்த சொற்களும் அகராதியில் இடம் பெற்றன அவர்கள் கல்விபெறாத கீழ்த்தர மக்களோடும் பழகிவந்தார்கள் அம்மக்கள் பேசுவதை உணர்வதும் அவர்கள் வழங்கும் சொற்களை உணர்வதும் அவசியம் எனவே, அவ்வழக்குச் சொற்களும் அகராதியிற் காணுதல் வேண்டும் இவ்வாறாகத் தமிழ் மக்களுள் பல இனத்தவர்களும் வழங்கும் சொற்கள் எல்லாம் அகராதிகளில் அமைவதற்கு இப்பாதிரியார்களே வழிகாட்டியாயிருந்தார்கள்

கி பி 1679-இல் தமிழ்ப் போர்ச்சுகேசிய அகராதியொன்று ப்ரொஇன்ஸா என்ற பாதிரியாரால் இயற்றப் பட்டது; ஆனால், இவ்வகராதி இப்போது மறைந்து விட்டது. இதனை அடுத்துத் தோன்றியது சதுரகராதியாகும் இதுவே தமிழில் முதன்முதற் பிறந்த அகராதி என்று சொல்லலாம் இதனை இயற்றியுவர் தைரியநாத சுவாமி என்றும் வீரமாமுனிவர் என்றும் வழங்கிய பெஸ்கி பாதிரியார் ஆவர் இவர் இத்தாலி நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்து கிறிஸ்துமத போதனை செய்து வாழ்ந்தவர்

சதுரகராதி என்றால் நான்கு வகைப்பட்ட அகராதி நூல் என்று பொருள் நான்கு வகையாவன: 1 பெயரகராதி 2. பொருளகராதி 3. தொகையகராதி 4 தொடையகராதி பெயரகராதியில் ஒரு சொல்லுக்குரிய பலபொருள்கள் கொடுக்கப்பட்டிருக்கும். பொருளகராதியில் ஒரு பொருளுக்குரிய பல பெயர்களும் காணப்படும் தொகையகராதியில் இருசுடர், முக்குணம், நாற் படை என்பன்போல நூல்களில் தொகை தொகையாக வழங்கப்பட்டுள்ளனவற்றிற்கு விளக்கங் காணலாம். தொடையகராதியில் செய்யுட்கு வேண்டும் எதுகைச் சொற்கள் வரிசையாக அமைக்கப்பட்டுள்ளன

அகராதிகள் தோன்றுவதற்குமுன் இருந்த நிகண்டுகள் மனப்பாடஞ் செய்வதற்கு என்று ஏற்பட்டன முற்காலத்தில் அச்சுப்பொறி இல்லாதால் மனப்பாடமே வேண்டப்படுவதாயிற்று சுமார் கி பி 10ஆம் நூற்றாண்டிலிருந்து நிகண்டுகளின் வரலாறு நமக்குத் தெளிவாயுள்ளது தமிழில் முதன்முதல் தோன்றிய நிகண்டு 'திவாகரம்' என்பதாகும் இவ்வகை நிகண்டுகளில் முக்கியமானவற்றிலுள்ள சொற்களை யெல்லாம் திரட்டி சதுரகராதி தந்துள்ளது

இவ்வகராதி இயற்றப்பட்டது கி பி 1732-இல் ஏடுகளில் இது பிரதிகள் செய்யப்பெற்றுத் தமிழ்நாடு முழுவதும் பரவியது ஆங்கிலத்தில் டாக்டர் ஜான்சன் தமது அகராதியை 1755-இல் வெளியிட்டார் இதற்குச் சமார் 25 ஆண்டுகட்கு முன்பாகவே சதுரகராதி தோன்றியதாகும் இந்நூலின் இரண்டாந் தொகுதியான (பொருளகராதி) 1819-ல் அச்சிடப்பட்டது நூல் முழுதும் 1824-இல் ரிச்சர்டு கிளார்க் என்பவரது உத்தரவின்பேரில் தாண்டவராய முதலியார், இராமச்சந்திர கவிராயர் என்ற இரண்டு வித்துவான்களாலும் பரிசோதித்து பதிக்கப்பெற்று வெளியிடப்பட்டது இது கிழக்கிந்தியக் கம்பெனியாரின் நிருவாக சங்கத்திற்கு உரிமையாக்கப் பட்டது

கடைசியிற் குறிப்பிட்ட செய்தியால் பாதிரிமார்கள் செய்துவந்த முயற்சியில் ஆங்கிலேயத் துரைத்தனத் தாரும் கலந்துகொண்டு உதவிபுரிந்தார்கள் என்பது புலனாகும் துரைத்தனத்தாருக்கு வியாபாரத் துறையி லும், அரசியல் துறையிலும், படிப்படியாகத் தமிழ் நாட்டுப் பொதுமக்களோடு பழகிவந்த முறையிலும், தமிழ் ஆங்கிலம் இரண்டையும் ஒருசேரக் கற்றவர்கள் தேவையாயிருந்தனர் ஆகவே, இரண்டு மொழிகளையும் கற்பவர்களுக்குப் பயன்படும்படியாக இருமொழி அகராதி தோன்ற வேண்டியதாயிற்று பெப்ரீஷியஸ், ப்ரெய்ட் ஹௌப்ட் என்ற இரண்டு ஜெர்மன் பாதிரிகள்

தமிழ்-ஆங்கில அகராதி யொன்றை 1779-இல் இயற்றினர் ஒவ்வொரு சொல்லின் கீழும் பல வழக்குத் தொடர்களும் கொடுக்கப்பட்டன 185 பக்கங்களுள்ள ஒரு சிறு நூலாகச் சென்னையில் இது வெளியிடப்பட்டது இது தமிழும் இங்கிலேசுமாயிருக்கிற அகராதி என்று இதன் முதற் பக்கம் குறிப்பிடுகின்றது தமிழ் மொழியை மலபார் மொழி என்று ஐரோப்பியர் வழங்கிவந்தனர் என்றும் இம்முதற் பக்கத்தால் அறிகிறோம்

இவ்வகராதி ஒரு சிறுநூலே யெனினும், தமிழ் நாட்டிலும் யாழ்பாணத்திலும் அகராதி பற்றிய முயற்சிகள் தொடர்ந்து நடைபெறுதற்கு இது தூண்டு கோலாயிருந்தது சுமார் 1833-இல் யாழ்ப்பாணத்து அமெரிக்கன் மிஷன் அதிகாரிகள் தமிழ் அகராதி யொன்றும், தமிழ்-ஆங்கில அகராதியொன்றும், ஆங்கிலத்-தமிழ் அகராதியொன்றும் இயற்ற ஏற்பாடு செய்தனர் திஸ்ஸெரா, பெர்ஸிவல் பாதிரியார் முதலியவர்களின் துணைகொண்டு நைட் பாதிரியார் இவ்வகராதிகளுக்குரிய சொற்களைத் திரட்டி வந்தனர் இங்ஙனம் தொகுத்ததை ஆதாரமாகக் கொண்டு யாழ்ப்பாணத்தில் சந்திரசேகர பண்டிதர் ஒரு தமிழ் அகராதி இயற்றி முடித்தனர் இதற்குச் சென்னை களத்தூர் வேதகிரி முதலியார் ஓர் அனுபந்தமும் சேர்த்தனர் இது ஸ்பால்டிங் பாதிரியாரால் 1842-இல் வெளியிடப்பட்டது யாழ்ப்பாண அகராதி என்றும், மானிப்பாய் அகராதி என்றும் வழங்கியது இதுவே தமிழ் மொழியிலுள்ள எல்லாச் சொற்களையும் அடக்க முயன்ற அகராதிகளில் இதுவே முதலாவது

அமெரிக்கன் மிஷன் அதிகாரிகள் தொடங்கிய மற்றை அகராதிகளும் வெளிவரலாயின ஆங்கில-தமிழ் அகராதி வேலை ஹச்சிங்க்ஸ் பாதிரியரால் மீண்டும் நடைபெற்றது இவ்வகராதியை 1842-இல் வின்ஸ்லோ பதிப்பித்தனர் இதற்குச் சில ஆண்டுகட்கு முன்னர் சுமார் 1830-இல் தமிழ் ஆங்கில அகராதி யொன்று டாக்டர்

ரொட்லர் என்பவரால் இயற்றப்பட்டது இதனைத் திருத்தஞ் செய்வதற்கு இரண்டு தமிழ்ப் பண்டிதர் களையும் ஹக்நெஸ், ராபர்ட்ஸன் என்பவர்களையும் நியமனஞ் செய்தனர் முதற்பகுதி கவர்னர் ஜெனரல் பென்டிங் பிரபுவிற்கு உரிமையாக்கப்பட்டு 1834-இல் வெளிவந்தது ராபர்ட்ஸன் இறந்துபோகவே, டெய்லர் பாதிரியாரும் வேங்கடாசல முதலியாரும் இவ்வகராதி வேலையை மேற்கொண்டனர்

ரொட்லர் அகராதி வெளிவந்த சில காலத்திற்குப் பின்னர்த் தமிழ்-ஆங்கில அகராதிக்காக யாழ்ப்பாணத்து அமெரிக்கன் மிஷன் சார்பில் தொகுக்கப்பட்ட சொற்களை வின்ஸ்லோ சென்னையில் 1862-இல் பதிப்பித்தனர் இப்பதிப்பு வேலையில் பல சிறந்த வித்துவான்கள் பலவாறு உதவி செய்துவந்தனர் இவர்களில் இராமாநுஜ கவிராயர், விசாகப் பெருமாளையர், வீராசாமிச் செட்டியார் முதலிய அறிஞர்களை இங்கே குறிப்பிடல் தகும் இவ்வகராதியில் 67,452 சொற்கள் உள்ளன இருவகை வழக்கிலுமுள்ள சொற்கள் மிகக் கூட்டப்பட்டன; பலவகையான சாஸ்திரச் சொற்கள் விளக்கப்பட்டன; ஆசிரியர்கள், புலவர்கள், வீரமக்கள், தெய்வங்கள் முதலியோர்களின் பெயர்களும் இதில் சேர்க்கப்பட்டன

மேற்குறித்த அகராதிகளேயன்றித் தமிழ்-லத்தீன் அகராதிகளும் தோன்றின பெஸ்கி சுமார் 1742-இல் இவ்வகை அகராதியொன்றும் 1744-இல் தமிழ்-பிரெஞ்சு அகராதி ஒன்றும் போர்ச்சுகேசிய-லத்தின்-தமிழ் அகராதி ஒன்றும் இயற்றி முடித்தனர் பெஸ்கி, ரொட்லர், வின்ஸ்லோ என்ற மூவர் இயற்றியவைகளைப் பயன்படுத்தி ஆர் பி குரி என்ற பாதிரியார் ஒரு தமிழ் லத்தீன் அகராதி இயற்றி நாகப்பட்டிணத்திலிருந்து 1867-இல் வெளியிட்டனர் இவ்வாறே, தமிழ்-பிரெஞ்சு அகராதிகள் வேறு சிலவும் வெளி வந்துள்ளன. •

வின்ஸ்லோவின் தமிழ்-ஆங்கில அகராதி மிகவும் பெரிய நூல், எல்லோருக்கும் எளிதில் கிடைக்கக் கூடியதன்று பொதுமக்களது தேவைக்கு வேறோர் அகராதி வேண்டப்படுவதாயிற்று இத்தேவையை நிரப்ப, 1897-இல் தரங்கம்பாடி அகராதி தோன்றியது இது பெப்ரீஷியஸ் அகராதியை ஆதாரமாகக் கொண்டது ஒரு முக்கியமான முறையையும் இது கையாண்டது டாக்டர் க்ரால் என்பவர் தமிழில் முக்காலத்தும் வரும் வினைவிகற்பங்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்து வினையடிகளை 13 வகையாகக் கணக்கிட்டிருந்தனர் இவ் வகையை இவ்வகராதி மேற்கொண்டு ஒவ்வொரு வினையடியையும் அது எவ்வகையைச் சார்ந்தது எனக் குறிப்பிட்டுச் சென்றது இதனால் வினைவிகற்பங்களை யெல்லாம் அகராதியில் கொடுக்கவேண்டிய அவசிய மில்லாமற் போயிற்று இங்ஙனமாக இருமொழி அகராதிகள் பல படியாய்த் திருத்தமடைந்து வரலாயின

ஆனால், ஒருமொழி அகராதி விருத்தியடையாது ஒரு நிலையிலேயே வெகுகாலம் நின்றுவிட்டது யாழ்ப்பாண அகராதியொன்றுதான் பயன்பட்டு வந்தது யாழ்ப்பாணத்தில் நீதிபதியாயிருந்த கதிர்வேற் பிள்ளை ஒரு சிறந்த பேரகராதி வெளியிட பெரும் முயற்சிகளைச் செய்தனர் இவ்வகராதியில் ஒரு பகுதியை இவர் எழுதி முடித்தனர் இவ்வகராதி முழுவதையும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் முற்றுவித்து வெளியிட்டனர் இக் காரணத் தால் தமிழ்ச்சங்க அகராதி என இதனை வழங்குவர்

இத் தமிழ் அகராதி ஒருபுற மிருக்க, தமிழ்-ஆங்கில அகராதி பலவகையில் செப்பமடைய இடமிருந்தது முதலாவது, சங்க இலக்கியம் முதலிய ஆதார நூல்கள் பல வின்ஸ்லோவிற்குப் பின்னரே, அச்சில் வெளி வந்துள்ளன இவற்றை நன்கு பயன்படுத்துவது அவசியமாயிற்று இரண்டாவது, சொற்களுக்குப் பொருள் எழுதுவதில் வின்ஸ்லோ முதலியோர்

அகராதிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நயம் இருந்தது இந்நயங்கள் அனைத்தையும் ஒருங்கே கொணர்ந்து அவற்றை இன்னும் ஒழுங்காக விருத்தி செய்வதும் வேண்டியதாயிருந்தது மூன்றாவது, சொற்பொருள்களை அமைப்பதில் சில நெறிகளைக் கையாளுவதும் அவசியமாயிற்று

தமிழ்-அகராதி நூல்கள் பலவும், பொருள் களையும்கூட, அகராதிக் கிரமத்தில் அமைத்தன இது தவறாகும் வரலாற்று முறையிலும், இயலாத இடங்களில் கருத்து வளர்ந்து சென்ற முறையிலும் இவற்றை அமைக்க வேண்டியது இன்றியமையாததாகும் நான்காவது சொல்லுக்குப் பொருளாகப் பரியாயச் சொற்களைக் கொடுப்பது போதாது சொல்லுக்குரிய பொருளின் இலக்கணத்தை யும் வரையறை செய்யவேண்டும் இவ்வாறு செய்யும் வழக்கம் தமிழ் அகராதிகளில் பெரும்பாலும் இல்லாம லிருந்தது, பரியாயச் சொல்லைக் கூறுவதே போதியதெனக் கருதப்பட்டது

தமிழ்-ஆங்கில அகராதிகளில் கொடுக்கப்பட்டுள்ள இலக்கணங்களும் ஒவ்வொரு வகையில் பிழைபாடு உடையனவாயிருந்தன இக்குறை களெல்லாம் நீங்க வேண்டுவது அவசிய மாயிற்று ஐந்தாவது சொல்லின் பிறப்பைக் குறித்து அகராதி யாளர்கள் பெரும்பாலும் கருத்துச் செலுத்தியதே யில்லை சில தமிழ்ச் சொற்களுக்கு வடமொழி மூலங்கள் தரப்பட்டிருந்தன பிற திராவிட மொழிகளிலிருந்து பிறப்பொத்த சொற்கள் காட்டப் பெறவில்லை ஆறா வது, மேற்கோள் காட்டு வதில் தகுதியான முறைகள் கையாளப் பெறவில்லை தக்க முறைகளை அடிப்படை யாகக் கொண்டு மேற்கொள் கொடுப்பது அவசியமாயிருந்தது

மேற்குறித்த அம்சங்களிற் பெரும்பாலுங்கொண்டு திருத்த மெய்தியது சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள தமிழ்-லெக்ஸிகன் ஆகும் இதுவும் அரசினர் ஆதரவில் சாண்ட்லர் என்ற அமெரிக்கன்

மிஷன் பாதிரியாரால் தொடக்கப்பெற்று, தமிழ் வித்துவான்களின் உதவி கொண்டு, ஆங்கிலமும் தமிழுங் கற்ற ஆசிரியர்களால் முற்றுப்பெற்றது இதிலும் பல குறைகள் உள்ளன அகராதி வேலை மேலும் மேலும் நடைபெற்றுக்கொண்டே செல்லவேண்டியது என்பதை மறக்கலாகாது

மொழியின் வளர்ச்சி நமது வாழ்க்கையின் வளர்ச்சியைப் பொறுத்தது இம்மொழி வளர்ச்சிக்குச் சொல்லின் வளர்ச்சி ஒரு சிறந்த அறிகுறியாயுள்ளது நமது வாழ்க்கை வளமுறுவதானால், சொற்கள் பெருகிக் கொண்டுதான் செல்லும் அகராதி வேலைக்கு எல்லையே இல்லை குறைபாடுகளைத் திருத்துவதும் சொற்களின் பிறப்பு வரலாற்றை மொழிநூல் முறையில் உணர்த்தி ஜாதகம் கணிப்பதுபோல் விவரங்கள் தருவதும், சொல்லின் வடிவங்களையும் பொருள் களையும் காலக்கிரமத்தில், இன்ன வடிவம் பெற்றது, இன்ன சொல் இன்ன காலத்தில் இன்ன பொருள் பெற்றது என்பன முதலிய விவரங்களை நூல்களின் ஆதாரங்கொண்டு தெளித்து உணர்த்துவதும், புதுச்சொற்களைச் சேர்ப்பதும் கலைக் குறியீட்டு மொழி அகராதிகளையும், கொடுந்தமிழ், திசைச் சொல் பற்றிய அகராதிகளையும் சொற்பிறப்பு அகராதிகளையும் இயற்றுவதும் தமிழ் மொழி வளர்ச்சிக்கு இன்றி யமையாத பெருஞ் செயல்களாகும் சுருங்கச்சொல்லின், ஆங்கிலத்திலுள்ள நூதன ஆங்கிலப் பேரகராதியின் முறைகளை முற்றும் தழுவி, ஒரு தமிழ்ப் பேரகராதி இயற்றுதல் தமிழ் அறிஞர்களது கடமையாகும்

**தமிழ் லெக்சிக்கன்:**

தமிழில் அகராதி என்று சொல்வதை ஆங்கிலத்தில் டிக்ஷனரி அல்லது லெக்சிக்கன் என்று கூறுவர் இவ்விரண்டு ஆங்கிலச் சொற்களும் ஒரே பொரு ளுடையன

தமிழில் அகராதி என்னும் சொல் முதன்முதல் காணப்பட்டது 1594-இல் சிதம்பர ரேவண சித்தர் என்பவர் அகராதி நிகண்டு என்ற நூலை இயற்றிய போதே ஆயினும் இப்போது வழங்கும் முறையில் அகராதியை முதன்முதல் வழங்கியவர் பெஸ்கி என்னும் பாதிரியார் அவர் 1732-இல் இயற்றிய சதுரகராதியே தமிழில் முதன்முதல் பிறந்த அகராதி என்று கூறலாம்

இதன்பின்னர்த் தமிழ்நாட்டிலும் யாழ்ப்பாணத்தி லும் அகராதி பற்றிய முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்று வந்தன இம்முயற்சிகளுள் மிகச் சிறப்பாக வுள்ளது வின்ஸ்லோ என்னும் பாதிரியார் 1862-இல் பதிப்பித்த தமிழ் ஆங்கில அகராதியாகும் அது மிகவும் பெரிய நூல் 67,452 சொற்கள் உடையது

நாளடைவில் வின்ஸ்லோவின் அகராதி எளிதில் கிடைக்கக் கூடியதாக இருக்கவில்லை அதனுடன் அதைப் பலவகையில் செப்பமடையச் செய்ய இடமிருந்தது. ஆகவே 1905-இல் சர் பிரடரிக் நிக்கல்சன், ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் தமிழாசிரியரா யிருந்த டாக்டர் ஜீ யூ போப்பையர் சேகரித்துள்ள சொற்களையும் சேர்த்து, வின்ஸ்லோவின் அகராதியைப் புதுப்பித்துச் சென்னைப் பல்கலைகழகத்தின் வெளியீடாக வெளிவரவேண்டும் என்று சென்னை அரசாங்கத்துக்குச் சிபாரிசு செய்தார்

டாக்டர் போப்பையரே அதைத் தயாரித்து இங்கிலாந்தில் அச்சிடுவதென்று முதலில் எண்ணினர் அது நடைபெறவில்லை போப்பையர் 1907-இல் இறந்தபின் அவர் தயாரித்த கையெழுத்துப் பிரதிகள் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தன அதைப் பயன்படுத்தி ஒரு நல்ல தமிழ் லெக்சிக்கன் தயாரிக்க வேண்டும் என்று சாண்ட்லர் பாதிரியார் சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார்

சென்னை அரசாங்கம் இந்த யோசனையை ஏற்றுக் கொண்டது இறுதியில் தில்லியை ஆண்ட ஆங்கில

அரசில் இடம்பெற்ற மந்திரி சம்மதித்து இலட்ச ரூபாய் மானியம் அளித்தார் முதலில் சங்கங்கள் இருந்த தொல் பதியாகிய மதுரையில் 1913-இல் வேலை தொடங்கியது பின்னர்ச் சில வசதிகளை முன்னிட்டு 1915 முதல் அவ் வேலை சென்னையில் நடைபெறலாயிற்று சாண்ட்லர் பாதிரியார் தமிழ் லெக்சிக்கனுக்குப் பதிப்பாசிரியராக இருந்தார் இவ்விதமாகச் செய்வதென்று திட்டமிட்டுச் சொற்கள் சேகரித்தார், 1916 இறுதிக்குள் ஏறக்குறைய 80 ஆயிரம் சொற்கள் சேகரிக்கப்பெற்றன

1918ஆம் ஆண்டில் தமிழ் லெக்சிக்கன் தயாரிக்கும் பொறுப்பு முழுவதும் சென்னைப் பல்கலைக்கழகத்திடம் ஒப்புவிக்கப்பட்டது லெக்சிக்கன் பதிப்புரிமையும் பல்கலைக்கழகத்துக்கே தரப்பட்டது

1919-இல் சாண்ட்லர் விலகவே, எஸ் அனவரதவிநாயகம் பிள்ளை தமிழ் லெக்சிக்கனுக்குப் பதி ப்பாசிரியரானார்; 1924 முதல் 1926 வரை சீ. பி வெங்கட்டராமய்யர் பதிப்பாசிரியராக இருந்தார் 1926ஆம் ஆண்டு முதல் லெக்சிக்கன் வேலை முடியும் வரை எஸ் வையாபுரிப் பிள்ளை பதிப்பாசிரியராக இருந்தார்

தமிழ் லெக்சிக்கன் ஆறு தொகுதிகளாக வெளியிடப்பட்டன முதல் தொகுதி வெளியிடத் தொடங்கிய காலம் 8-10-1924 ஆறாம் தொகுதி முடிந்து வெளியிடப்பட்ட காலம் 20-3-1936 ஆறு தொகுதி களிலுமுள்ள சொற்களின் தொகை 1,044,05

1938-1939-இல் லெக்சிக்கனுக்கு அனுபந்தத்தொகுதி வெளியிடப்பட்டது அதில் உள்ள சொற்களின் தொகை 13,357

**நிகண்டு:**

நிகண்டு என்பது இலக்கணம் போன்றதொரு கருவிநூல் நிகண்டு என்னும் சொல்லுக்குக் கூட்டம்

அல்லது தொகுதி என்பது பொருள் உயர்திணை, அஃறிணை பற்றிய பல்வேறு பெயர்களையும், வினைபற்றிய பெயர்களையும் பாகுபாடு செய்து, அவற்றைத் தொகுத்துக் கூறுதலோடு, அச்சொற்கள் குறிக்கும் பொருள்களையும் வரையறுத்து உணர்த்துவது நிகண்டு நூல்களின் பொது இயல்பு. எனவே, மொழிப் பயிற்சிக்கு இன்றியமையாத கருவிநூல்களாக இந்நிகண்டுகள் அமைந்துள்ளமை தெளிவு

முதன்முதலில் நிகண்டு என்பது வடமொழியில் வேதத்திற்கு அங்கமாய், வைதிகச் சொற்களின் பொருள்களை உணர்த்தும் கருவிநூலுக்குமட்டும் சிறப்பாக வழங்கப்பட்டது பின்னர், நாளடைவில் சொற்பொருள் உணர்த்தும் நூல்களுக்கு எல்லாம் இப்பெயர் வழங்கத் தலைப்படலாயிற்று

தமிழில் நிகண்டு நூலை உரிச்சொல் என்றும், உரிச்சொல் பனுவல் என்றும் வழங்கும் வழக்கு முன்னர் இருந்தது 'பிங்கலம் முதலாம் நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே' என நன்னூலில் 'உரிச்சொல்' என்ற பெயரைப் பவணந்தி முனிவர் ஆண்டுள்ளார் நன்னூலின் பழைய உரையாசிரி யராகிய மயிலைநாதர் இச்சூத்திரத்தின் உரையில், 'பிங்கலம் முதலான உரிச் சொற் பனுவல்' என்ற பெயர் வழக்கம் தெரியவருகிறது கயாதரர் என்பவர் இயற்றிய 'கயாதரம்' என்னும் நிகண்டு நூலுள், 'ஓங்கு இடப கேதனன் பற்று மறவாத தேவைக் கயாதரன் தொல்வேதியன் செய்த உரிச்சொற் பனுவலும் மேம்படுமே.' (2) 'தண்டமிழோர், விரும்பிய கோவை உரிச்சொற் பனுவல் விரித்துரைத்தான் பெரும் பொருள் கண்ட கயாதரன் தேவைப் பெருந்தகையே' (566) என்றும் வரும் இடங்களில் இவ்வழக்கினைக் காணலாம் இந்தத் தமிழ்ப் பெயர் யாது காரணத்தாலோ பெருக வழங்காது, நாளடைவில் மறைந்து போயிற்று. இதற்குப் பிரதியாக 'நிகண்டு' என்னும் வடமொழிப் பெயர் தமிழாகி, தமிழுலகில் பெருக வழங்கி நிலைபெற்றுவிட்டது காங்கேயர் செயத் நூலாகிய

உரிச்சொல் நிகண்டு என்ற நூற்பெயரில் இந்த இரண்டு பெயர் வடிவங்களையும் காணலாம்.

கால அடைவில் நோக்குமிடத்துச் சொற்பொருள் உணர்த்தும் மரபைத் தோற்றுவித்தவர் ஆசிரியர் தொல்காப்பியனாரேயாவர் என்று தெரியவருகிறது. இவர் இயற்றிய பெருநூலாகிய தொல்காப்பியத்தின் சொல்லதிகாரத்திலே உரிச்சொல்லியலில் உரிச்சொற்கள் பலவற்றின் பொருளை விளக்கி உரைத்துள்ளார். உரிச்சொல்லியலிற் போலவே, பொருளதிகாரத்தின் இறுதியில் அமைந்த மரபியலிலும், விலங்கு, பறவை முதலியவற்றின் இளமைப் பெயர், ஆண்பாற் பெயர், பெண்பாற் பெயர் முதலிய மரபுப் பெயர்களைக் கூறியுள்ள பகுதியும் சொற்பொருள் உணர்த்தும் நிகண்டுகளின் தோற்றத்திற்கு வித்தாய் அமைந்த தொன்றாகும். இங்ஙனமாகத் தொல்காப்பியர்தாம் சொற்பொருள் உணர்த்தும் முறைக்கு முதல் வழிகாட்டியாகின்றார். தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர்தான் நிகண்டு நூல்கள் தமிழ் மொழியில் தோன்றலாயின.

இப்பொழுதுள்ள நிகண்டு நூல்களில் பழமை யானவை திவாகரம், பிங்கலம் என்ற இரண்டுமே. இவை இடைக்கால நூல்கள். இவற்றுள் திவாகரம் கி. பி. 8ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகலாம் எனச் சிலர் கருதுகின்றனர். வேறு சிலர் மேற்குறித்தன இரண்டும் கி. பி. சுமார் 11ஆம் நூற்றாண்டளவில் தோன்றியனவாக லாம். என்பர். இவற்றிற்கு முன் நிகண்டு நூல்கள் தோன்றி வழங்கி வந்தனவா என்று திட்டவட்டமாகக் கூறுதற்கு உரிய சான்று யாதொன்றும் புலப்படவில்லை.

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய நற்றிணையின் 382ஆம் பாடலைப் பாடியவர் 'நிகண்டன் கலைக் கோட்டுத் தண்டனார்' என்று குறிப்பிடுகிறார். இறையனாரகப்பொருள் உரை யாசிரியரும், நன்னூலின் பழைய உரையாசிரியராகிய

மயிலை நாதரும் இடுகுறி யாற் பெயர்பெற்ற நூலுக்கு உதாரணம்மாக 'நிகண்டு, கலைக்கோட்டுத் தண்டு' என்பவற்றைக்காட்டியுள்ளார். இந்த இரு குறிப்புக் களையும் இணைத்துப் பார்க்கும் பொழுது, கலைக் கோட்டுத் தண்டனார் என்பவரால் இயற்றப்பெற்ற நிகண்டு ஒன்று வழங்கியதாதல் வேண்டும் என்று ஊகிக்கலாம் இந்நூலைப்பற்றி வேறு எவ்வகையான செய்தியும் தெரியக்கூடவில்லை

பழைய நிகண்டு நூலாகிய திவாகரம் பன்னிரண்டு தொகுதியாகப் பிரிக்கப்பட்டுச் சூத்திரயாப்பில் அமைந்துள்ளது திவாகரரது சூத்திர அமைப்புத் தொல்காப்பியரது முறையைப் பின்பற்றியதாகும் தொல்காப்பியச் சூத்திரங்கள் சிலவற்றையும் இவர் தம் நூலுள் அமைத்துக்கொண்டுள்ளனர் இவரது அமைப்பு முறைதான் பிற்கால நிகண்டுகளுக்கு எல்லாம் மூல அளவையாய் அமைந்து நிற்கின்றது

திவாகரர் தமது நூலைத் தெய்வப் பெயர், மக்கட் பெயர், விலங்குப் பெயர், மரப்பெயர், இடப்பெயர், பல்பொருட் பெயர், செயற்கை வடிவப் பெயர், பண்புப் பெயர், செயல் பற்றிய பெயர், ஒலிபற்றிய பெயர், ஒருசொல் பல்பொருட் பெயர், பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர், எனப் பன்னிரண்டு வகையாகப் பகுத்துச் சொற்களைத் தொகுத்துள்ளனர்

தெய்வப் பெயரில் சிவன், திருமால் முதலிய தெய்வப் பெயர்களோடு நாள் கோள்களின் பெயர், காலப்பெயர், பருவப் பெயர், மழை, மேகம் முதலியவற்றின் பெயர்களையும் தந்துள்ளனர் மக்கட் பெயர்த் தொகுதியில் மக்களின் உறுப்புக்களுக்கு உரிய பெயர்களையும் தொகுத்துள்ளார் விலங்குப் பெயரில் மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, இவற்றின் உறுப்புப்பெயர் ஆகியனவும், மரப் பெயர்த் தொகுதியில் மரம், செடி, கொடி, பூ, காய், கனி, தானியவகை முதலியனவும் இடம்பெற்றுள்ளன இடப்பெயர்த்

தொகுதி என்பது உலகம், நாடு, ஊர், மனை, மலை, ஆறு, நீர்நிலை முதலியவற்றின் பெயர்களைக் கொண்ட தொகுதி. பல்பொருட் பெயர்த் தொகுதியில் பொன், மணி, விரைப் பொருள், உணவுவகை முதலியன கூறப்பெற்றுள்ளன. செயற்கை வடிவப் பெயரில் ஆயுதங்கள், ஆபரண வகை, உடைவகை, ஊர்திவகை, விளையாட்டுக் கருவிகள் முதலியவற்றின் பெயர்களைக் காணலாம். பண்பு பற்றிய பெயர்த் தொகுதியில் காட்சிப்பொருள், உணர்விற்குப் புலப்படும் உண்மைப் பொருள் இவற்றின் குணத்தொடர்புபற்றிய பெயர்கள் சேர்ந்துள்ளன.

செயல் பற்றிய பெயர்த்தொகுதியில் வினைப் பெயர்கள் பலவும் இடம்பெற்றுள்ளன. ஒலி பற்றிய பெயர்த்தொகுதியில் சொல்வகை, பாவகை, யாழ்வகை, இசைவகை முதலியன பற்றிய பெயர்களைக் காணலாம். ஒருசொல் பல்பொருட் பெயர்த் தொகுதியாகிய பதினோராந் தொகுதியில் ஒரு சொல்லுக்கு உரிய பொருள்கள் எல்லாம் விரித்து உரைக்கப்பட்டுள்ளன. இறுதித் தொகுதியாகிய பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதியில் இருசுடர், முக்குணம் என்றாற் போன்று எண்ணால் வரும் தொகைப்பொருள்களின் விளக்கத்தைக் காணலாம்.

திவாகர் பாகுபடுத்து அமைந்த அமைப்பு முறையை அடியொற்றியே, 'பிங்கல நிகண்டு', 'சூடாமணி நிகண்டு' 'உரிச்சொல் நிகண்டு' முதலிய பிற நூல்களும் அமைந்துள்ளன. சூடாமணி நிகண்டு முதலிய சில நிகண்டுகளில் சில தொகுதிப்பெயர்களை ஒன்றுடன் ஒன்று இணைத்து வகைப்படுத்தியபோதிலும் பொது அமைப்பில் திவாகரர் வகுத்த முறையில் மாறுதல் இல்லை. கயாதர நிகண்டில், 'தெய்வப் பெயரியல்', 'மக்கட் பெயரியல்' என்று இவ்வாறு 'தொகுதி' என்பதற்குப்'பெயரியல்' என்று பெயர் சூட்டியுள்ளனர். மிகப் பிற்பட்ட காலத்தில் தோன்றிய 'நாமதீப நிகண்டு'

இத்தொகுதிகளை 'வர்க்கம்' என்ற பெயரால் அழைக்கின்றது மற்றும் இவர் அமைத்துள்ள முறை பழைய முறையைத் தெளிவாகக் கூறுபடுத்தி விளக்குவதாகவும் உள்ளது

நாமதீபநிகண்டு நூலை இயற்றிய கல்லிடைக்குறிச்சி சிவசுப்பிரமணியக் கவிராயர் தமது நூலை உயர்திணைப் படலம், அஃறிணை உயிர்ப்பொருட்படலம், அஃறிணை உயிரில் பொருட்படலம், குணநாமப்படலம் என நான்கு படலமாகக் கொண்டு, அவற்றின் உட்பிரிவுகளை 'வர்க்கம்' என்ற பெயரால் வழங்கியுள்ளனர் உதாரணமாக, அஃறிணை உயிர்ப்பொருள் வர்க்கம் ஊருயிர்ப் பொருள் வர்க்கம், நீர்வாழ் உயிர்ப்பொருள் வர்க்கம், தாவர உயிர்ப்பொருள் வர்க்கம், என ஐந்து வர்க்கங்களாகக் கையிண்டனர் இவை பழைய நிகண்டுகளில் விலங்குப்பெயர்த் தொகுதி, மரப்பெயர்த் தொகுதி என்ற இரண்டில் அடங்கும் இங்ஙனம் படலமாகவும் வர்க்கமாகவும் பெயர்களை அமைத்துள்ள இவரது அமைப்பு, பழைய நிகண்டுகளின் பொருளமைப்பை விடத் தெளிவான முறையை மேற்கொண்டது என்று கருதலாம்

பன்னிரு தொகுதியாக அமைந்த பெயர்களை முக்கியமாக மூன்று தொகுதிகளில் அடக்கிவிடலாம் ஒன்று ஒருபொருட்பல்பெயர்த் தொகுதி பல பெயர்களையும் ஒருகுறித்த நெறிமுறையில் அமைத்துக் கூறுவது இதன் இயல்பு திவாகரத்துள் அமைந்துள்ள முதல் பத்துத் தொகுதிகளும் இவ்வகையினவாகும் இரண்டாவது ஒருசொல் பல்பொருட் பெயர்த்தொகுதி இது ஒவ்வொரு சொல்லுக்கும் உரிய பல பொருள்களையும் தொகுத்து உரைப்பது திவாகரர் அமைத்த பதினோராந் தொகுதி இது பற்றியது மூன்றாவது பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி இது இருவினை, முத்தீ என்றாற் போன்ற தொகைப் பெயர்களை விளக்குவது இதனைத் திவாகரத்தின் 12ஆம் தொகுதியில் காணலாம் இம்மூன்று வகையான பெயர்த்

தொகுதிகளையும் திவாகரத்தைப்போலப் பெற்றுப் பூரண நிகண்டாக உள்ளன பல தவிர, இம்மூன்றனையும் தனித் தனியாக மேற்கொண்டு பிறந்த நிகண்டுகளும் உள்ளன இவற்றிற்கு உதாரணமாக முறையே 'நாமதீப நிகண்டு', 'அரும்பொருள் விளக்க நிகண்டு', 'தொகை நிகண்டு' என்பனவற்றைக் கூறலாம்

இம்மூன்று வகைகளிலும் ஒருசொல் பல்பொருட் பெயர்த் தொகுதியாகிய பதினோராந் தொகுதிதான் சொற்பொருள் உணர்வுக்கு மிகவும் வேண்டப்படுவது எனவே, சொற்பொருளை விரைவில் கவனத்தில் கொண்டுவரும் வகையில் இத் தொகுதியைச் செப்பஞ் செய்வதில், இதனை விளக்கி வெவ்வேறு அமைப்பில் தனி நிகண்டுகள் யாப்பதிலும் பற்பலர் முயன்றுள்ளனர்

முதலில் பதினோராந் தொகுதியைச் செப்பஞ் செய்யப் புகுந்தவர்களின் முயற்சியை நோக்குவோம் எதுகை நயம்படத் திவாகரர் சூத்திரம் செய்த முறையைக் கைவிட்டு, 11ஆம் தொகுதியை ஆதியிற் பொருள், அந்தத்துப்பொருள் என்று இருவகைப்படுத்தி, ஒவ்வொரு பகுதியிலுமுள்ள சூத்திரங்களை அகராதி வரிசையில் அமைத்துக் கற்க முயன்றனர் இம்முறையைத் திவாகரத்தைப் பதிப்பித்தவர்களும் மேற்கொண்டிருக் கிறார்கள் பொருள் விளக்க எடுத்துக்கொண்ட சொல் ஒரு சூத்திரத்தின் ஆதியில் வருமாயின், அது ஆதியிற் பொருள் எனப்படும்

'அங்கதந் தோணி அரவு மாகும்'

'வேளாண்மை உபகாரம் ஈகையும் விளம்பும்'

என்ற சூத்திரங்களில் பொருள் விளக்க எடுத்துக் கொண்ட 'அங்கதம்', 'வேளாண்மை' என்ற சொற்கள் சூத்திர முதலில் அமைந்திருத்தல் காணலாம் இங்ஙனமே, பொருள் கூற மேற்கொண்ட சொல் இறுதியில் அமைத்தால், அது அந்தத்துப்பொருள் எனப்படும்

'ஆடவர் மயிரும் முசுவும் ஓரி'

'காடும் கூடும் கட்சியாகும்'

என்பவை அந்தத்துப் பொருள் பற்றியவை இங்ஙனமே பிங்கல நிகண்டை அச்சியற்றிய சிவன் பிள்ளை என்பாரும் ஒருசொல் பல்பொருட் பெயர்த் தொகுதியில், பிங்கலர் வகுத்த முறையைத் தவிர்த்துச் சொற்களை அகராதிக் கிரமத்தில் நிறுத்தி, அவற்றிற்கு உரிய சூத்திரங்களையும் அம்முறையிலேயே முறைப் படுத்தியுள்ளனர் இவையெல்லாம் அகராதி போன்று எளிதில் நிகண்டைப் பயன்படுத்தச் செய்த முயற்சிகள்

மேற்குறித்த இரண்டு நூல்களிலும் செய்த மாற்றங்கள் பிற்காலப் பதிப்பாசிரியர்களால் மேற்கொள்ளப்பட்டவை அவற்றின் ஆசிரியர்களோ எதுகை நயத்தால் சொற்பொருளையே நினைவூட்ட முயன்றனர் எதுகை முறையில் ககர எதுகை, சகர எதுகை, முதலியனவாகப் பாகுபாடு செய்து, இம்முறையில் சொற்களை எளிதில் காண முயன்றவர் சூடாமணி நிகண்டு இயற்றிய மண்டலபுருடர் இவர் அமைத்த வகையில் ஓர் எதுகையில் பிற எதுகைச் சொல் விரவிவருதலும், செய்யுளுக்காக வேண்டாத அடை மொழிகளைப் புணர்த்தலும் ஆகிய குறைபாடுகள் உள்ளன ஒரு செய்யுளுக்கும் வருஞ் செய்யுளுக்கும் ஓர் இயைபு இன்றியும் அமைந்துள்ளது எனவே, இந்நிகண்டினைக் கற்றோர் கலப்பு எதுகைச் செய்யுட் களைத் தனிப்படப் பிரித்தும், பிறவற்றை ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் எனப் பாகுபடுத்தியும் உள்ள முறை சிற்சில பிரதிகளில் உள்ளன

சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த வேதகிரியார் என்பவர், சூடாமணியிற் கூறப்பெறாத ஒருசொல் பல்பொருட் பெயர்களையெல்லாம் தொகுத்து, இந்நிகண்டில் 11ஆம் தொகுதியிலுள்ள 310 செய்யுட்களோடு இடையிடையே எதுகை முறை பற்றிப்

பல புதுச் செய்யுட்களையும் பாடிச் சேர்த்து, 600 செய்யுட்கள் கொண்ட தனி நூலாக உரையுடன் செப்பஞ் செய்தனர் இது வேதகிரியார் சூடாமணி என வழங்கும்

சூடாமணி நிகண்டைப் போலவே, பன்னிரு தொகுதியும் உடைய நூல்களைச் செய்து, 11ஆம் தொகுதியில் பலவகையான முற்போக்கு முறைகளைப் பலர் கையாள முயன்றனர் இவ்வகையில் எழுந்த நிகண்டுகளில் முதலில் கூறத்தக்கது உரிச்சொல் நிகண்டு இது சிறு நூலாய் வெண்பா யாப்பில் உள்ளது இதில் பல் பொருட் சொற்கள் வெண்பாவில் அமைதற்குத் தக்கபடி கொள்ளப்பட்டுள்ளதே தவிர, வேறு சிறப்பாகச் சொல்லத்தக்க இயல்பு எதுவும் இல்லை கயாதர நிகண்டு கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அந்தாதியாக அமைந்துள்ளது இதனால் இது சூடாமணியினும் சிறந்த அமைப்புடையது என்று கொள்ளலாம் இதன் பின்னர்த் தோன்றிய பாரதி தீபம் கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அமைந்ததாயினும், அடைமொழியின்றிப் பெயர்களை அமைத்தும் பொருட்பெயர்களை மிகுதி யாகத் திரட்டித் தொகுத்தும் செம்மையுற அமைந் துள்ளது ஆண்டிப்புலவர் இயற்றிய ஆசிரிய நிகண்டு அடிமிக்க ஆசிரிய விருத்தத்தால் அமைந்து, பொருட் பெயர்களையும் மிகுதியாகக் கொண்டு, எளிய நடையில் அமைந்துள்ளது பதினோராந் தொகுதியில் சொற் பொருள்களை எண்ணால் வரையறுத்து உணர்த்தி யிருத்தல் இதன் தனிச் சிறப்பாகும்

இவ்வாறு அமைந்த எதுகை முறை முதலியவற்றால் சொற்பொருளை எளிதில் கண்டு பயன்படுத்த இயலாது என்று கருதி, நிகண்டுகளில் பின்னர் அகராதி முறையை மேற்கொள்ளலாயினர் இவ்வகையில் எழுந்த முதல் நூல் புலியூர்ச் சிதம்பர ரேவண சித்தர் இயற்றிய அகராதி நிகண்டு அகராதி என்ற பெயரைத் தமிழுலகுக்கு அறிமுகப்படுத்திய பெருமை இவரையே சாரும் பெயருக்கு ஏற்ப இது அகராதியாகவே அமைந்துள்ளது இதில் முதல் எழுத்து மட்டும் அகராதியில் உள்ளதே

தவிர இரண்டாம் எழுத்து முதலியன கவனிக்கப் படவில்லை அம்முதல் ஒரு பெயர், அம் முதல் இரு பெயர் என்று இவ்வாறு இந்நூற் சூத்திரங்கள் அமைந்துள்ளன

பிங்கலந்தை முறையைப் பெரிதும் தழுவிச் செய்யப் பெற்ற கைலாச நிகண்டு என்பதின் பதினோராந் தொகுதியில் ஒரெழுத் தொருமொழி, ஒரெழுத் தொற்றொரு மொழி, ஈரெழுத்தொருமொழி, மூவெழுத்தொருமொழி, மூவெழுத்தொற்றொருமொழி, நாலெழுத்தொற்றொரு மொழி என்று ஏழு பகுப்பு உடையதாக உள்ளது ஒரெழுத் தொற்றொரு மொழியில் மட்டும் அகராதி முறை காண்கிறது இதன் பின்னர் மிகவும் எளிதான முறையைப் பின்பற்றிப் பல் பொருட் சூடாமணி என்ற நிகண்டு அகராதி தோன்றியுள்ளது இதனை இயற்றிய ஈசுர பாரதியார் அமரகோசம் என்னும் வடநூலைப் பின்பற்றி இதனைச் செய்துள்ளார் தமது நூலை மூன்று காண்டங்களாகப் பகுத்து, முதற் காண்டத்தை ஒரு சொல் ஒரு பெயர்த் தொகுதியாகவும், இரண்டாம் காண்டத்தை ஒரு சொல் பல் பொருட் பெயர்த் தொகுதியாகவும், மூன்றாம் காண்டத்தைப் பல் பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதியாகவும் அமைத்துள்ளனர்

இதன் பின்னர், வீரமாமுனிவரின் சதுரகராதி இயற்றப்பெற்றது இது நிகண்டுகள் தரும் சொற் பொருளை அகராதி முறையில் தொகுத்துத் தந்துள்ளது இவர் தமது நூலைப் பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி, தொடையகராதி என்று நான்கு வகைப் படுத்தியுள்ளார் சதுரகராதி மிகவும் பயனுள்ள கருவி நூலாகும் இது தோன்றிய பின்னும் அகராதிக் கிரமத்தில் எழுந்த நிகண்டு நூல் பொதிகை நிகண்டு இதில் மொழி முதல் எழுத்தில் அகராதிக் கிரமம் மேற் கொண்டதோடு, இரண்டாம் எழுத்துகளும் ஒரு மெய் அல்லது உயிர்மெய்யெழுத்தின் நியதியைப் பின்பற்றியிருக்கிறது நிகண்டு நூலை அகராதியோடு ஒத்த நிலையிற் கொண்டுவருவதற்கு மேற்கொண்ட முயற்சியில் இது மிகவும் சிறப்பாக அமைந்த நூலாகும்

அகராதி முறையில் நிகண்டுகள் செய்யப் பலர் முயன்றபோதும், வீரை மண்டல புருடரின் சூடாமணி நிகண்டு கற்பாரிடையே மிகவும் போற்றப்பட்டு வந்தது திவாகரம், பிங்கலம் முதலியன சூத்திரயாப்பில் அமைந்துள்ளமையால் புலவர்களால் அன்றிச் சாமானி யரால் எளிதில் கற்றுப் போற்ற இயலாத வகையில் அமைந்துவிட்டன சூடாமணியின் விருத்தயாப்பு மனனம் செய்வதற்கு உறுதுணையாய் அமையவே, அது ஏனையவற்றிலும் பெருகி வழங்கத் தலைப்பட்டது சூடாமணி நிகண்டில் அமைந்துள்ள பதினோராந் தொகுதியின் மரபில் எழுந்த நூல்களுள் காலத்தால் மிக முந்தியது அரும்பொருள் விளக்க நிகண்டு இந்நூல் ஓரெதுகை வருக்கத்தில் பிற எதுகைச்சொல் கலவாதபடி அமைந்துள்ளது

இது தோன்றிச் சுமார் ஒரு நூற்றாண்டு சென்ற பின்னர், நாநார்த்த தீபிகை என்ற அரிய நூல் (சுமார் 1850) எழுந்தது இது விருத்த யாப்பில் அமைந்த பெருநூலாகும் இந்நிகண்டு வடமொழிச் சொற்களைப் பெரிதும் மேற்கொண்டுள்ளது இதனை அடுத்து யாழ்ப்பாணத்து வைத்தியலிங்கம்பிள்ளை என்பவர் சிந்தாமணி நிகண்டு என்னும் நூல் செய்தனர் (1874) இதுவும் நாநார்த்த தீபிகையைப் போல வடசொற்களை மிகுதியாகத் தந்துள்ளது இருபதாவது நூற்றாண்டாகிய இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில்கூட நிகண்டு நூல் ஒன்று செய்யப்பெற்றிருக்கிறது இந்த நிகண்டின் பெயர் விரிவு நிகண்டு என்பது இதனை இயற்றியவர் வீரவநல்லூர் நா அருணாசல நாவலராவர் இவர் சூடாமணி நிகண்டினை ஆதாரமாகக் கொண்டு பல வழக்குச் சொற்களுக்கும் பொருள் தந்துள்ளனர் திருநெல்வேலிப் பிரதேசத்து வழக்குக்கள் இந் நூலில் மிகுதியாக உள்ளன

ஒருசொல் பல்பொருள் நிகண்டுகளில் வரவரச் சொற் பெருக்கமும் அதிகரித்துள்ளது அரசியல் மாறுபாடுகளாலும், பிறமொழியாளர் கூட்டுறவினாலும்

நிகண்டுகளில் புகுந்த புதுச்சொற்கள் மிக மிகக் குறைவு வடசொற்கள்தாம் இவற்றில் அளவின்றிப் பெருகி யுள்ளன தமிழில் நூல் வழக்கிலும் உலக வழக்கிலும் புகுந்து, தமிழ்மயமாய் மாறிவிட்ட வடசொற்களை நிகண்டுகள் மேற்கொள்ளுதல் மிகவும் பொருத்தமே ஆனால், இருவகை வழக்கிலும் இல்லாத வடசொற்களும், வடமொழியில்கூட மிக அருகி வழங்கும் சொற்களும், பிற்கால நிகண்டுகளில் காணப்படுகின்றன இவ்வகை வடசொற்கள் வழக்கினுள் பயின்று வருதல் இயலாத காரியம் கால அடைவில் சொற் பொருள் சிலவற்றில் குறைந்தும், வேறு சிறவற்றில் பலவாறாகப் பெருகியும் ஆட்சியில் அமைந்துள்ளன வடமொழிச் சொற்களின் உச்சாரண பேதத்தை ஒழித்துத் தமிழில் ஒரு வடிவிற்றாகக் கொள்ளுதலிலும் பல பொருள்கள் ஏற்பட்டுள்ளன நிகண்டு ஆசிரியர்கள் இருவகை வழக்குகளையும் அறிந்து நூல் இயற்றுதலில் சிற்சில இடங்களில் பிழைபட்டும் உள்ளனர் இதனால் நிகண்டுகளில் பல சொல் வழுக்களும் பொருள் வழுக்களும் புகுந்துள்ளன இவையெல்லாம் நுனித்து நோக்கி உணரத்தக்கனவாகும்.

தமிழ்ச் சொற்களஞ்சியத்தில் நிகண்டுகள் சிறந்ததோர் இடத்தைப் பெற்றுள்ளன திவாகரம், பிங்கலம் முதலிய பழைய நிகண்டுகள் நல்ல முறையிற் பரிசோதித்து இன்னும் பதிப்பிக்கப் பெறவில்லை அச்சேறாது உள்ள நிகண்டுகளும் உள்ளன இந்நிகண்டு களை யெல்லாம் நல்ல முறையில் பதிப்பித்தல் தமிழ் அகராதியைச் செம்மையுற இயற்றுதற்குப் பெரிதும் உதவும் 'தமிழ்-அகராதியின் ஆதார நூற்றெகுதி' என்னும் வரிசையில், பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் நாமதீப நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, பொதிகை நிகண்டு, கயாதர நிகண்டு ஆகியவற்றை நல்ல முறையில் பதிப்பித்துள்ளார் கைலாச நிகண்டு, பிங்கல நிகண்டு ஆகியவைகளைச் சிற்சில பத்திரிகைகளில் சிறிது சிறிது வெளியிடத்

தொடங்கினர் அம்முயற்சி முற்றுப் பெறவில்லை. அச்சில் வந்துள்ள வேறு சில நிகண்டுகள் மீண்டும் ஆராய்ந்து பதிப்பிக்கும் நிலையில் உள்ளன இலக்கியங்களிற் போலவே, வெண்பா, ஆசிரியம், விருத்தம், கட்டளைக் கலித்துறை முதலிய பாக்களில் எல்லாம் நிகண்டு நூல்களைச் செய்ய முயன்ற புலவர் பெருமக்களின் முயற்சிகளை அழியாது பாதுகாத்தல் மிகமிக அவசியம் தமிழ் மொழியின் சொற்பொருள் வரலாற்றைத் தெள்ளிதின் உணர, இந்நிகண்டு நூல்களைப் போற்றிக் காத்தல் தமிழ் மக்களின் முதற் பெருங்கடனாம்.

### கால அடைவில் அகரமுதலிகள்

| காலம் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 1732<br>1919 | சதுரகராதி | வீரமாமுனிவர் |
| 1924 | சதுரகராதி | அச்சு வீரமாமுனிவர் |
| 1779 | பெப்ரிசியசு அகராதி | பெப்ரிசியசு |
| 1834 | | |
| 2837 | ராட்லர் தமிழ் அகராதி | ராட்லர் |
| 1839 | (4 பாகங்கள்) | |
| 1841 | | |
| 1842 | மானிப்பாய் அகராதி | யாழ்ப்பாணம்,<br>சந்திரசேகர பண்டிதர் மற்றும்<br>சரவண முத்துப்பிள்ளை. |
| 1843 | நிகண்டு—வேதகிரியார் சூடாமணி | களத்தூர் வேதகிரி முதலியார் |
| 1850 | சொற்பொருள் விளக்கம் | அண்ணாசாமிப் பிள்ளை |
| 1862 | வின்சுலோ – தமிழ் அகராதி | வின்சுலோ |
| 1869 | போப்புத் தமிழ் அகராதிச்சுருக்கம் | ஜி.யு. போப்பு |
| 1883 | அகராதிச்சுருக்கம் | விஜயரங்க முதலியார் |

| | | |
|---|---|---|
| 1893 | பேரகராதி | காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு |
| 1897 | தரங்கம்பாடி அகராதி | பெப்ரிசியசு<br>அகராதியின் விரிவு. |
| 1899 | தமிழ்ப் பேரகராதி (வித்தியா ரத்நாகர அச்சியந்திரசாலை யாழ்ப்பாணம் | நா. கதிரைவேற் பிள்ளை, |
| 1901 | தமிழ்ப் பேராகராதி (நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலை | நா. கதிரைவேற் பிள்ளை, யாழ்ப்பாணம் |
| 1904 | தமிழ்ச் சொல்லகராதி (அகரம் மட்டும்) | கு. கதிரைவேற் பிள்ளை, யாழ்ப்பாணம். |
| 1908 | சிறப்புப் பெயர் அகராதி | ராக்காடு இரத்தினவேலு முதலியார் |
| 1909 | இருபதாம் நூற்றாண்டுத் தமிழகராதி | பி ஆர் இராமநாதன். |
| 1910 | அபிதான சிந்தாமணி | ஆ. சிங்கார வேலு முதலியார் |
| 1910<br>1912<br>1923 | தமிழ்ச் சொல்லகராதி மூன்று தொகுதிகள் (மதுரைச் தமிழ்ச்சங்க வெளியீடு) | கு கதிரைவேற்பிள்ளை. |
| 1911 | தமிழ்மொழி அகராதி | காஞ்சி நாகலிங்க முனிவர் |
| 1914 | இலக்கியச் சொல்லகராதி | அ. குமாரசுவாமிப் பிள்ளை சுன்னாகம் |
| 1921 | மாணவர் தமிழ் அகராதி | எஸ் அனவரத விநாயகம் பிள்ளை |
| 1924 | சொற்பொருள் விளக்கம் என்னும் தமிழ்கராதி | ச சுப்பிரணமணிய சாஸ்திரி |
| 1925 | தற்காலத் தமிழ்ச்சொல் அகராதி | ச. பவானந்தம் பிள்ளை |
| 1928 | இளைஞர் தமிழ்க் கையகராதி | மே.வீ வேணுகோபாலப்பிள்ளை |
| 1935 | ஜூபிலி தமிழ் அகராதி | எஸ். சங்கரலிங்க முதலியார் |
| 1935 | ஆனந்தவிகடன் அகராதி | ஆனந்தவிகடன் ஆசிரியர் குழு |

| | | |
|---|---|---|
| 1935 | நவீன தமிழ் அகராதி | சி கிருஷ்ணசாமிப் பிள்ளை |
| 1937 | மதுரைத் தமிழ்ப் பேரகராதி | பண்டிதர் பலர் – இ மா கோபாலகிருஷ்ணக் கோனார் வெளியீடு |
| 1938 | சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி | ரெ எஸ் சுவாமி ஞானப் பிரகாசம் |
| 1939 | தமிழ்றிஞர் அகராதி | சி கிருஷ்ணவாமிப் பிள்ளை |
| 1939 | தமிழ்தமிழ் அகராதி | சி. கிருஷ்ணவாமிப் பிள்ளை |
| 1939 } 1926 } | விக்டோரியா தமிழ் அகராதி | எஸ். குப்புஸ்வாமி |
| 1939 | தமிழ் லெக்சிகன் | சென்னைப்பல்கலைக்கழகம் |
| 1940 | கழகத் தமிழ்க் கையகராதி | சேலை சகதேவ முதரியார் காழி சிவகண்ணுசாமிப்பிள்ளை |
| 1950 | செந்தமிழ் அகராதி | ந. சி. கந்தையாப்பிள்ளை |
| 1951 | கம்பர் தமிழ் அகராதி | வே. இராமச்சந்திர சர்மா |
| 1952 | தமிழ் இலக்கிய அகராதி | ந. சி. கந்தையா பிள்ளை |
| 1954 | சிறப்பு பெயர் அகராதி | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| 1955 | சுருக்கத் தமி அகராதி | கலைமகள் ஆபீஸ் |
| 1955 | கோனார் தமிழ்க் கையகராதி | ஐயன் பெருமாள் கோனார் |
| 1957 | தமிழ் இலக்கிய அகராதி | பாலூர்து.கண்ணப்ப முதலியார் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| 1964 | கழகத் தமிழ் அகராதி | கழகப் புலவர் குழு –சைவ |
| 1969 | லிப்கோ தமிழ் – தமிழ் அகராதி | லிப்கோ நிறுவனம் |
| 1979 | மணிமேகலைத் தமிழ்கராதி | மணிமேகலைப் பிரசுரம் |
| 1980 | தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி | அனந்தநாரயணன் |
| 1984 | தமிழ் – தமிழ் அகரமுதலி | மு. சண்முகம்பிள்ளை (தொகுப்பாசிரியர்) |
| 1992 | செந்தமிழ் அகராதி | த கோவேந்தன் |
| 2002 | வடமொழிசொல் அகராதி | த. கோவேந்தன் |

தொல்காப்பியம், திருக்கோவையார், திருவாசகம் முதலான சிறந்த நூல்களில் அருகிவரும் இலக்கண விதிகளைத் தொகுத்துக் கூறுவது இது நன்னூல், தொல்காப்பியம் போன்ற நூல்களைப் படித்த பிறகே படிக்கத்தக்க தென்பர் இதன் ஆசிரியர் வடமொழி யிலக்கணங்களில் உள்ள சில விதிகளும் இந்நூலில் இருக்கின்றன இதன் ஆசிரியர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த ஈசானமடம் சுவாமிநாத தேசிகர் ஆவர் இந்நூலுக்கு நூலாசிரியரே உரையும் இயற்றி யுள்ளனர் இவர் கருத்தையும் விதிகளையும் சிவஞான போதப் பேருரையாசிரியர் சிவஞான முனிவர் எடுத்தாள்வதால் சிவஞான முனிவருக்கு இவர் முற்பட்டவர் (17ஆம் நூ பிற்பகுதி). நன்னூல் விருத்தியும் செய்த சங்கர நச்சிவாயர் இவருடைய மாணவராவர்

**இலக்கணம்**

மொழிகளைக் கொண்டே நாம் எண்ணவும், எண்ணியவற்றைப் பிறர்க்கு உரைக்கவும் செய்கின்றோம் அந்த மொழிகளின் இலக்கணத்தைத் தெளிவாக்கிக் கொள்ளாவிட்டால் நம்முடைய எண்ணமும் பேச்சும் தெளிவாக இரா இலக்கணம் என்பது ஒரு பதத்தாற் குறிக்கப்படும் பண்புகளின் விளக்கமாகும்

இலக்கணம் பலவகைப்படும். சிலர் 'அனுபானம் அல்லது உடன்பருகுவது' என்பது போன்றதைச் சொல்

பற்றிய இலக்கணம் என்றும், 'பொன் என்பது தகடாக்கவும் கம்பியாக்கவும் கூடிய மஞ்சள் நிறமுடைய உலோகம்' என்பது போன்றதைப் பொருள் பற்றிய இலக்கணம் என்றும் கூறுவர் ஆனால் சொல்லுக்குப் பொருள் கூறுவது என்பது அது குறிக்கும் பொருளுக்கு இலக்கணம் கூறுவதேயாதலால் இவ்விரண்டிற்கும் வேறுபாடில்லை

இமைகொட்டல் என்பதைக் குழந்தைகளுக்கு விளக்க வேண்டினால் இமைகளைக் கொட்டிக் காட்டுகிறோம் பொருள்களை இது மரம், இது மாடு என்று சுட்டிக் காட்டுகிறோம் இவற்றைச் சிலர் சுட்டிக்காட்டும் இலக்கணம் என்பர் காய்கறிகள் என்பது வாழைக்காய், புடலங்காய் போன்றவை என்று கூறுவது போன்றவை உதாரண இலக்கணம் 'யானையானது மூக்கைக் கையாக உபயோகிக்கும் பிராணி' என்று கூறுவது வருணனை இலக்கணம் ஆனால் இந்த மூன்றுவகை இலக்கணங்களிலும் இன்றியமையாத இயல்புகள் எல்லாம் குறிக்கப்படாதலாதல் இவைகளை இலக்கணங்கள் என்று கூறுவது பொருந்தாது

ஒரு பொருள் எவ்விதம் உற்பத்தியாகிறது என்பதைக் கூறி விளக்குவதை உற்பத்தி இலக்கணம் என்பர் ஒரு கோட்டின் ஒரு முனையை அசையாமல் நிறுத்திக் கொண்டு, மற்ற முனையைச் சுற்றினால் வட்டம் என்பது பெறப்படும் என்று கணித நூலார் வட்டத்துக்கு இலக்கணம் கூறுவர் விஞ்ஞானிகள் இந்த விதமாக இலக்கணங் கூறும் முறையையே பெரிதும் கையாள் கிறார்கள்

ஆயினும் மேனாட்டுத் தருக்க நூலாருடைய சம்பிரதாயப்படி, சாதி சிறப்பியல்புகள் வழியாகவே இலக்கணம் கூறுவது' முறையாகும் அதாவது இலக்கணம் கூற விரும்பும் பொருள் எந்தச் சாதியைச் சேர்ந்தது என்றும், அதுபோன்ற மற்ற இனங்களிலிருந்து

பிரித்துக் காட்டும் சிறப்பியல்பு யாது என்றும் கூறுவதாகும் உதாரணம் : முக்கோணம் என்பது மூன்று நேர்கோடுகளால் அடைக்கப்படும் வடிவம் என்பது இதில் வடிவம் என்பது சாதியையும் மூன்று நேர்க்கோடுகளால் அடைக்கப்படுவது என்பது சிறப்பியல்பையும் விளக்குகின்றன

**இலக்கண விதிகள் :**

மேனாட்டுத் தருக்க நூலார் ஐந்து இலக்கண விதிகள் கூறுவர்:

1 இலக்கணமானது முக்கியமான எல்லாப் பண்புகளையும் கூறுவதாக இருக்கவேண்டும் மேற்கூறிய சாதி-சிறப்பியல்பு முறை இதற்குப் பயன்படும்

2 இலக்கணமானது இலக்கியமாகிய பொருளின் பண்புகளைக் கூட்டியும் குறைத்தும் கூறலாகாது அவை சமப்பரப்புடையவையாக வேண்டும் 'மை என்பது எழுதும் பொருள்' என்று கூறும் இலக்கணம், பலப்பம் முதலிய வேறு எழுதும் பொருள்கள் இருப்பதால் வேறு பொருளையும் குறிக்கும் அதிவியாப்தி என்னும் குற்றமுடையதாகும் 'மை கூறும் இலக்கணம் சிவப்பு பச்சை முதலிய மைகளை விலக்குவதால் குறைபாடாகிய அவ்வியாப்தி என்னும் குற்றமுடையாகும்

3 இலக்கணம் தெளிவாக இருக்க வேண்டும்; இரு பொருள் தரக்கூடிய மொழிகளும் அலக்கார நடையும் இல்லாததாயும் இருக்க வேண்டும் பொருளைத் தெளிவுபடுத்துவதே இலக்கணம் கூறுவதன் நோக்கமாகும் 'சிம்மம் மிருகேந்திரன்' என்பது இலக்கணம் கூறுவதாகாது

4 இலக்கணத்தில் பொருளின் பதத்தையோ, அதன் திரிபையோ பரியாயப் பதத்தையோ உபயோகிக்கக் கூடாது 'பறக்கும் சக்தியுடையது பறவை' என்பதைப் போன்ற வாக்கியங்கள் இலக்கணப் பொருளை

முற்றிலும் விளக்குவதில்லை இம்மாதிரியான இலக்கணம் சக்கரம் போல் சுற்றி வருவதேயன்றி எதையும் விளக்குவதில்லையாதலால் இதை 'இலக்கணச் சக்கரம் ' என்று கூறுவார்கள்

ஆயினும் 'மூன்று கோணங்களுடையது முக்கோணம்'; மரத்தினால் செய்த பெட்டி மரப்பெட்டி' என்பவற்றிலும் பொருளின் பதம் உபயோகிக்கப் பட்டிருந்தாலும் தவறில்லை முக்கோணம் என்பதற்கும் மரப்பெட்டி என்பதற்கும் தனிப் பெயர்கள் இல்லை யாதலால் கோணம் என்பதையும் பெட்டி என்பதையும் உபயோகிப்பது இழுக்காகாது

5 இலக்கணத்தை உடன்பாட்டு முறையில் கூற முடியும் இடங்களில் எதிர் மறை முறையில் கூறலாகாது ஏனெனில் இலக்கணத்தின் நோக்கம் ஒரு பொருள் இத்துணையது என்று கூறுவதேயன்றி, இத்துணைய தன்று என்று கூறுவதன்று 'தர்மம் அதர்மமல்லாதது', 'வாயு உருவமல்லாதது' என்று கூறினால் எதுவும் விளங்குவதில்லை

ஆயினும் சில பொருள்களின் இலக்கணத்தை எதிர் மறை முறையிலேதான் கூற முடியும் உதாரணம் ; 'பிரமசாரி மணமாகாதவன்', 'அந்நியர் நமரல்லாதவர்'

சில பொருள்களின் பதங்கள் எதிர்மறை முறையில் இலக்கணம் கூற வேண்டும் என்பதில்லை 'பொறாமை' என்பதற்குப் 'பிறர் நலம் கண்டு புழுங்குதல்' என்று உடன்பாட்டு முறையில் இலக்கணம் கூறலாம்.

இலக்கணத்தில் வரையறைகள் . 1 அறிவு வளர வளர இலக்கணம் மாறிவரும் இயல்புடையதாகும் வெப்பம் என்பது பொருள்களிலிருந்து வந்து நம் புலன்களைத் தாக்கும் தூள்கள் என்று 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அதற்கு இலக்கணம் கூறினார்கள் ஆனால் அது பொருளிலுள்ள மூலக்கூறுகளின் அதிர்ச்சியே என்று இப்பொழுது கூறுகிறார்கள்

6 தனக்கு மேலே சாதியில்லாத சாதிக்கும் அசோகர் போன்ற இடுகுறிப் பெயர்களுக்கும், பொருள்களின் தனி இயல்புகளுக்கும் இலக்கணம் கூற முடியாது ஒருவாறு வருணனை மட்டுமே செய்யலாம்

7 காலம், இடம், எண்ணம் போன்ற மூலப்பதங் களுக்கும், பொருள் என்ற பொதுவுக்கும் சம்பிரதாய முறையில் இலக்கணம் கூற இயலாது இவற்றிற்கு மேல் சாதியைக் குறிப்பது எளிதன்று

இந்த இடர்ப்பாடுகளைக் கருதியே விஞ்ஞானிகள் ஒரு பொருளுக்கு இலக்கணம் சொல்வதற்கு 'அமைப்பு முறை இலக்கணம்' என்பதைக் கையாளுகின்றனர் ஏதாவது ஒரு அமைப்பிலே, ஒரு திட்டத்திலே ஒரு பொருளுக்கு இன்ன இடம் என்று வகுத்துக் காட்டுவதே அப்பொருளுக்கு இலக்கணம் கூறுவதாகும் இதன்படி உலகு முழுவதுமே ஓர் அமைப்பு அதற்குள் பல சிறிய அமைப்புகள் உண்டு ஒன்றோடும் இயைபு படாமல் எந்தப் பொருளும் இல்லை இந்தப் பொருள் எந்தத் திட்டத்திற்குட்பட்டது என்று காண்பதே விஞ்ஞானத் தின் முக்கிய வேலை இதைக் கண்டவுடனே அப்பொரு ளின் முக்கிய வேலை இதைக் கண்டவுடனே அப்பொருளின் இலக்கணத்தைச் சொல்லியாயிற்று இந்த முறையின் படி எந்தப் பொருளுக்கும் இலக்கணம் கூறலாம் இலக்கணம் சொல்லமுடியாத பொருள் ஒன்று மில்லை என்பது விஞ்ஞானிகள் மதமாகும் (கி ர அ)

**இலக்கணம்**

இலக்கணம் என்பது சிறப்பியல்பு இலக்கணம் கூறப்பெறுவது எதுவோ, இலக்கணம் உடையது எதுவோ அஃது இலக்கிணம் எனப் பெயர் பெறும் எடுத்துக்காட்டாக, மண்ணுக்கு இலக்கணம் கூறப்புகுந் தால், மண் இலக்கியமாகும் இலக்கணம் பெற்று விளங்கும் இலக்கியத்தின் தன்மை இலக்கியத் தன்மை

யாகும் எங்கெங்கு மண்ணுண்டு அங்கெல்லாம் மண் தன்மை உண்டு என்று சொல்லலாம் மண்ணுக்கு அப்பால் இல்லாமலும் (அதிவியாப்தி, மிகைபடல்), மண்ணில் ஓரிடத்திலின்றி அதன் எவ்விடத்திலும் நில்லாமலும் (அவ்வியாப்தி, குறைபடல்), மண்ணில் இல்லாததாகவே இல்லாமலும் (அசம்பவம், மாறுகொளல்) மண்ணாகிய இலக்கியத் தன்மையை, இம்மண்தன்மை எல்லை கட்டி வரைந்து கொள்கிறது; மண் தன்மையோடு நியதமாகப் பிறழ்ச்சி கொள்கிறது; மண் தன்மையோடு நியதமாகப் பிறழ்ச்சி இன்றி ஒருங்கு நிகழ்வது மண்ணின் சிறப்பியல்பாகிய மண முடைமையே ஆம்; அதுவே மண்ணின் இலக்கணம் என்பர் தருக்க நூலோர் எனவே, இலக்கியத் தன்மையை வரைந்துகொள்வதனோடு நியதமாய் ஒருங்கு நிகழ்வது இலக்கணம் என்பது தருக்க நூலோர் முடிவு இதுவே இலக்கணத்தின் இலக்கணமாகும்

இலக்கியம் என்பது ஆங்கிலத்தில் லிட்டரேச்சர் என வருவதற்கு நேரான தமிழ்ச் சொல்லாக வழங்கி வருகிறது. எனினும், பேச்சும் இலக்கியமே எனக் கொள்ளுதல் வேண்டும் இந்த இலக்கியத்தில் காணும் சிறப்பியல்பே - மொழி நடையின் சிறப்பியல்பே - இலக்கணம் என்று தமிழில் பெயர் பெருகின்றது "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறல்" என்பது நன்னூல், மொழியைப் பேசிவரும்போது பேசுவோனும் கேட்போனும் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளும் பொதுநிலை - அல்லது பொது மரபு - இருத்தல் வேண்டும் இதுவே இலக்கணம் ஒருவகையால் நோக்கினால் இது வழக்காறே ஆகும் ஒரே இலக்கணமரபு உலகு எங்கும் பரவியில்லை மொழிக்கு மொழி இந்த மரபு மாறும்; காலத்துக்குக் காலமும் மாறும் இதனாலேயே வடமொழி, லத்தீன் முதலிய பழைய மொழிகள் வழக்கின்றிப் போக, அவர்களின் மாறிய வடிவங்களாகிய இந்தி, இத்தாலி முதலியவை

புதிய மொழிகளாக வழங்கிவருகின்றன ஆகையால் ஒரு மொழியின் இலக்கண மரபுகொண்டு மற்றொரு மொழியின் இலக்கணத்தினை விளக்குவது தக்கதன்று லத்தீன் இலக்கணமே ஆங்கில இலக்கணம் என்று பல நாள் ஆராய்ந்தவர் உண்மை காணாது மயங்கினர் வடமொழி இலக்கணமே தமிழிலக்கணம் என்ற ஆராய்ச்சியும் இத்தகையதே.

'சொற்கள் வாக்கியமாகிக் கருத்தினை எவ்வாறு விளக்கி வருகின்றன என்பதனை ஆராய்வதே இலக்கணம்' என மேனாட்டில் வழங்கி வருகிறது வடமொழி வியாகரணமும் இத்தகைய ஆராய்ச்சியே ஆகும் ஆனால், தமிழர் ஐந்திலக்கணம் எனக் கூறிவரு கின்றனர் எழுத்தின் ஓசை, மாத்திரை, புணர்ச்சி மாற்றம் முதலியவற்றை ஆராய்வது எழுத்திலக்கணம், சொற்கள், பெயர், வினை, இடை, உரி என்ற பாகுபாட்டோடு பலவாறு சொற்றொடராக இயைந்து வரும் மரபுகளை ஆராய்வது சொல்லிலக்கணம் இலக்கியங்களில் வரும் பொருள் பாகுபாட்டினை அகம் என்றும், புறம் என்றும் முறை செய்வது பொருள் இலக்கணம் தமிழ் இலக்கணம் இந்த மூன்று பிரிவாகமட்டும் அமைந்தது தொல்காப்பியக்காலம் இந்த பொருள்களைப் பாட்டாக வும் உரைநடையாகவும் கூறும்போது இலக்கியம் செய்யுளாக வரும்; செய்யுளின் அமைப்பு முறையைத் தனியே ஆராய்வது யாப்பிலக்கணம் இந்த நான்கு பிரிவாகத் தமிழ் இலக்கணம் அமைந்த காலம் இறையனார் அகப் பொருளுரை காலம் எனலாம் வடநூல் ஆராய்ச்சியின் பயனாக உவமை முதலிய அலங்காரங்களை ஆராய்ந்தவர்கள் அணி இலக்கணம் என ஐந்தாம் பிரிவில் கூறிய காலம் தண்டியலங்காரக் காலம் எனலாம்

பிற நாட்டிலும் இப்படிப் பலவற்றையும் இலக்கணத்துள் அடக்கியதுண்டு டைனீஷியஸ் என்ற ரோமானிய அறிஞர் எடுத்தல், படுத்தல் முதலிய இசை

வேறுபாடு கூறும் ஒலி இலக்கணமும், சொற்பொருளை விளக்கம் சிறப்பியல் இலக்கணமும், அணிகளை விளக்கும் அணி இலக்கணமும் கூறுவர் அவர், "கற்ற எழுத்தாளரோடு செயல்முறை வகையால் நம்மை அறிமுகம் செய்வதே இலக்கணம்" என்பர்.

இலக்கண மாறுபாட்டுக்கு அடிப்படையாகாத ஒலியியல் நாம் கூறிவரும் இலக்கண விதியாவது இல்லை சொற்பொருள் கூறுவது அகராதியும் நிகண்டுமே அன்றி இலக்கண நூலன்று அணி இயல் அலங்கார சாத்திரமே அன்றி இலக்கண நூலன்று பொருள் பாகுபாடு இலக்கண ஆராய்ச்சியாதலின் அதுவும் நாம் வழங்கும் இலக்கணமாவதில்லை இதனால் எழுத்திலக்கணத்தை யும் சொல்லிலக்கணத்தையும் மட்டுமே நன்னூலும் தொன்னூலும் கூறுகின்றன

சொல், சொற்றொடர் இவற்றின் இயைபுகளை விளக்கும் முறை அல்லது மரபினை ஆராய்வதே இலக்கணம் 1 சொற்றொடரில் சொல் நிற்கும் இடம் : (இராமன் சோறு தின்றான்" என்பதில் முதலில் நிற்பதனாலேயே இராமன் எழுவாய்: இரண்டாவது நிற்பதாலேயே 'சோறு' என்பது இரண்டாம் வேற்றுமை உருபு இன்றியும் செயப்படுபொருளாம்) 2 ஒலி வேற்றுமை ("அவன் வந்தான்; வந்தான் போனான்" என்பதில் முதலிலுள்ள வந்தான் என்னும் சொல் பக்தியில் எடுத்தலோசை பெற்றுப் பயனிலையாம்; இரண்டாவது உள்ள வந்தான் என்னும் சொல் விகுதியில் எடுத்தலோசை பெற்று எழுவாயாம் 3 சொல்லமைப்பு : 4 சொல்லுருபு மாற்றம் (இராமன், இராமனால் எனக் காண்க துணைச்சொற்களோடு வாள் கொண்டு என வருதல் காண்க) இவை சொற்கள் ஒன்றோடொன்று எழுவாய், பயனிலை முதலியவையாய் இயைந்துவரும் இயைபினை விளக்குகின்றன இவற்றை "வந்தான்" போல வரும் சொல்லமைப்பு அல்லது

சொல்லாக்கம், "இராமன் சோறு உண்டான்" என்பது போன்ற சொற்றொடரமைப்பு அல்லது சொற்றொடராக்கம், "இராமன், இராமனை" முதலியன போன்ற உருபு அமைப்பு அல்லது உருபு ஆக்கம் என மூன்றாக அடக்கி மேனாட்டார் ஆராய்வர்.

மொழி, பேச்சாக எழுவது: எழுத்து, அதன் மாற்று வடிவம் ஆதலின் மொழி ஒரு நிகழ்ச்சி, அல்லது ஒரு செய்தி, இலக்கணம் அதனை உள்ளவாறு விளக்கினாற் போதும், ஆனால்,கொள்கைக்கேற்ப இந்த விளக்கம் மாறுபடுவது நம் மனத்தின் இயல்பு பலவகையாக வரும் மொழிச் செய்திகளையும் ஒரு கொள்கையும் இன்றி முழு நிலையாக விளக்க முடியாது விஞ்ஞான வழக்கின் படியே இவற்றைக் கோவை செய்து வகைப்படுத்தி முறை காண வேண்டும்

ஒரு மொழியோடு ஒரு மொழியை ஆராயும் ஒப்புமை ஆராய்ச்சி முறை இவ்வாறு எழுகின்றது ஒரு காலத்தில் ஒன்றுபோலத் தோன்றுவன பிற்காலத்தில் ஒரு தொடர்பும் இல்லாதவையாய்ப் போகலாம் தமிழ் "அஞ்சு" வட மொழி 'பஞ்ச' என்பது போலத் தோன்றினாலும், 'பஞ்ச' என்பது 'கவிங்க', 'பீன்ப்' போன்று முன் இருந்ததனையும், 'அஞ்சு' என்பது 'ஐந்து' 'ஐது', 'ஐ' என்றெல்லாம் இருந்ததனையும் ஆராயும் போது இவற்றின் ஒற்றுமை மறைகிறது பிறமொழிகளி லிருந்து கடன் வாங்கி வழங்கப்பெறும் சொற்களும் உண்டாதலின் ஒரு மொழியில் பிறமொழிச் சொற்கள் இருப்பதால் மட்டும் பிறமொழியாகிவிடாது ஆகை யால் பழைய வடிவங்களை ஆராயவேண்டும் என்பதா யிற்று இதுவே வரலாற்று முறை ஆராய்ச்சி ஒப்பிலக் கணங்களும் வரலாற்றிலக்கணங்களும் என்ற இவை இரண்டும் சேர்ந்த வரலாற்று ஒப்பிலக்கணங்களும் தோன்றி வருகின்றன இன்று இந்திய ஐரோப்பிய மொழிகளே இவ்வாறு பரக்க ஆராயப்பெற்றுள்ளன

பேச்சு என்பது, வாக்கியம் வாக்கியமாகத் தொடர்ந்து ஓடும் ஒரு பேராறு கருத்தை முழு முழு வாக்கியமாகவே விளக்குகிறோம்; வாக்கியமே கருத்தின் முழு நிலையளவுகோல் அல்லது தனியன் வாக்கியத்தில் வரும் சொற்கள் அதன் உறுப்போ அன்றித் தனியே வழங்கும் தனிநிலை பெற்றன அல்ல ஆனால், அகராதியில் எண்ணக்கிடக்கும் இந்தச் சொற்கள் எண்ணிறந்த கருத்துகளை உணர்த்துவது எப்படி? அவை ஒன்றோடொன்று எண்ணிறந்த பலவகையில் சேர்ந்து, இவ்வாறு எண்ணிறந்த கருத்துகளை விளக்குகின்றன ஒன்றிற்கொன்றுள்ள பலவகை இயைபு, இந்த இயைபு களின் பலவகை வெளிப்பாடு என்ற இவற்றின் காரண மாக வாக்கியம் பலவகையாக மாறுபடும் இது மொழி களில் பலகையாக வரக் காண்கிறோம்

ஒரு வாக்கியத்தை ஒரு சொல்போல வழங்குகிற மொழிகளும் உண்டு. அமெரிக்கச் செவ்விந்தியர் பேசும் மொழிகள் இத்தகைய பலவின் ஒற்றுமை நயம் பெறு மொழிகளாம் இங்கே ஒரே தொகையாக வாக்கியம் விளங்குகிறது எனலாம். ஆனால், இங்கே பல சொற்கள் என்ற பேச்சில்லை வினை என்பதே இல்லாதபோது பொது வினைச்சொற்கள் என்று இங்குப் பேச இடம் ஏது? ஆப்பிரிக்காவில் வழங்கும் தொகைநயம் பெறு மொழிகள் என்பவை இவற்றின் வளர்ச்சிபோலத் தோன்றும். செயப்படுபொருளை வினையினின்று பிரிக்காமல் இரண்டும் சேர்ந்த தொகையாகவே இவை வழங்குகின்றன பலவகைக் கருத்துகள் சொல்லில் தொடர்ந்து திணிக்கப்பட்டவை போல விளங்கும் தனிமை நயம் பெறு மொழிகள் இவற்றிற்கு முழுதும் முரணானவை; ஒவ்வொரு கருத்தின் பாகுபாட்டினையும் ஒவ்வொரு சொல்லாகத் தனித்தனி பிரித்து இவை அமைக்கின்றன

சீனம் முதலியன இத்தகையன சொல்லுக்கும் சொல்லுக்கும் உள்ள இலக்கண இயைபானது இங்கே வாக்கியத்தில் சொற்கள் நிற்கும் இடத்தினைப் பொறுத்ததாகும் இந்தச் சொற்கள் தனித்தனி நில்லாது ஒட்டிக்கொண்டவைபோல வருவது ஒட்டு மொழிகளின் இயல்பாகும் திராவிட மொழிகள் இத்தகையன என்பர் போகின்றான் என்பதில் “போ” என்ற வினைச்சொல்லும், “கின்று” என்ற நிகழ்காலச் சொல்லும் “ஆன்” என்ற ஆண்பாற் சொல்லும் ஒட்டி இருக்கின்றன என்பர்

ஒரு காலத்தில் பொருளுடையவாய் இருந்து, பின் பொருளற்றத் தேய்ந்துபோன இடைச் சொற்கள், அடிச்சொற்களின் பின்னோ முன்னோ சேர்ந்து இலக்கண இயைபினை இந்த மொழிகளில் விளக்கிவரும் தேய்ந்த சொற்கள் என்றே தோன்றாதபடி உருபுகள் எழுத்துக்களாய் ஒழியும் போது இவையே உருபு மொழிகள் என வளர்கின்றன (தமிழில் கு என்ற நான்காம் வேற்றுமை உருபினைக் காண்க) இந்திய ஐரோப்பிய மொழிகள் இத்தகையவை உயிர் ஒலி மாறுதலாலோ விகுதிருபு மாறுதாலோ சொல்முதல் மாறுவதாலோ இலக்கண இயைபு விளங்கலாம் நாளடைவில் ஒவ்வொரு கருத்தையும் தனித்தனிச் சொல்லாக வேறு பிரித்து வழங்கும் ஒற்றுமை நயம் பெறு மொழிகளாக இவை வளர்கின்றன

இந்திய ஐரோப்பிய மொழியில் ஆங்கில மொழியின் வளர்ச்சி இதனை விளக்குகிறது இவ்வாறு மொழிகள் பலவகையாக வாக்கிய அமைப்பின் அடிப்படையில், வெவ்வேறே ஆனாலும், அவை வளர்ச்சியின் பயனாய் வரையறை யின்றிப் பலவகை நிலையிலும் பின்னிக்கொண்டு கிடக்கக் காண்கிறோம் இருந்தாலும் இவற்றின் இலக்கண முறை வெவ்வேறே ஆம் இலக்கண ஒற்றுமை உள்ள மொழிகளை ஓர் இனம் எனக் கொள்ளலாம் பிறவகையான ஒற்றுமைகள் போலி ஒற்றுமைகள் என முன்னர்க் கண்டோம்

*இந்திய ஐரோப்பிய மொழியாராய்ச்சி அந்தக் குடும்ப மொழிகளைப் பற்றிச் சில உண்மைகளைக் கண்டுள்ளது சொற்களை அவற்றின் அடிப்படைச் சொற்களாகப் பிரிக்கலாம்*

*இந்த அடிச் சொற்கள் இரண்டு வகை: முதல் ஒத்திருப்பன ஒருவகை; இவையே பகுதிகள் எனலம் கடை ஒத்திருப்பன மற்றொருவகை; இவையே விகுதி முதலிய இடைச் சொற்கள் ஆம் பகுதிகளோ கருத்துகளை விளக்கும்; இடைச் சொற்களோ இலக்கண இயைபினை விளக்கும்; சொற்றோடரில் சொல் அமைந்த இடமும் இந்த இயைபினை விளக்கும் நாளடைவில் பழக்கத்தால் சில சொற்கள் சில இடத்தில் மாறாது வரும் அல்லவா? இடைச் சொற்கள் முதலில் தெளிவின்றியும், வரையறை இன்றியும் வந்திருக்கும் வழக்காற்றில் பயின்றுவருதல் காரணமாகப் பின்னர் வரையறை ஏற்பட்டிருக்கும்*

*இவற்றில் ஒரு சில இலக்கணக் கருத்தினை மட்டும் விளக்கலாம்; வேறு சில பெயர்வினை என்ற சொற் பாகுபாட்டுக் குறிகளாக வந்திருக்கலாம். இதனாலேயே ஒரே உருபு பல பொருளில் வரக் காண்கிறோம் இவற்றில் ஒரு சில தொடக்கத்தில் இருந்தே இடைச்சொற்களாக இல்லாமல் பொருளுள்ள சொற்களாக வழங்கிவந்து, பின்னர் நாளடைவில் பொருளிழந்து, தேய்ந்து, உருபாகவும் வெறும் உயிர் ஒலியாகவும் நின்று விட்டிருக்கலாம்*

*இம்மொழிகளில் எட்டு வேற்றுமைகள் உண்டு. எழுவாய், செய்பயடு பொருள், விளி என்ற மூன்றும் வல் வேற்றுமைகள் ; பிற எல்லாம் மெல் வேற்றுமைகள்; பின்னவையே பெயரடையும், வினையடையும் ஆயின இவ்வுருபுகள் பின்னர் முந்தமை சொல்லாக மாறின. 1,2,6 ஆம் வேற்றுமைகள் இலக்ண நெறி வேற்றுமைகள்; 3,5,7 ஆம் வேற்றுமைகள் தருக்க நெறி வேற்றுமைகள் இந்த*

மொழிகளில் வரும், இருமை எண் பன்மையிலும் பழையது இங்கே ஆண், பெண், அலி என்ற இலக்கணப்

பால் பாகுபாடு சொற்களின் ஒப்புமை நயத்தால் எழுந்தது என்பர் பால் பாகுபாடு இல்லாத காலமும் உண்டு 'செய' என் வினையை ஆராய்ந்தால், பெயர், வினை என்ற பாகுபாடு இல்லாத காலமும் உண்டு எனத் தெரிகின்றது இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற காலக்கருத்தும் நாளடைவில் நுழைந்ததே வினைச் சொல்லின் முதல் எழுத்தினை இரட்டுவித்துக் காலம் காட்டுதல் பழைய முறை இம்மொழிகளில் செயப்படுபொருள், வினை, செய்வோன் என வாக்கியம் அமைந்து வந்தது

இந்த உண்மைகள் பிறமொழிகளுக்கும் ஒத்து வருமா என்பதே இன்றைய ஆராய்ச்சி தமிழிலக்கணம் ஒரு வகையில் பொது இலக்கணம் எனலாம் கருத்தினை விளக்கும் கூற்றோ, முடிபோ, ஏதேனம் ஒன்றைப் பற்றிக் கூற முன்வருவது எதுவோ அதுவே எழுவாய்; அதனைப் பற்றி ஏதாவது ஒன்று கூறுவது எதுவோ அதுவே பயனிலை தமிழ் இலக்கணம் எழுவாயைப் பெயர் என்றது; பயனிலையை வினை என்றது, அவ்வளவே இங்குள்ள பாகுபாடு பிற சொறக்ள் எல்லாம் பெயரின் அடையாகவும் வினையின் அடையாகவும் நுழைந்து, எழுவாயும் பயனிலையுமாகவே முடியும் பெயர், வினை என்ற இரண்டு சொற்களைப் பிாத்து ஆராய்ந்தால், பொருளுக்கு உரிமையான அடிப்டைப் பகுதிகள் ஒருபுறம் நிலைத்துள்ளன

காலம், இடம், பால், வேற்றுமை முதலிய இலக்கண இயைபினைக் காட்டும் விகுதி, இடைநிலை, வேற்றுமையுருபு முதலிய இவை மற்றொரு புறம் பிரிகின்றன பகுதியே உரிச் சொல்; விகுதி முதலியன இடைச்சொல் இவ்வளவே தமிழ் இலக்கணம், பிறமொழிச் சொற்களும் திசைச்சொற்களும் தமிழ்

மொழியில் வழங்கி இடம் பெறும் தமிழில் காலம், பால் முதலிய இலக்கணப் பாகுபாடுகள் இல்லாத நிலையும் இருந்திருக்கலாம்; பகுதிகள் வினைக்கும் பெயர்க்கும் பொதுவாக இன்றும் உள்ளன எழுவாய், செயப்படு பொருள், பயனிலை என்பது தமிழ் வாக்கியத்தின் பொது அமைப்பு இடைச் சொற்கள் முன்னொரு காலத்தில் தனிச்சொற்களாக விளங்கினவே என்பது இன்றும் விளங்குகிறது

இலக்கண விதிகள் இலக்கண நூல்கள் ஏற்படுத்தும் சட்டங்கள் அல்ல; வழக்காற்றின் மரபுகளாய்க் குறித்த காலத்தில் வழங்குவனவே இலக்கண நூல்கள் சூத்திர வடிவமாய்ச் சுருக்கமாக வழங்குவதற்கு வாய்ப்பாக இருப்பதால் ஐயம் ஏற்பட்டபோதெல்லாம் அவற்றை எடுத்துக் காட்டுவது இயல்பாகிவிட்டது இதனால் அவை கட்டாயம் பின்பற்றத் தக்கன என்ற எண்ணம் பரவியது

கிரேக்க நாட்டில் குடியரசு பரவியபோது பொது மக்களிடையே கருத்துகளைத் தெள்ளத் தெளிய விளக்கிப் பேசி மனத்தைக் கவரும் பேச்சாளிகளுக்குச் சிறந்த இடம் தோன்றியது எவ்வாறு மனத்தைக் கவர்வது என்ற ஆராய்ச்சி மொழி இயலை ஆராய்வதாக முடிந்தது; இலக்கணம் தோன்றியது சொல்லின் ஒலிக்கும் பொருளுக்கும் இயற்கையான தொடர்பு உண்டு என்ற நம்பிக்கைக் கோட்டை தகர்ந்தது; சொல்லுவோன் தருவதே பொருள் என்பது விளங்கியது இங்குப் பயன்படும் மரபுகளே இலக்கணம் என்பதாயிற்று 1 பெயர்ச் சொல், 2 வினைச் சொல் 3 பெயரடைச்சொல் 4 வினையடைச் சொல் 5 குறிப்புப் பெயர்ச்சொல் 6. மேல், கீழ் என்பன முதலாக வரும் முந்து அமைசொல் 7 சொற்றொடர்களின் பொருள்களை ஒற்றுமை நயத்தாலோ வேற்றுமை நயத்தாலோ தொடர்புபடுத்திச் செலுத்திவரும் and, but போலப் பிணைப்புச்சொல் 8

உணர்ச்சி ஒலியாக வரும் ஒலிக் குறிப்புச் சொற்கள் என்ற இவையே எட்டுவகைச் சொற்கள் என மேனாட்டார் கூறலாயினர் ( a, an, the எனப்) பெயர் முன்னுருபு (article) என்பதொன்றும் உண்டு அரிஸ்டாட்டில் காலத்தி லிருந்து இந்தப் பாகுபாடு தொடங்கியது

இலக்கணம் எந்நாளும் மாறாது ஒருதன்மைத்தாக இருப்பதனால் அன்றோ பேச்சாளி அதனை எளிதில் அறிந்து வெற்றிபெறுதல் கூடும்? இவ்வாறு ஒரு தன்மையதே என்றனர் ஒரு கொள்கையினர் ஆகையால் "வந்தான்" என்பதனை அறிந்தால், "தந்தான்" என்பதுபோல ஒப்புமை முறையால் பிற வடிவங்களை அமைத்தல்கூடும் என்றனர் இதுவே ஒப்புமைக் கொள்கை (anologg) "குதிரைக்குக் குர் ரம் என்றால் யானைக்கு யர் ரமோ" என்ற பழமொழியை அறிவோம் இதனை ஒட்டி, விதிகள் இருந்தாலும், விதிக்குப் பல புறனடைகளும் உண்டு என்பது புறனடைக் கொள்கை

ஒப்புமைக் கொள்கையினர் அரிஸ்டார்க்கஸ் என்ப வரைப் பின்பற்றினர்; புறனடைக் கொள்கையினர் காஸ்ட்ஸ் என்பரைப் பின்பற்றினர் ஒப்புமைக் கொள்கை சிலபோது இலக்கணக் கொடுங்கோலாக மாறுவதை இன்றும் காணலாம். ஆனால் கிபி நான்காம் நூற்றாண்டிலேயே இலக்கணம் எழுதி வந்தவர்கள் இந்தப் போராட்டத்தை ஒருவாறு நிறுத்தி, பெரிதும் விதிகளும் புறனடைகளும் கொண்டதே இலக்கணம் என முடிவு செய்தனர் கிரேக்க இலக்கணம் லத்தீன் இலக்கணத்திலும் நிழலிட்டது லத்தீன் இலக்கணம் ஐரோப்பா முழுதும் பரவிப் பிற மொழி இலக்கணங்க ளின் அடிப்படையாக முயன்றது 18 ஆம் நூற்றாண்டில் வட மொழியை மேனாட்டார் கற்கத் தொடங்கிய திலிருந்து வரலாற்று ஒப்பிலக்கணம் வளர்ந்து வருகிறது, விஞ்ஞான முறைப்படி ஆராய்ச்சி நிகழ்ந்து வருகிறது (தெபாமீ)

**இலக்கண விளக்கச் சூறாவளி**

இது சிவஞான முனிவரால் இயற்றப்புட்டது, வைத்தியநாத நாவலரால் இயற்றப்பட்ட இலக்கண விளக்கத்தைமறுப்பதற்கு இந்நூல் எழுதப் பெற்றது இலக்கண விளக்கத்தைப் பற்றியும் சிவஞான முனிவரைப்பற்றியும் தனிக்கட்டுரைகள் உள்ளன

**இலக்கண விளக்கம் :**

தொல்காப்பியச் சூத்திரங்களையும் நன்னூற் சூத்திரங்களையும் இந்நூலில் எடுத்திணைத்திருக்கிறார் இதன் ஆசிரியர் இதனைக் குட்டித் தொல்காப்பியம் என்றும் கூறுவர் தொல்காப்பியவிதி எல்லோருக்கும் எளிதில் விளங்க இந்நூல் எழுதப்பட்ட தென்பர் இதன் கண் ஐந்திலக்கணமும் கூறப்பட்டுள்ளன இதன் ஆசிரியர் தருமபுர ஆதீன வைத்தியநாத நாவலர் ஆவர் இவர் ஈசானமடம் சுவாமிநாத தேசிகர் காலத்தவர் (17 ஆம் நூ பிற்பகுதி) இந்நூலுக்கு மறுப்பாக இலக்கண விளக்கச் சூறாவளி என ஒரு நூல் சிவஞான முனிவரால் செய்யப்பட்டுள்ளது

**இலக்கியம் :**

ஒருவன் தன்னுடைய உள்ளத்தில் எழும் கிளர்ச்சிகளைப் பிறனொருவன் உள்ளத்திலும் எழுமாறு செய்ய விரும்பினால் அதற்காக அவன் பயன்படுத்தும் சாதனங்களுள் மொழி என்பதும் ஒன்று மனிதனுடைய உள்ளத்திலும் கிளர்ச்சிகள், கருத்துகள் மூலம் எழும் உணர்ச்சிகள் என்றும் இருவகைப்படும் ஒருவன் மொழியைக் கண்டு தன் உள்ளத்தில் உண்டான உணர்ச்சிகளைப் பிறர் உள்ளத்திலும் உண்டாகுமாறு செய்விக்கும்நூல் இலக்கியம் ஆகும் மற்றும் இலக்கியம் என்பது படிக்குந்தோறும் நயம் தந்து, உணர்ச்சி வேகத்தோடு உருவ அமைப்பும் உடையதாய் இருத்தல் வேண்டும்

ஒருவன் எதையேனும் நேராகவோ அல்லது கற்பனையாகவோ அனுபவித்திருக்கலாம். அதை மீண்டும் கற்பனை மூலம் தன்னுடைய உள்ளத்தில் நினைந்து மறுபடியும் அனுபவிக்கிறான். அந்த அனுபவத்தைப் பிறரும் அடையுமாறு செய்ய விரும்புகிறான், அதற்காக அவன் ஓவியனாயிருந்தால் வண்ணங்களையும், சிற்பியாயிருந்தால் கல்லையும்; உலோகத்தையும், கவிஞனாயிருந்தால் சொற்களையும் பயன்படுத்துவான். ஒருவன் தான் அனுபவித்ததைப் பிறரும் அனுபவிக்கும்படி சொற்களைக் கொண்டு செய்யும் கலையையே இலக்கியம் என்றும் கவிதை என்றும் கூறுவர். சாதாரணமாகக் கருத்துகளைக் கூறுவதற்குச் சொற்களை அகராதி கூறும் பொருளில் கையாண்டால் போதும். ஆனால் கவிஞன் சொற்களின் தொனிகளையும் ஒலி நயத்தையும் பயன்படுத்தித் தன்னுடைய நோக்கத்தைச் சாதித்துக் கொள்ளுகிறான்.

சொற்களின் கற்பனை நயமும். சந்தம் முதலிய ஒலி நயமுமே இலக்கியத்தின் உயிர் நாடிகள்; அவற்றின் வாயிலாகவே கவிஞனின் அனுபவம் கவிதையைப் படிப்பவர் அனுபவமாக ஆகின்றது. சந்த நயம் உண்டாக்குவதற்காக ஏற்பட்ட சாதனம் செய்யுள். யாப்பு இல்லாமலும் சந்த நயம் உண்டாகுமாறு செய்யலாமா தலால் கவிதை செய்யுள்நடை யிலுமிருக்கலாம், உரைநடையிலுமிருக்கலாம்.

தமிழ் ஆசிரியர்கள் நூல்களைப் பாச் செய்யுள், நூற் செய்யுள், உரைச் செய்யுள் என்று மூவகையாகப் பிரித்துள்ளனர். பாச் செய்யுள் என்பதே இதுகாறும் கூறிய இலக்கியம் அல்லது கவிதையாகும். நூற் செய்யுளையும் உரைச் செய்யுளையும் கருத்துகளை வெளிப்படுத்தவே பயன்படுத்தினார்கள். ஆனால் இக்காலத்தில் உரைநடை என்னும் உரைச் செய்யுளும் இலக்கியத்தை உண்டாக்கு வதற்கு உதவுகின்றது.

ஆகவே, ஒருவன் தன்னுடைய அனுபவத்தைக் கற்பனை மூலம் எண்ணிப் பார்த்து, அதைச் சொற்கள் மூலம், செய்யுள் நடையினாலோ உரைநடையினாலோ பிறர் உள்ளத்திலும் எழுமாறு அழகுபடச் செய்வதே இலக்கியமாகும்.

**பாட்டியல் :**

இலக்கணங் கூறிற்று. பொருளிலக்கணம் என்ற பகுதியில் அந்நூல் அடங்கிய யாப்பு, அணி என்பன வற்றைத் தனிப் பிரிவுகளாகக் கொண்டு, பிற்கால இலக்கண நூல்கள் ஐந்து பகுதிகள் கூறின. ஏறக்குறையப் பதினைந்தாம் நூற்றாண்டு முதல் ‘பாட்டியல்’ என்னும் ஓரிலக்கணப் பிரிவு உண்டாயிற்று.

பாட்டியல் நூல்கள் இரண்டு பிரிவுகளையுடையன. ஒரு பிரிவு பொருத்தங்கள் கூறுவது. மற்றொரு பிரிவு சிற்றிலக்கிய நூல்கள் எவ்வாறமைதல் வேண்டுமென்று கூறுவது, இவையன்றிப் பாடுவோர் வகை, அவை வகை, பாடல்களுக்குரிய கடவுளர், சாதி முதலியன பற்றியும் இந்நூல்களிற் கூறப்படுவதுண்டு.

சிதம்பரப் பாட்டியல் என்னும் ஒரு நூல் பிற பாட்டியல் நூல்களைப் போலாது முற்கூறிய பிரிவு களையிறுதியிலமைத்து, முதற் பகுதியில் யாப்பிலக் கணமுங் கூறியுள்ளது.

பாட்டியலிலக்கணத்துட் கூறப்படும் முதற் பிரிவு வடநூல் மரபைத் தழுவியதென்று பன்னிரு பாட்டிய லின் பதிப்பாசிரியர் விளக்கியுள்ளார். இப் பிரிவிற் கூறப்பட்ட பொருத்தக் குறிப்புக்கள் பழைய செய்யுட் களில் கொள்ளப்படவில்லை. பிற்காலத்தோர் ஒரு வகையான அமைப்புக் கொண்ட பாடல்களால் பாடப்படுவோருக்கு அழிவு நேருமென்றும், ‘அறம்பாடுதல்’ கூடுமென்றும் கருதினர்போலும்.

**பாட்டியலின் முதற்பிரிவாகிய பொருத்தம் :**

மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உணவு, வருணம், நாள், கதி, கணம், என்னும் பத்துப் பொருத்த

மும் பாடலிலே தக்கவகை யமைய வேண்டியவையாம் இவற்றோடு நாழிகைப் பொருத்தம், பெயர்ப் பொருத்தம், புட் பொருத்தம் என்பனவும் சேர்த்துக் கூறப் படுதலுண்டு

புலவனொருவன் மனிதரையோ கடவுளரையோ பாடும்போது திரு, மணி, நீர் இவைபோன்ற மங்கலச் சொற்களே முதற் பாட்டின் முதற் சொல்லாய் நிற்க வேண்டுமென்பது மங்கலப் பொருத்தம் மங்கலச் சொல்லெனினும், செய்யுளோசை நோக்கித் துண்டு பட்டுப் பிரிவதாகவோ, விகாரப்பட்டதாகவோ, தெளிபொருளின்றிப் பலபொருள் படுவதாகவோ முதலில் நிற்கக்கூடாதென்று சொற்பொருத்த மறியப் படும்

முதன் மொழியின் எழுத்துக்களை யெண்ணின் ஒற்றைப்படையாக வரவேண்டும் என்பது எழுத்துப் பொருத்தம் தலைவன் பெயரின் முதலெழுத்தைப் பாலத்தானமாகக் கொண்டு மங்கலச் சொல்லின் முதலெழுத்தை யெண்ணின் அது பாலன், குமரன், இராசன் என்னும் மூன்றனுளொரு தானத்ததாக வேண்டும்; மூப்புத் தானமாகவோ, மரணத்தான மாகவோ இருத்தலாகாது இது தானப்பொருத்தம்

அ ஆ, இ ஈ ஐ, உ ஊ ஔ, எ ஏ, ஒ, ஓ இவ்வைந்தும் ஐந்து தானங்களாம் ஆண்பாலரை அப்பாலுக்குரிய குற்றெழுத்தாலும், பெண்பாலாரை நெட்டெழுத்தாலும் தொடங்கிப் பாடுக; அலிப்பாலெழுத்தாகிய ஒற்று, ஆய்தம் இவற்றாற் பாடற்க என்பது பாற்பொருத்த விலக்கணம் அமுதெழுத்து, நஞ்செழுததென் றெழுத்துக் களை வரையறுத்து, அமுதவெழுத்துக்களே முதலில் வரப் பாடுக என்பது உணவுப் பொருத்தம் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் இவர்கட்கு இவ் வெழுத்துரியன என்று பகுத்துக்கொண்டு, அவ்வவர்க் குரிய எழுத்து முதலில் வர அவ்வவ் வருணத்தாரைப் பாடுக என்பது வருணப் பொருத்தம் இருபத்தேழு

நட்சத்திரங்களுக்கும் எழுத்துக்களைப் பிரித்துரிமைப் படுத்திப் பாடப்படுவோரின் நட்சத்திரத்துக்குத் தகப் பாட்டின் முதலெழுத்திவ்வாறு வரவேண்டுமென்பது நாட்பொருத்தமாம் தேவர், மனிதர், விலங்கு, நரகர் இக் கதிகட்குரிய எழுத்துக்களைக் கூறித் தேவ மனித கதிக்குரிய வெழுத்துகளை முதலிலமைக்கவென்பது கதிப் பொருத்தம் யாப்பிலககணத்துட் கூறப்பட்ட இன்ன சீர் இன்ன கணத்துக்குரியதென மொழிந்து, நீர், திங்கள், துறக்கம், நிலம் இவற்றிற்குரிய சீர்கள் முதலிலமையப் பாடுக என விதிப்பது கணப்பொருத்தம்

இப்பொருத்தங்களொன்றப் பாடின், பாடப் பெறுவோர் நன்மை பெறுவர் இல்லையேல் அவர்க்குச் செல்வம் போம்; நோயாம்; சுற்றம் அறும்; மரணமுறும்; சந்ததியில்லையாம் கடவுளரைப் பாடுவோர் பொருத்தங்களமையாது பாடினால், முற்கூறிய கேடுகள் பாடியோர்க்கு நேரும் எனப் பாட்டியலார் கூறுகின்றனர்

இவற்றுள் மங்கலப்பொருத்தம், சொற் பொருத் தமிவை சொல் நோக்கியும் கணப்பொருத்தம் சீர்நோக்கி யும், பிற பொருத்தங்கள் எழுத்து நோக்கியும் கூறப் பட்டுள்ளன

திருமணத்தின் முன் பெண்ணுக்கும் அவளை மணந்து கொள்ளும் ஆடவனுக்கும் சாதகமாராய்ந்து பொருத்தம் பார்த்து முடிவு செய்வதுபோன்றே, இங்கும் பாடற் புலவர் பாட்டாகிய மணப் பெண்ணுக்கும் அதனைப் பெறுவோனாகிய தலைவனுக்கும் பாட்டியல் விரித்துக் கூறிய இப்பொருத்தங்களெல்லாம் உள்ளனவா என்றாராய்ந்து பின்னரே பாமகளை இறைக்குச் சேர்த்து வராம்

இப்பாட்டியலிற் கூறப்படும் இரண்டாம் பிரிவு பல வகைப்பட்ட இலக்கிய நூல்கள் எவ்வாறமையவேண்டும் என்றும், எவ்வாறமைந்த நூல்கள் எப்பெயர்க்கு உரியனவென்றும் விளக்குவது பிள்ளைத்தமிழ், கலம்

பகம், அந்தாதி, கோவை, உலா, தூது, குறம், மடல், காதல், பள்ளு முதலிய பலவகை நூல்களின் அமைப்பிலக் கணங்கள் இப்பகுதியில் விளக்கப் பட்டுள்ளன அகப்பொருள், புறப்பொருள்களின் துறைகளாகப் பண்டு நின்றன பல இப்பகுதியிற் சிறு பிரபந்தங்களாகக் கொள்ளப் பட்டுள்ளன திருவாளர் வையாபுரிப் பிள்ளையவர்கள், 'திருக்குருகூர்ப்பள்ளு' முன்னுரையில் எழுதியுள்ள பின்வரும் பகுதியறியத் தகுவது .

தமிழிலுள்ள நூல்களை யொருவாறாக வகைப்படுத்தி யெண்ணித் தொண்ணூற்றாறென நமது முன்னோர்கள் வரையறை செய்திருக்கிறார்கள் இப்பாகுபாடு கி பி 1732-ல் இயற்றப்பெற்ற சதுரகரா தியிற் காணப்படுகின்றன சதுரகராதி இயற்றிய வீரமாமுனிவர் இப் பாகுபாட்டிற்கு ஆதாரமாகக் கொண்ட நூல் இது வென்று விளங்கவில்லை ஆனால் இப்பிரபந்தத் தொகை வீரமாமுனிவர் காலத்திற்கு முன்தொட்டே வழக்கிலிருந்து வருவதென்று நிச்சய மாகக் கூறலாம் ஏனெனில், அவர் காலத்திற்கு முன் பிருந்த புலவர்களுடைய நூல்களிலே இத்தொகை குறிக்கப்பட்டுள்ளது 'தொண்ணூற்றாறு கோலப் பிர பந்தங்கள் கொண்ட பிரான்' எனப் பழையதொரு நூலின் கண் வருகின்றது வச்சணந்திமாலையில் 55 பிரபந்தங்களும், பன்னிருபாட்டியலில் 60 பிரபந்தங் களும், இலக்கண விளக்கப் பாட்டியலில் 77 பிரபந்தங் களும் விளக்கப்பட்டிருக்கின்றன பிரபந்த மரவியல் என்ற நூலின் சிதைந்த பிரதியொன்று அரசாங்கத் தொன்னூல் நிலையத்திலுள்ளது, இதன் கண் தொண் ணூற்றாறு வகைப் பிரபந்தங்களும் கூறப்பட்டுள்ளன இதுபோன்றதொரு நூலினை யாதாரமாகக் கொண்டே வீரமாமுனிவர் பாகுபாடு செய்தனரெனக் கருதுதல் தகும்

# மொழியும் மக்களும்

ஒருவர் குழந்தைப் பருவத்தில் முதன் முதலில் தாயின் வழியாகப் பேசப் பழகிக் கொள்ளும் மொழியே தாய்மொழி எனப்படும் அதுவே குழந்தைக்கு இயல்பான மொழியாகும் அதனால்தான் குழந்தை முதன்முதல் பயிற்சிபெற வேண்டிய மொழி தாய்மொழியெனக் கொள்ளப்படுகிறது

சிந்தனையும், அதனை வெளியிடும் வாயிலாகிய மொழியும் ஒன்றையொன்று விட்டுப் பிரிக்கமுடியாத தொடர்பைப் பெற்றிருக்கின்றன சிந்தனைக்கும் மொழிக்கும் உள்ள இத்தொடர்பு தாய்மொழியின் வாயிலாக வளர்தலே சால்புடைத்தாம் இவ்வாறு ஒருவர் எண்ணத்தை மற்றொருவர் அறியத் தாய் மொழியே உதவுவதால் மக்களின் பொதுவாழ்க்கைக்கு இது இன்றியமையாத கருவியாகும் தாய்மொழியில் தாம் எண்ணியவற்றைத் தெளிவாகவும் எளிய நடையிலும் சொல்வதற்கும் எழுதுவதற்குமான பயிற்சியை ஒவ்வொருவரும் பெறவேண்டும் தாய்மொழியில் ஒரு பொருளைப் பற்றி எளிய முறையில் தெளிவாகப் பேசவும், ஒரு பொருளைப்பற்றித் தெளிவான எளிய முறையில் எழுதவுமான ஆற்றலை உண்டுபண்ணுவதே தாய் மொழிப் படிப்பின் அடிப்படையான நோக்கமாக வேண்டும்

**மனவெழுச்சிகளை வெளிப்படுத்தும் கருவி :**

*தாய் மொழியைப் பிறரோடு பழகுவதற்கு வேண்டும் கருவி யாகக் கொள்வதோடு தம் உணர்ச்சிகள், நுகர்வுகள், கருத்துகள் முதலியவற்றை வெளிப்படுத்தும் வாயிலாக வும் ஆக்கமுறச் செய்யவேண்டும் இவற்றை வெளியிடுவ தால் அவர்களுக்கு ஒரு தனிப்பட்ட மகிழ்ச்சி ஏற்படுவ தோடு அவர்களுடைய மனம், ஒழுக்கம், மனவெழுச்சி களாகிய உணர்ச்சுவைகள் முதலியவையும் பண்பட்டு வளர்ச்சியடைய இடமுண்டு மாணவர்களின் முழுவளர்ச்சிக்குத் தாய்மொழியே அடிப்படையானது என்னலாம் அதிலும், சிறப்பாகத் தாய்மொழியின் கண்ணுள்ள சிறந்த இலக்கியங்களும் அவர்களின் மன எழுச்சிகளைப் பண்படுத்தித் தனித்தன்மையை வளர்க்கும்*

**கற்கும் வாயில்:**

*அயல் மொழிகளின் வாயிலாகக் கலைகளைக் கற்கும்போது முதலில் அயல்மொழியை உணர்ந்து, அதன் பின்னர் அதன் வாயிலாகப் பொருளுணர்ந்து, அறிவை வளர்த்துக்கொள்வதில் காலம், முயற்சி, பணம் முதலியன மிகுதியாகச் செலவு ஆகின்றன தாய் மொழியிலேயே கற்று அறிவை வளர்த்துக் கொள்வதால் காலச்செலவும் பணச்செலவும் முயற்சியும் மிகுதியாகச் சுருங்கும் உறுதியான அறிவும் ஏற்படும் இதுவே இயற்கை முறையுமாகும்*

**இலக்கிய நயமுணர்ந்து இன்புறல்:**

*இலக்கிய நயமுணர்ந்து சுவைத்து இன்புறுதற்கும் தாய்மொழிப் பயிற்சியே சிறந்த கருவியாகும் இதுவே தாய்மொழிப் படிப்பின் மிகச் சிறந்த நோக்கமாகும் உயர்ந்த ஆசிரியர்களால் எழுதப்பட்ட நூல்கள் தொட்டனைத் தூறும் மணற்கேணிபோல் இன்பமூறும் ஊற்றுக்களாகும் இவற்றைப் பெற்று மகிழ்வது மக்களின் தலையாய கடனாகும்*

**படைப்பாற்றல் :**

மேலும் புதிய நூல்களைப் படைக்கும் ஆற்றலை வளர்ப்பதிலும் தாய்மொழிப் பயிற்சி உதவும் கவிதைகள், கட்டுரைகள், நாடகங்கள், சிறு கதைகள் முதலியவற்றைத் தாய்மொழியில் எழுதும் போது உணர்ச்சியை அப்படியே அமைக்கலாம் அதற்கு வேண்டிய அடிப்படை பள்ளியிலேயே போடுவதும், அதற்கு வேண்டிய வாய்ப்புக்களைத் தருவதும் தாய் மொழிப்படிப்பின் சிறந்த நோக்கங்களில் ஒன்றாகும்

**சிறந்த மனப்பயிற்சி:**

உலகவாழ்வில் காரணகாரிய முறையில் பொருள்களை உணர்வது என்னும் சிறந்த மனப்பயிற்சி அவசியத்தேவை இது தாய்மொழியின் வாயிலாக எளிதில் எய்தலாம் மேலும் தாய்மொழிப் படிப்பு ஒருவருடைய நிலைத்ததும் ஆழ்ந்ததுமான ஈடுபாட்டைக் கல்வியில் செலுத்தி முறைப்படி ஒழுங்காக வேலை செய்தல், குறித்ததைக் குறித்த மொழியில் வெளியிடல், கலைத்துறைகளிலிறங்கி உழைத்தல் முதலிய நற்பழக்கங்களில் பயிற்சியையும் அளிக்கும் என்றும் மொழிமுறையறிந்த அறிஞர் கூறுகின்றனர்

**நாடுவரலாறு – நாட்டுப்பற்று – மொழிப்பற்றுகள்:**

தாய்மொழி இலக்கியத்தைப் படிப்பதனால் நாட்டு வரலாறு, வாழ்க்கைமுறை, நடையுடை எண்ணங்கள், பழக்கவழக்கங்கள், பொருள், அரசியல், சமய நிலைகள், இசை, கூத்து முதலியவற்றின் நிலைகள், நாட்டில் நிறுவப்பட்ட நிலையங்கள் முதலியவற்றையும் நன்றாக உணர்வதற்கும், அவற்றின் இயல்புகளை நன்றாக ஆராய்வதற்குமான ஒரு நல்ல வாய்ப்பை அளிக்கும் வரலாற்றுப் படிப்பினாலோ, கல்வெட்டு, செப்புப் பட்டயங்கள், பழங்கட்டடங்கள், கோயில்கள், நாணயங்கள், அயல்நாட்டினர் குறிப்புக்கள் முதலிய பல

சான்றுகளாலோ, மொழிபெயர்ப்பு நூல்களாலோ முற்றிலும் உணரமுடியாத உண்மைகளாகும் இவை முன்னோர் எழுதிவைத்துச் சென்ற நூல்களைப் படிப்பதனால் மொழிப்பற்றும் அதன் வாயிலாக நாட்டுப்பற்றும் விளைப்பதும் தாய்மொழிப் படிப்பின் நோக்கமும் பயனுமாகும்

**திராவிடர்:**

தென்னிந்தியாவில் தொன்றுதொட்டு வாழ்ந்து வருகின்றவர்கள், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய மொழி பேசுகின்றவர்கள். திராவிடர் யாவர்? அவர் தென்னிந்தியப் பழங்குடி மக்களா? அல்லது மிகப் பலர் கூறியிருப்பது போல, வெளிநாட்டிலிருந்து இங்கு வந்தவர்களா? அங்ஙனமாயின், எங்கிருந்து வந்தனர்? எக்காலத்தில் வந்தனர்? என்று நீண்டகாலமாக அறிஞர்கள் ஆராய்ந்து வருகின்றனர் ஆயினும், இது காறும் ஒரு திட்டமான முடிவு ஏற்படவில்லை

திராவிடர் தென்னிந்தியப் பழங்குடி மக்களே யன்றிப் பிறநாட்டிலிருந்து வந்தவரல்லர் என்ற கொள்கையுடையவர் பின்வரும் ஆதாரங்களை எடுத்துக் காட்டுகின்றனர் புவியியலார் கருத்துபபடித் தென் னிந்தியா மிகப் பழமையானது இங்குத் தொன்மை மிக்க பழங் காலப் பாறைகளைக் காண்கிறோம் மானிட இன வர்ணனை வல்லாரும் ஆதி மக்களினம் தோன்றிய இடங்களில் தென்னிந்தியா ஒன்றெனக் கருதுகின்றனர் ஆகையால், தொன்மை வாய்ந்த தமிழ் மொழியை உருவாக்கிய திராவிடர், வழிவழியே இந்நாட்டில் பிறந்து இந்நாட்டில் வாழ்ந்த ஆதி மக்களே

மேற்கு ஆசிய மக்கள் சிலருடைய பண்டைய வழக்கங்கள் தென்னிந்தியருடைய பண்பாட்டோடு ஒத்திருப்பதை இவர்கள் ஒப்புக்கொள்ளுகின்றனர் ஆனால் அவர்கள் அதற்குக் கூறும் காரணம்

திராவிடரில் சிலர் அங்குச் சென்று குடியேறியிருக்கலா மென்பதாகும் பலூச்சிஸ்தானத்தில் வாழும் ஒரு வகையினர் பேசும் 'பிராஹூயி' மொழி தமிழோடு பலவாறு தொடர்புடையதாகக் காணப்படுவதுங்கூட திராவிடர் அவ்வழியாக வெளிநாட்டிற்குச் சென்ற பொழுது அவர்களில் ஒரு கூட்டத்தார் அங்குத் தங்கியிருந்ததினால் தோன்றியுள்ளதே யென்று இவர்கள் கருதுகின்றனர்

ஆனால் வேறு பலர் பல்வேறு வெளிநாட்டுப் பழக்க வழக்கங்களைத் திராவிடப்பண்பாட்டோடு தொடர்பு காட்டித் திராவிடத்தின் பிறப்பிடத்தைத் திட்டப் படுத்த முயன்றுள்ளனர் இத் தொடர்களைப் பற்றிச் சற்று ஆராய்தல் தேவை

மங்கோலியா, டூரான், எகிப்து ஆகிய நாடுகளில் வாழ்ந்த பழங்கால மக்களுக்கும் திராவிடருக்கும் சிற்சில பழக்க வழக்கங்களில் ஒற்றுமையுள்ளதாகக் கருதிச் சில அறிஞர்கள் இந்நாடுகளையும் திராவிடரின் தாயக மெனக் கூறுகின்றனர் ஆனால் இவ்வொற்றுமைகள் அடிப்படையானவையல்ல; தற்செயலானவைதாம் எனப் பிற்கால ஆராய்ச்சியாளரான மானிடவியலாளர் சிலர் விளக்கியுள்ளனர்

மேற்கு ஆசியாவைச்சார்ந்த மெசப்பொட்டேமியா, பாபிலோனியா, சுமோரியா, ஈழம் முதலிய மத்தியதரை நாடுகளில் வாழ்ந்த மக்களின் பண்பாடு திராவிடரது பண்பாட்டுடன் பலவகையிலும் அடிப்படைத் தொடர்பு பெற்றிருந்ததெனத் தெரிகிறது எடுத்துக் காட்டாக, மத்தியதரை நாட்டை சார்ந்த லிஷியர்களுக்கு 'தீரிம்மளி' என்ற பெயர் வழங்கி வந்ததாக அவர்கள் கல்வெட்டுக்கள்காட்டுகின்றன இது தமிழர் என்ற பெயருடன் சாலவும் பொருந்தியது மேற்கு ஆசியாவைச் சார்ந்த 'நிப்பர்', 'அர்', 'ஆஷுர்' முதலிய நகரங்களின் பெயர்கள் தமிழில் ஊர் என்பதை ஒத்திருப்பது நோக்குதற்குரியது தவிர, மேற்கு ஆசிய மக்களாகிய

'மிட்டானி', 'ஈலமைட்டு', 'கானசட்டு' முதலியோரின் மொழிகட்கும் திராவிட மொழிகளுக்குமுள்ள சில ஒற்றுமையும், ஈரானிலுள்ள காப்பியர்களுக்கும் திராவிடர்களுக்கும், உடலமைப்பில் தோன்றும் ஒற்றுமையும் இக்கொள்கையை வலியுறுத்துகின்றன மத்தியதரை மக்கள் ஈரானுக்கு வந்து, அங்கிருந்து ஒரு கூட்டத்தார் இந்தியாவை அடைந்திருக்கலாம் இங்ஙனம் உடற்கூறு, மொழி, பண்பாடு முதலியவற்றின் ஒற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டு இக் கொள்கை தோன்றியுளது மேலும் கடவுள் வழிபாடு, கோயிலமைப்பு, கோயில்களில் தேவரடியார் கூட்டத்தை நியமிப்பது முதலியவற்றில் சுமேரியருக்கும் தமிழருக்கும் ஒற்றுமை இருந்துள்ளது

மேற்கு ஆசிய மக்கள் பூமி தேவியை 'மலைப் பெண்' என்றழைத்து வணங்கியதும், அத் தேவிக்கும் ஆண்டுதோறும் 'அர்' நகரத்துச் சந்திரக் கடவுளுக்கும் விழா நடத்தியதும் தென்னிந்தியச் சிவனகோயில்களில் இன்றும் நடைபெறும் திருக்கலியாணத்தை நினைவூட்டுகின்றன தொல் பொருளாராய்ச்சியாளர் பர்செபலிஸ் மக்கள் பாம்பை வழிபட்டனரெனக் கண்டு பிடித்துள்ளது தென்னிந்திய வழக்கத்திற்கு முரணான தல்ல அன்றியும், முற்காலச் சமாதிக்குழிக் கட்டடங்கள் மத்தியதரை நாட்டிலும் தென்னிந்தியாவிலும் ஏறக்குறைய ஒரே முறையில் அமைந்துள்ளன ஆனால் தென்னிந்தியச் சமாதிகளில் இரும்புப்பொருள்கள் காணப்பட்டமை யால் இவை சற்றுப் பிற்காலத்தைச் சார்ந்தவையா இருக்கவேண்டும்

பாலஸ்தீனம், சைப்பிரஸ் போன்ற இடங்களி லுள்ள பிணக்குழிப் பொருள்களைப் போலவே, திருநெல்வேலி மாவட்டத்து ஆதிச்சநல்லூரில் கண்ட முதுமக்கள் தாழிகளில் பொன்னால் செய்த தலைக்கட்டுக்கள், வாய் மூடிகள் முதலியவை காணப் பட்டுள்ளன ஆனால் ஆதிச்சநல்லூர்க் குழிகளில் இவை

தவிர, முருகக் கடவுளின் ஆயுதமாகிய வேல், இரும்புக் கொடிப்பட்டம், வெண்கலத்தில் வார்த்தெடுத்த கோழி உருவம் முதலியவை கிடைத்துள்ளன முருகனுக்குக் கோழி வடிவம் பொறித்த கொடி அடையாளம் என்பது யாவருமறிந்த உண்மை முருகனுக்குக் காவடி எடுக்கும் அடியார்கள் வாயைத் துணியாலோ வேறு பொருளினாலோ மூடிக் கட்டிக்கொள்வது தொன்றுதொட்டு இருந்து வந்துள்ள தமிழ்நாட்டு வழக்கம்

கோழி வடிவமுள்ள சிற்பங்கள், பாலஸ்தீனம், சைப்பிரஸ் முதலிய நாடுகளில் காணப்படவில்லை அன்றியும் முருகனைப் போன்ற ஒரு கடவுளை அந்நாட்டு மக்கள் வழிபட்டனர் என்பதும் அறியோம் ஆயினும் பொன் வாய்முடியும் தலைக்கட்டும் அந்நாடுகளிலும் ஆதிச்ச நல்லூரிலும் காணக் காரணம் யாது? ஒருவேளை அங்கிருந்து தென்னிந்தியாவிற்கு வந்த வணிகர்கள் இத்தகைய அணிகலன்களை இங்கிருந்து தங்கள் நாட்டுக்கு எடுத்துச் சென்றிருக்கலாம் ஆனால் திராவிடர்கள், தமது பிறப்பிடமாகிய மத்தியதரை நாட்டிலிருந்து இப் பழக்க வழக்கங்களை இங்குக் கொண்டுவந்திருக்கலாம் என்பது அதைவிடப் பொருத்தமாகப்படுகிறது

மத்தியதரை நாட்டு பழைய சமாதிக்குழிகள் ஏறத்தாழக் கி மு 2,500 முதல் 1,500 வரையுள்ள காலத்தவையென ஆராய்ச்சி வல்லுநர் திட்டப்படுத்தியுள்ளனர் தென்னிந்தியச் சமாதிகளில் இரும்பு காணப்படுவதால் இவை சற்றுப் பிற்காலத்தைச் சார்ந்தவை கி மு பத்தாம் நூற்றாண்டையடுத்துத் தென்னிந்தியச்சமாதிக் குழிகளும், அவற்றைச் சார்ந்த பண்பாடும் தோன்றியிருக்கலாம் ஆகவே, திராவிடர் மத்தியதரை நாட்டிலிருந்து கி மு 2000-கி மு 1500-ல் புறப்பட்டுப் பலூசிஸ்தானம் வழியாக வடமேற்கு இந்தியாவை அடைந்து, பின்னர் ஆரியரது எதிர்ப்பால் தென்னாட்டை அடைந்து குடியேறினரென்பது இதுகாறும் கிடைத்துள்ள சான்றுகளால் ஒருவாறு தெளிவாகின்றது

திராவிடர்கள் இங்ஙனம் மத்தியதரை நாடு களிலிருந்து வந்தனராகில் பண்டு சிந்துநதிப் பள்ளத்தாக்கில் ஓங்கி வளர்ந்திருந்த நாகரிகத்தோடு இவர்களுக்குத் தொடர்பு ஏதேனும் இருந்ததா? இது பெரிய விவாதத்திற்குரியது சர் ஜான் மார்ஷல் உட்படத் தொல் பொருள் ஆராய்ச்சி வல்லுநர் பலர் திராவிடர் களே இந்நாகரிகத்தைத் தோற்றுவித்தவரெனக் கருது கின்றனர் ஆனால் திராவிடர்கள் இந்தியாவிற்குக் கி. மு 20ஆம் நூற்றாண்டின் பின்னரே வந்தவர்களென்றால் ஏறத்தாழக் கி மு 3000 ஆண்டுக்கு முன் தோன்றிய சிந்து வெளி நாகரிகத்தை அவர்கள் தோற்றுவித்தாரெனக் கூறுவது சிறிதும் பொருந்தாது

எனினும் மத்தியதரை நாகரிகம், சிந்து வெளிநாகரிகத்தின்மீது பெருஞ்செல்வாக்குப் பெற்றி ருந்தது மறுக்க முடியாதது கட்டட முறை, தெய்வ வழிவாடு முதலியவற்றிலிருந்து இது தெரியவருகின்றது ஆனால் சிந்துவெளி நாகரிகத்தைத் தோற்றுவித்தவர் மத்திய தரை நாட்டு மக்கள் மட்டுமல்ல பல இன மக்கள் சேர்ந்து உருவாக்கியதாகவே காணப்படுகின்றது அவர்களில் முக்கியமாக ஆஸ்திராலாயிடு பழங்குடி வகையினர், ஆல்ப்பைனர், மங்கோலியர், மத்தியதரை யினர் ஆகியோரனைவரும் கலந்திருந்தனர் ஒருவேளை திராவிடர்கள் புறப்படுவதற்கு முன்னரே மத்தியதரை மக்களில் ஒரு கூட்டத்தார் நாடோடிகளாக வந்து, சிந்து நதிக்கரையில் குடியேறி, அதற்கு முன்னிருந்த பண்டைய ஆஸ்திரலாயிடு மக்களோடும் மங்கோலியரோடும் கலந்திருக்கலாம்

ஏறத்தாழக் கி மு பத்தாம் நூற்றாண்டில் தென் னிந்தியாவை அடைந்ததாகக் கருதப்படும் திராவிடர் விரைவில் சிறந்த நாகரிகத்தை உருவாக்கினர் முன்னர் ஆங்காங்கிருந்த ஆஸ்திரலாயிடு பழங்குடி மக்களின் சில பழக்க வழக்கங்கள் திராவிடரது பண்பாட்டோடு கலந்தன சில காலம் சென்ற பின், அதாவது ஏறத்தாழக்

கி மு ஆறாம் நூற்றாண்டிற்குப் பின், ஆரியர்கள் சிலர் தெற்கு வந்து திராவிடரோடு கலந்துகொண்டனர் பௌத்தர்கள், சமணர்கள், பிராமணர்கள் இம்மூவகை யினரும், சிறு சிறு கூட்டங்களாகத் தென்னிந்தியாவிற்கு வந்தனர் பிராமணர் முதலிலேயே அரசர்களது செல்வாக்கையும் அரசவையில் சிறந்த பதவியையும் பெற்றனர் நாளடைவில் ஆரியருடைய சில கருத்துக்கள், கொள்கைகள், பழக்க வழக்கங்கள் யாவும் திராவிடப் பண்பாட்டோடு கலந்தன அதுபோலவே திராவிட ருடைய பழக்கங்கள் சிலவற்றை ஆரியரும் பெற்றுக் கொண்டனர் தென்னிந்திய நாகரிகம் அடிப்படையாகத் திராவிடரது நாகரிகமாயிருப்பினும் பல துறைகளில் ஆரியருடைய கருத்துக்களும் சேரப்பெற்று வளர்ந்துள்ளது

**திராவிட மொழிகள்**

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கும் திராவிட மொழிகளில் முக்கியமானவை துளு, கொங்கணி முதலியவை திராவிட மொழிகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றியிருப்பினும் பேச்சில் மட்டுமே வழக்கத்திலிருக்கின்றன; எழுதும் மொழிகளாக உருவாகவில்லை

தெலுங்கு, கன்னடம், மலையாளம் இம்மூன்றும் தமிழுடன் தொடர்புடையவை மிகப் பழங்காலத்தில் தமிழையோ அல்லது தமிழுடன் சார்புடைய மொழியை யோதான் இம்மக்கள் யாவரும் பேசினரெனத் தோன்றுகின்றது ஆயின், 'திராவிட'த்திலிருந்து 'தமிழ்' என்ற பெயர் தோன்றியதா அல்லது தமிழிலிருந்து திராவிடம் தோன்றியதா என்பதுபற்றி வேற்றுமைப் பட்ட கருத்துகள் வெளிவந்துள்ளன ஆரியர் முற்காலத்தில் தென்னாடு சென்ற 'தஸ்யுக்களை'த் திராவிடரென அழைத்து வந்தனரென்றும், அதிலிருந்தே அவரது மொழி திராவிடமெனும்பெயர் பெற்ற தென்றும் திராவிடத்தின் திரிசொல்லாகக் கால அளவில்

முறையே 'திராமிட' 'திராமிள' 'தமிள்' 'தமிழ்'என மாறிற்றொன்றும் சிலர் கருதினர் ஆனால் தமிழ் மொழியோ தொன்மை உடையது ஆரியர் தென்னாட்டுக்கு வந்து மொழித் தொடர்பு அமைப்பதற்கு முன்னதாகவே வளம் பெற்றிருந்தது அறிஞர் சீனிவாசப் பிள்ளை விளக்கியிருப்பது போல் இத்துணைத் தொன்மை வாய்ந்த தமிழ்மொழிக்குப் பிறர் பெயர் அளிக்கும் வரையில் பெயரில்லாமலிருந்திருக்க முடியாது மேலும் 'ழ' என்ற எழுத்துத் தமிழுக்குத் தனிப்பட்ட முறையிலமைந்தது இந்தியாவில் வேறு எங்கும் காணோம் தமிழ் என்பது 'தமி' அல்லது இனிமை எனப் பொருள் தரும் சொல்லிருந்து தோன்றியதாகப் பலர் கருதுகின்றனர் எனவே தமிழிலிருந்து திராவிடம் காலப் போக்கில் மாறியிருக்கலாமென்ற கொள்கையைப் பலரும் ஆதரிக்கின்றனர் வேறு சிலர் திராவிடம் என்ற சொல்லே ஆரியரல்லாதாரிடமிருந்து ஆரியர் முதலில் பெற்றிருக்கலாமெனக் கருதுகின்றனர்

இது எப்படிருப்பினும் கி மு மூன்றாம் நூற்றாண்குக் முன்னரே தமிழ் வளர்ச்சி பெற்ற நிலையை அடைந்ததெனக் கருதலாம் மதுரை திருநெல்வேலி மாவட்டங்களில் காணப்படும் பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்ட சிறு கல்வெட்டுக்கள் ஆங்காங்குச் சில பிராகிருதச் சொற்கள் சேர்ந்திருப்பினும், பொதுவில் தமிழ் மொழியிலுள்ளவையெனப் பலர் கூறுகின்றனர் கி பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் தோன்றியுள்ள சங்க நூல்கள் அக்காலத்திற்குமுன் தமிழ் முதிர்ச்சி பெற்ற நிலையை அடைந்ததென்பதைத் தெரிவிக்கின்றது

**கன்னடம்:**

கன்னட நாட்டில் ஏறத்தாழ கி மு ஐந்தாம் நூற்றாண்டு வரையில் தமிழையே கையாண்டிருக்க வேண்டும் அதற்குப்பின் 'பூர்வத ஹளகன்னடம்' என்ற பழைய கன்னடம் உருவானது கிபி இரண்டாம்

நூற்றாண்டை சார்ந்த ஒரு கிரேக்க நாடகத்தில் பழைய கன்னட மொழியிலமைந்துள்ளசில வாக்கியங்கள் தென்பட்டுள்ளன சமணர்களது செல்வாக்கினால் சமஸ்கிருதம் கன்னட மொழியோடு கலந்தது கி பி ஐந்தாம் நூற்றாண்டு முதல், பழைய கன்னடத்தில் அமைந்துள்ள கல்வெட்டுக்களைக் காணலாம் நாள்செல்லச் செல்ல சமஸ்கிருதக் கலப்பு மிகுதியாகக் காணப்பட்டுள்ளதாயினும், கன்னட மொழியின் அடிப்படை அமைப்பு, திராவிட மொழிகளை ஒட்டியது தானென்பதற்கு ஐயமில்லை கன்னட எழுத்து வடிவம் கிரந்த எழுத்தைப்போல அமைந்துள்ளது மேலும் கன்னடத்தின் இலக்கண அமைப்பும் தமிழின் இலக்கண அமைப்பை ஒத்திருக்கின்றன

**தெலுங்கு :**

முதன் முதலில் தமிழிலிருந்து பிரிந்து தனியாக அமைந்தது தெலுங்கு மொழியே பௌத்தரும் சமணரும் தக்காணத்தில் செல்வாக்குப் பெற்றது முதல் பிராகிருதம் பழைய தமிழோடு மிகுதியாகக் கலந்து தெலுங்கெனும்தனி மொழி பிறந்தது பிற்காலத்தில் சமஸ்கிருதத்தின் செல்வாக்கு மிகுதியாகக் கலந்தது கி பி 5-7ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுக்கள் சில தெலுங்கு மொழி தனி இயல்படைந்துவிட்டதெனத் தெரிவிக்கின்றன ஆயினும் தெலுங்கு திராவிட மொழியை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளதே கி பி ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த குமாரிலபட்டர் தெலுங்கு மொழியைத் 'திராவிட பாஷா' எனவே குறுப்பிட்டுள்ளார் தெலுங்கு மொழிக்கும் கன்னடத் திற்கும் பல முறையில் ஒற்றுமை காணப் பட்டுளது ஆனால் தமிழோடும் சமஸ்கிருதத்தோடும் தெலுங்கு மிகத் தொடர்பு பெற்றுளது கி பி ஆறாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டுள்ள 'ஜனாஸ்ரபிரந்தஸ்' என்பது தெலுங்கு அணி இலக்கண முதல் நூல் அதில் தெலுங்கு மொழியின் பல சொல் வழக்குகள் கையாளப் பட்டிருந்த

போதிலும் அடப்படையாக சமஸ்கிரு தத்திலே அது அமைந்துளது கி பி 11ஆம் நூற்றாண்டில் தோன்றிய நன்னய்யரின் பாரத மொழிபெயர்ப்புத்தான் முதன் முதல் தெலுங்கில் உருவான சிறந்த இலக்கிய நூல் எனலாம்

**மலையாளம் :**

இது திராவிட மொழிகளில் ஒன்றென்பதை யாவரும் ஒப்புக்கொண்டபோதிலும் இதன் தோற்றம் பற்றி ஒன்றுக்கொன்று முரணான கொள்கைகள் தோன்றியுள்ளன தமிழிலிருந்து மலையாளம் தோன்றினதாகவே மிகப் பலரும் கருதி வந்துள்ளனர் கிறிஸ்து சகாப்தத்தின் முன்னரே, 'செந்தமிழ்', 'கொடுந்தமிழ்' என இருவகையாகத் தமிழ் வேறுபட்டு வளர்ந்தது செந்தமிழ், இலக்கிய முறையில் தனித் தமிழாக முதிர்ச்சி பெற்று வந்தது கொடுந் தமிழோவெனின் பேச்சு முறையில் வழக்கிலிருந்ததே தென்னிந்தியாவில் மேற்குக் கடலோர நாட்டில் கொடுந் தமிழ் வழக்கத்திலிருந்தது

கொடுந்தமிழின் ஒருவகையான நிலையிலிருந்தே நாளடைவில் மலையாளம் தோன்றிற்றென்பது பலருடய கருத்து ஏறத்தாழ கி பி 5ஆம் நூற்றாண்டில் இம்மாற்றம் தொடங்கியதெனலாம் ஆனால் இக்கருத்துக்கு முரணாக மலையாளம் தனிப்பட்டுத் தோன்றிய மொழி, தமிழே அதிலிருந்து தோன்றியது என்ற கொள்கையைச் சிலர் வெளிப்படுத்தியுள்ளனர் ஆனால் இக் கொள்கைக்கு அடிப்படைச் சான்றுகளில்லை தென்னாட்டு மொழி வரலாற்றுக்கும் அது ஒத்திருப்ப தாகக் காணப்பட வில்லை முதன் முதல் பழைய மலையாளத்தில் தோன்றியவை மக்களின் பாட்டுக்க ளாகும் ஏறத்தாழ, கி பி 9 ஆம் நூற்றாண்டு முதலாகப் பிராமணிப் பாட்டு, சாஸ்தாப்பாட்டு, ஓணப் பாட்டு, திருவாதிரைப் பாட்டுப் போன்ற பாட்டுவகைகள் தோன்றின பெரும்பாலும்

இவை தமிழ்ப்பாடல்களாகவே இருப்பினும் புதுமொழி யின் அம்சங்கள் கலந்திருந்தன மலையாளத் தில் தனிப்பட்ட முதல் இலக்கிய நூலென்பது ஏறத்தாழ 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இராமசரிதமெனலாம் இதிலும் தமிழின் செல்வாக்கு மிகுதியாகக் காணப்படி னும், இது பழைய மலையாளத்தில் அமைக்கப்பட்ட நூலேயாகும் இதற்குள் சமஸ்கிருதம், மலையாளத்தில் மாபெரும் செல்வாக்குப் பெற்றது

## திராவிடமொழிகள் ஒப்பிலக்கணம்

தென்னிந்திய மொழிகளுக்குத் திராவிட மொழிகள் எனப் பொதுவாகப் பெயர் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, குடகம் ஆகிய மொழிகளும், துடவர் மொழி, கோடர் மொழி, கோண்டு மொழி, கவர் மொழி, மாலர் மொழி, உராவன் மொழி ஆகிய மொழிகளும், பிராஹுயி, பார்ஜி ஆகிய மொழிகளும் திராவிட மொழிகள் என மதிக்கப்படுகின்றன முதலிற் குறிப்பிட்ட ஆறு மொழிகளைப் பொதுவாகத் திருந்திய மொழிகளெனவும், அடுத்துக் கூறப்பட்ட ஆறு மொழிகளைத் திருத்தம்பெறா மொழிகள் எனவும் கூறுவது வழக்கம் பலூசிஸ்தானத்திற் பேசப்படும் பிராஹுயி மொழியும், ஜக்தல்பூரிற் பேசப்படும் பார்ஜி மொழியும் திராவிட மொழிகளின் வரிசையில் வைத்து எண்ணப்படும் முதலிற் குறிப்பிட்ட நான்கு மொழிகளும் நெடுங்கணக்கும் இலக்கியமும் பெற்றுள்ளன துளு கன்னட எழுத்துக்களாலும், கவர் மொழி ஒரியா எழுத்துக்களாலும் எழுதப்படுகின்றன குடகு, துடவர் மொழி, கோடர் மொழி, கோண்டு மொழி, உராவன் மொழி, மாலர் மொழி ஆகிய மொழிகள் ஆங்கில எழுத்துக்களால் எழுதப்படுகின்றன அஃதாவது, இம்மொழிகள் எல்லாம் பேச்சுவழக்கில் மாத்திரம் உள்ள மொழிகள் என்பது கருத்து பிராஹுயி என்ற மொழியைத் திராவிட மொழிகளில் ஒன்றாக வைத்துக் கிரியர்சன் போன்றவர்கள்

எழுதியுள்ளார்கள் பார்ஜி என்ற மொழியைத் திராவிட மொழிகளில் ஒன்றாகக் கொள்ள வேண்டுமென்று பேராசிரியர் பரோவும், பேராசிரியர் பட்டாசாரியாரும் 1953-ல் கண்டுபிடித்து எழுதினார்கள் பார்ஜீ எனப்படுவ தனை அம்மொழியினர் 'காப்' மொழி என்கின்றனர் குடியானவர் என்ற பொருளில் தெலுங்கின்கண் வழங்கும் 'காபு' என்ற சொல்லோடு இது தொடர் புடையது

இம் மொழிகளெல்லாம் ஒரு தனிக் குடும்பத்தைச் சேர்ந்தவை என்றும், உலகில் உள்ள பிற குடும்பங்களிற் சேர்த்து வைத்து எண்ணத் தக்கன அல்ல என்றும் அறிஞர்கள் கருதுகின்றார்கள் இந்திய-ஐரோப்பியக் குடும்பத்திலோ, முண்டா மொழிக் குடும்பத்திலோ, யூரல்-ஆல்ட்டேயிக் குடும்பத்திலோ, திபெத்தோ பர்மியக் குடும்பத்திலோ வைத்து இவற்றை எண்ணுதல் இயலாது என்பது மொழியியல் வல்ல அறிஞர் பலர் துணிபு

சில மொழிகளை ஒரு குடும்பத்தின்பாற் சேர்த்தல் கூடுமா, கூடாதா என்பதைப்பற்றிச் சிந்திக்கும்போது சில அடிப்படைக் கருத்துகளைக் கொண்டு ஆராய வேண்டுவது முறைமை ஆகும் அவ்வாறு ஆராயுங்கால், மக்கள் நாள்தொறும் நாழிகைதொறும் பேச வேண்டிய இன்றியமையாமையொடு கூடிய அடிப்படைச் சொற்களைக் குறிப்பிட்ட மொழிகள் பெற்றிருக் கின்றனவா என்றும், அச்சொற்கள் அம்மொழிகளுக்கே உரியனவா, அன்றிப் பிற மொழிகளொடு தொடர் புடையனவா என்றும், தாய் தந்தையர் முதலிய உறவுப்பெயர்களும், உடம்பின் பல்வேறு உறுப்புக்களின் பெயர்களும் ஒன்று இரண்டு போன்ற எண்ணுப் பெயர்களும், நான், நீ, அவன் போன்ற இடப் பெயர்களும் குறிப்பிட்ட மொழிகளின்கண் காணப்படுபவை வேறு தொகுதியான மொழிகளிற் காணப்படுகின்றனவா என்றும் ஆராய்தல் வேண்டும் அல்லாமலும், இலக்கண

வகையாலும் குறிப்பிட்ட சில மொழிகள் வேறு தொகுதியின் மொழிகளோடு ஒத்துள்ளனவா என்றும் ஆராய்தல் வேண்டும் இத்தகைய ஆராய்ச்சிகளைத் திராவிட மொழிகளைப்பற்றி நிகழ்த்தினால், இவை உலகில் உள்ளனவாக அறியப் படும் வேறு குடும்ப மொழிகளோடு இணைக்கத் தக்கவை அல்ல என்பது வெளியாகும்

திராவிட மொழிகளின் சிறந்த பொதுப் பண்புகளாக அமைந்திருப்பவற்றுள் சில குறிப்பிடத் தக்கவை· 1 திணை இரண்டாகவும், பால் ஐந்தாகவும், அறிவுக்கு ஒக்கும் வகையில் பகுக்கப்பட்டிருக்கின்றன. சில மொழிகளில் கற்பனை காரணமாகப் பால் வேறுபாடு அமைக்கப்பட்டிருப்பதைப் போலத் திராவிட மொழிகளில் பால் வேறுபாடு அமைக்கப்படவில்லை (திராவிடத்தில், மக்கட்சுட்டு-உயர்திணை; அவர் அல்லாத பிற அஃறிணை கல் என்பது எப்பொழுதும் அஃறிணை மனைவி என்னும் சொல் எப்போதும் பெண்பால் வேறு மொழியில், சிலா-பெண்பால்; களத்ரம்-அலிப்பால்; தாரா-ஆண்பால்) 2 பெயர்ச் சொற்களில் ஒருமை, பன்மை என்ற எண் வேறுபாடு உண்டேயொழிய ஒருமை, இருமை, பன்மை என்ற வழக்கு இல்லை 3 பெயர்ச் சொற்களுக்கு வேற்றுமை உருபுகள் ஈற்றில்தான் சேர்க்கப்படும்; அவ்வுருபுகள் ஒருமை பன்மை ஆகிய எண்களுக்கு ஒத்த ஒரேவித மான உரு ஆகிய மாறுதலைப்போலத் திராவிட மொழி களில் மாறுதல் இல்லை 4 வேறு சில மொழிகளிற் பெயரடைச் சொற்களுக்கு வேற்றுமை உருபுகள் ஏற்றுதலைப் போலத் திராவிட மொழிகளில் ஏற்றுதல் வழக்கம் இல்லை 5 ஈற்றில் மெய்யெழுத்தில் முடியும் சொற்களுக்குப் பின் எளிமை காரணமாக ஓர் உயிரொலியைக் கூட்டுவது பெரு வழக்கமாக இருக்கிறது 6 அஃறிணைப் பெயர்களுள் சில ஒருமைப் பொருளிலும் பன்மைப் பொருளிலும் வழங்குதல் உண்டு 7 வந்த இருந்த என்ற பெயரெச்சங்களோடு அவன் என்னும் இடப்பெயர்ச்

சொல்லைச் சேர்த்து வந்தவன் இருந்தவன் போன்ற வினைலணையும் பெயர்களை அமைக்கும் ஆற்றல் இம்மொழிகளுக்குண்டு

இவ்வாறு அமைந்துள்ள சில பொதுப் பண்புகள் காரணமாகவும், பெருவாரியாகக் காணப்படுகிற ஒத்த சொற்பொருள் காரணமாகவும் இம்மொழிகளைத் திராவிட, மொழிகள் என ஓர் இனமாகக் கொண்டு வழங்குவது பொருத்தமுடையதாகவே இருந்து வருகிறது.

ஒலி வகையில் அகர ஆகாரம், இகர ஈகாரம், உகர ஊகாரம், எகர ஏகாரம், ஐகாரம், ஒகர ஓகாரம், ஔகாரம் ஆகிய உயிரொலிகள் இம்மொழிகளிற் பொதுவாக உண்டு வடமொழியிலும், வடமொழியின் அடியாகப் பிறந்த மொழிகளிலும் எகரம், ஒகரம் ஆகிய குற்றெழுத்துக்களுக்குத் தனி எழுத்துக்கள் இல்லாமல் இருப்பனவும், திராவிட மொழிகளில் இவற்றிற்கான தனி எழுத்துக்கள் இருத்தல் ஒரு தனிச் சிறப்பு

மெய்யொலி களில் க வரிசையில் நான்கு எழுத்தும், ச வரிசையில் நான்கு எழுத்தும், ட, த, ப வகைகளில் நன்னான்கு எழுத்தும் வடமொழியில் இருத்தலைப் போலத் தமிழில் இல்லை தெலுங்கு, கன்னட, மலையாள மொழிகளில் இந்த வரிசையில் நன்னான்கு எழுத்துக்கள் இந்தாலும், அவை ஒலி வேறுபாடுகளே யொழிய ஒலிய வேறு பாடுகள் இல்லை இம்மொழிகளில் லகர ளகரங்கள் ஒலிய வேறுபாடு உடையன ழகரமும் ளகரமும் தமிழ், மலையாளம், பழங்கன்னடம், பழந்தெலுங்கு ஆகிய மொழிகளுக்குச் சிறப்பாக அமைந்த எழுத்துக்கள் இம்மொழிகள் தம்முள்ளே சொற்களின் ஈற்று ஆகாரம் ஐகாரம் ஆகவோ ஏகாரமாகவோ திரிதல் உண்டு (த தலை; ம தல; தெ தல; க தலெ) ஈற்றில் சில இடங்களில் உகரத்தைச்

சேர்த்தல் ஓர் இயல்பு ( த பால்-பாலு; ம கல்-கல்லு; தெ மந்-மந்து)

வல்லோசையுடைய மெய்யெழுத்துக்கள் சில சொற்களின் இடையிலும் கடையிலும் அவ் வல்லோசையினின்று நெகிழ்ந்து மெல்லோசை பெறுதல் உண்டு (கடவுள், அகம், மதகு ஆகிய சொற்களில் வரும் 'க்' ஒலியை ஒப்பிட்டுப் பார்க்க) திராவிட மொழிகள் ஒன்றனுட் சில சொற்களில் வரும் ழகரம் வேறு திராவிட மொழிகளில் ளகரம் அல்லது டகரம் ஆதல் உண்டு (த கோழி; தெ கோடி; க கோளி) வல்லோசைகளில் முடியும் சொற்களின் ஈற்றெழுத்திற்கு முன்னால் ஒரு மெல்லின எழுத்துத் தோன்றுதல் என்பது ஒரு வழக்காகக் காணப்படுகிறது (த ஈடு-ஈண்டு; இரடு-இரண்டு) உயிரெழுத்துக்கள் இருமருங்கும் வரும் இடங்களில், அவற்றை இயைத்து வைக்கக்கூடிய உடம்படுமெய் என்பது தோன்றுதல் ஒரு வழக்கம் அவ்வாறு தோன்றும் உடம்படுமெய் ம், ந், வ், ய் என்பவற்றுள் ஒன்று

திராவிட மொழிகளில் இரண்டு அல்லது மூன்று மெய்யெழுத்துக்கள் கூடி நின்று சொற்களின் தொடக்கத்தின்கண் வரமாட்டா; அவ்வாறே ஈற்றிலும் நிற்க மாட்டா ஆங்கிலத்தில் ஸ்ட்ரெங்த் என்று வருதலைப்போலத் திராவிட மொழிகளில் வருதல் இயலாது சொற்களின் உச்சரிப்பை எளிமைப் படுத்துதற் காக அவற்றின் இடையில் உகரம் சேர்க்கப்படுவதுண்டு (சமஸ் தத்வ; த தத்துவம்) திராவிட மொழிகளில் அசையழுத்தம் இல்லை (ஆங்கிலத்தில் கன்ட்ராக்ட் என்பது வினைச் சொல்; கான்ட்ராக்ட் என்பது பெயர்ச்சொல்) இதைப்போன்ற வேறுபட்ட அசையழுத்தத்தினால் ஆங்கிலத்திற் பொருள் வேறுபாடு விளைதலைப்போலத் திராவிட மொழிகளில் உண்டாதல் இல்லை

திராவிட மொழிகளில் உள்ள அடிவேர்கள் வினைப் பொருள்களிலும் பெயர்ப் பொருள்களிலும்

பெயரடைப் பொருள்களிலும் வழங்கக்கூடிய பெற்றியை உடையன சீன மொழியில் உள்ளவற்றைப் போல் எல்லாச் சொற்களும் ஒவ்வோர் அசையால் மாத்திரம் இயன்றன அல்ல செமிட்டிக் மொழிகளில் அடிவேர்களின் இடையே சேர்க்கப்படுகிற உயிரொலி களின் காரணமாகப் பொருள் வேறுபாடு உண்டாதல் இல்லை அடிவேர்கள் இந்திய-ஐரோப்பிய மொழிகளிற் சொல்லின்கண் எங்கேயாவது ஒளித்துக் கொண்டிருப் பதைப் போலன்றித் திராவிட மொழிகளில் அடிவேர்கள் சொல்லின் முதலிலேயே நிற்றலை எளிதிற் காணலாம் அடிவேர்களில் உள்ள உயிரொலியின் நீட்டமோ குறுக்கமோ சொற்கள் பலவற்றிலும் பெரும்பாலும் அவ்வாறு காணப்படுகிறது (த பெறு-பெறுகிறான் பெற்றார்-பெறுவான்-பெறுதல்) சில வேளைகளில் அடிவேரில் உள்ள உயிரொலியை நீட்டினால் தொழிற் பெயர்கள் பிறக்கும் (த பெறு-பேறு) அடிவேரில் உள்ள ஈற்று மெய்யெழுத்தை இரட்டித்தால் சில இலக்கண வேறுபாடுகள் விளைகின்றன அவையாவன: 1 பெயர்ச் சொல்லைப் பெயரடை ஆக்குதல் (மாடு தோல்-மாட்டுத் தோல்) 2 செயப்படுபொருள் குன்றிய வினையைக் குன்றாவினை ஆக்குதல் (ஓடு-ஓட்டு) 3 இறந்தகால வினை ஆக்குதல் (புகு-புக்கான்) 4 தொழிற் பெயர்கள் உண்டாக்குதல் (எழுது-எழுத்து)

பெயர்ச்சொற்களில் எண்ணையும் பாலையும் சேர்த்து உணர்த்துவதற்காக ஒரே இலக்கணக்கூறு பயன்படுகிறது (அவன் வந்தான்-ஒருமையும் ஆண்பாலும் உணர்த்தப்படுகின்றன) ஆண்பாற் பன்மைக்கும் பெண்பாற் பன்மைக்கும் பொதுவாக ஒரே ஈறு வழங்கப்டுகிறது (த அர்; தெ அரு) அஃறிணைப் பன்மையைக் காட்ட வ் வழங்குகிறது (ப த அவ்; இ த அவை, ம அவ, தெ அலி; க அவு,கோ அவ்; பார்ஜி அவ்)

வடமொழியில் ஒரே இலக்கணக்கூறு எண்ணையும் வேற்றுமையையும் உணர்த்துவதாய் இருப்பவும்,

திராவிடமொழிகளில் ஒரு தொடர்பம் வேற்றுமை உருபாகமாத்திரம் நிற்கிறது முதல் வேற்றுமையில் வரும் பெயர்ச்சொற்களில் மாறுதல் இல்லை இரண்டாம் வேற்றுமையில் உருபாகப் பொதுவில் ஐ ஏ அம், அது ஆகியவை காணப்படுகின்றன இவையெல்லாம் ஏதாவது ஒன்றினின்று கிளைத்தவையேயாகும் மூன்றாம் வேற்றுமை உருபாகப் பொதுவில் ஐ ஏ, அம், அது ஆகியவைகாணப்படுகின்றன இவையெல்லாம் ஏதாவது ஒன்றினின்று கிளைத்தவையேயாகும் மூன்றாம் வேற்றுமை உருபாக ஆன் (அல்லது) ஆல், இன் அல்லது இம் காணப்படுகிறது உடனிகழ்ச்சிப் பொருளில் ஓடு அல்லது ஒடு பெருவழக்கில் உள்ளது நான்காம் வேற்றுமைஉருபு கு அல்லது கெ ஐந்தன் உருபு இன் அல்லது இம் ஆறன் உருபு அது அல்லது அத அல்லது உடைய அல்லது உடே; ஏழன் உருபு இன், இல், கண், உள், ஒள் ஆகியவற்றுள் ஒன்று எட்டாம் வேற்றுமைக்காகப் பெயர்ச்சொற்களின் ஈற்றில் ஏகாரத்தைக் கூட்டி வழங்குவது பெருவழக்கு

எண்ணுப் பெயர்கள் அஃறிணை எண் வாய்பாட்டி லிருந்து கிளைத்தன என்பது நம்பப்படுகின்றது ஓர், இர், மூ, நால், ஐ, அறு, எழ், எண் ஆகிய பெயரடைச் சொற்கள் வடிவத்திலிருந்து ஒன்று, இரண்டு, மூன்று போன்ற வடிவங்கள் தமிழிலும், ஒண்ணு, ரெண்டு, மூந்து போன்றன மலையாளத்திலும், ஒகட்டி, ரெண்டு, மூடு போன்றன தெலுங்கிலும் ஒந்து, எரடு, மூரு போன்றன கன்னட மொழியிலும், ஒஞ்சி, ரட்டி, மூஜி போன்றன துளுவிலும், ஒரத், இரத், மூசித் போன்றன பிராஹுயி மொழியிலும், ஒகுத், இரடு, மூது போன்றன பார்ஜி மொழியிலும் காணப்படுகின்றன

தன்மை ஒருமை இடப்பெயராகத் தோன்றித் திராவிட மொழிகளில் அமைந்து வந்த வடிவம் ஆன் அல்லது யான் அல்லது யேன் என மதிக்கப்படுகிறது இது சமஸ்கிருத அஹம் அல்லது அஸ்மத் என்பதோடு

ஒத்திருக்கவில்லை அவ்வாறே, முன்னிலை ஒருமை இடப் பெயரில் நீ அல்லது நீன் திராவிட மொழிகளுக்குப் பொதுவாக அமைந்த சொல் இதனோடு சமஸ்கிருதத்திலுள்ள துவம் ஒத்திருக்கவில்லை அவன், அவள், அவர், அது, அவை ஆகிய ஏனைய இடப்பெயர்களில் திராவிட ஒலி இலக்கண இயல்பிற்கு ஏற்பத் திராவிட மொழி ஒவ்வொன்றிலும் சிறிது சிறிது வேறுபாடு விளைந்துளது

சுட்டுப் பெயர்கள் எல்லாம் சேய்மைச்சுட்டு, அண்மைச்சுட்டு, இடைநிலைச்சுட்டு என வழங்கு கின்றன இவற்றிற்கு அடிப்படையாக நிற்கும் ஒலிகள் முறையே அ அல்லது ஆ இ அல்லது ஈ உ அல்லது ஊ அவ்வாறே வினாப் பொருளில் எகாரம் அல்லது ஏகாரம் பயன்படுகிறது

வினைச் சொற்கள் தன்வினை எனவும் பிறவினை எனவும், செயப்படு பொருள் குன்றிய வினை, குன்றாவினை எனவும் பிரிக்கப்படும் வடமொழியிற் காணப்படுமாறு போல ஆத்மநேபதம், பரைஸ்மபதம் என்ற வழக்குக்கள் இம்மொழிகளிலே இல்லை இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்று காலங்களில் வகுக்கப் பட்டிருக்கின்றன இறந்த காலத்தின் இடைநிலையாக 'த்' என்பதும், நிகழ்காலத்தின் இடைநிலையாக 'கின்று' அல்லது 'கிறு' என்பதும், எதிர்காலத்தின் இடைநிலை யாக 'ப்' அல்லது 'வ்' அல்லது 'க்' என்பதும் வழங்கு கின்றன சார்வு, செல்வு, வாழ்வு என்ற தொழிற்பெயர் களின் அடியாகச் சார்வேன், செல்வேன், வாழ்வேன் போன்ற வினைமுற்றுச் சொற்கள் தோன்றின என்பது ஒரு சாரார் கொள்கை செய்தென் எச்சங்களும், செயவென் எச்சங்களும், செய்தேல் எச்சங்களும், செய்க என்ற வாய்பாடுகளும் திராவிட மொழிகளிற் பொது வாக வழங்குவன

திராவிட மொழிகளின் தொடரிலக்கணம் பொதுவாக ஒத்து அமைந்துள்ளது தொடர்களிற்

சொற்கள் நிற்கும் முறை எழுவாய், செயற்படுபொருள், பயனிலை என்ற வரிசையாகும்

இவை திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தினின்று கிடைக்கக்கூடிய சுருக்கமான செய்திகளாகும் திராவிட மொழி ஒப்பிலக்கணம் என்பது முதன் முதலில் டாக்டர் ஆர் கால்டுவெல் என்பவரால் 1856ஆம் ஆண்டில் புத்தகவடிவில் எழுதப்பட்டு வெளிப்படுத்தப் பட்டது அதற்கு முன்னால் வாழ்ந்த டேனிஷ் அறிஞர் ராஸ்மஸ் ராஸ்க் (1787-1832) என்பவர் ஆரிய மொழிகளையும், பின்னோ-ஊக்ரிக் மொழிகளையும், திராவிட மொழிகளையும் வகைப்படுத்திக் காட்டினார் எனினும், கால்டுவெல் சிறப்புற ஒப்பிலக்கணம் வழங்கியதைப்போல் அவர் செய்தார் அல்லர்

மேனாட்டில் ஒப்பிலக்கணங்கள் எழுதப்பட வேண்டும் என்ற எண்ணம் பாப் என்பவர்க்கு உண்டாக, இந்திய-ஐரோப்பிய மொழிகளுக்கு அவர் ஓர் ஒப்பிலக்கணம் வகுத்துத் தந்தார் அவர் வாழ்ந்த காலத்திற்கு முன்னால் ஒரோவொரு வேளையில் பல்வேறு மொழிகளைப்பற்றிய சொல் அட்டவணை களைத் தொகுக்கவேண்டும் என்ற எண்ணம் இருந்தது அன்றி, கூரிய நுணங்கியல் முறையில் ஒப்பிலக்கணங்கள் எழுதப்படவில்லை 1791-இல் பாலஸ் என்பாரும், 1817-இல் அதிலுங் என்பாரும் சிற்சில சொல் அட்ட வணைகள் பல மொழிகளிலிருந்து திரட்டிச் செப்பனிட் டார்கள் என்றாலும், அவற்றை ஒப்பிலக்கணம் எனச் சொல்லுதல் இயலாது பின்னைய நூற்றாண்டில் ஒப்பிலக்கணம் செய்யப்படுதற்கு அவை அடிப்படையாக அமைந்த ஒப்பியல் அகராதிகள் என்று மாத்திரம் கொள்ளுதல் தகும் 1796-இல் சர் வில்லியம் ஜோன்ஸ் என்ற பேரறிஞர் சமஸ்கிருதம், கிரேக்கம், லத்தீன் ஆகியவை ஏதோ ஒரு மூல மொழியிலிருந்து தோன்றி யவை என்ற கருத்தினை வெளியிட்டார் அந் நாள் தொட்டு ஒப்பிலக்கணத்திற்கு ஒரு புது விதை விதைக்கப்

பட்டது அதன் பயனாவே பின்னாட்களிற் பல்வேறு மொழிகளுக்குப் பல ஒப்பிலக் கணங்கள் அமைக்கப் பட்டன இந்திய-ஐரோப்பிய மொழிகளுக்குப் புருக்மன் என்பவரால் புதுவதாக ஒரு பொது ஒப்பிலக்கணம் 1916-இல் வெளிப்படுத்தப்பட்டது

எனினும், திராவிட மொழிகளுக்கு டாக்டர் கால்டு வெல் (1819-91) அமைத்த ஒப்பிலக்கணம் கால்டு வெல்லிற்குப் பிறகு தோன்றியுள்ள புதுக் கருத்துக்களை ஒட்டியும், கிடைத்துள்ள புதுச்சான்றுகளை ஒட்டியும் திருத்தி அமைக்கப்படவேண்டிய நிலையில் உள்ளது

# மொழியும் ஓசையும்

**வீ**டு முதலியவை அமைத்து வாழும் நாகரிகம் தோன்றுவதற்கு முன்பே மொழி தோன்றியது அப்போதே கருத்தை உணர்த்துவதற்கு ஒரு நல்ல கருவியாகப் பேச்சுமொழி பயன்பட்டு வந்தது அந்தப் பேச்சு மொழியில் சொற்கள் இருந்தன சொற்களுக்குப் பொருள்கள் இருந்தன ஒவ்வொரு சொல்லும் ஒவ்வோர் ஒலிவடிவம் பெற்று அந்தந்தப் பொருளை உணர்த்திவந்தன அந்தச் சொற்கள் எவ்வாறு அமைந்தன, அவற்றிற்கு அந்தப் பொருள்கள் எவ்வாறு அமைந்தன என்று பிற்காலத்தார் ஆராயத்தொடங்கினார்கள் அவ்வாறு சொற்களின் தோற்றத்தை அல்லது வருகையை ஆராயும் மொழியியற் பகுதிக்குச் சொல்லியல் என்று பெயர்

ஒவ்வொரு மணிக்கும் ஒவ்வொருவகை ஓசை அமைந்திருப்பதுபோல், ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு வகையான ஒலிக்குறிப்பு உண்டு என்றும், அதுவே அந்தப்பொருளை உணர்த்தும்சொல்லாக அமைந்தது என்றும் சிலர் கருதினார்கள் அது உண்மை அன்று என்பது ஆராய்ச்சியால் தெளிவாயிற்று

பொருளுக்கு அறிகுறியாக அமைவதே சொல்; அது பொருளை விளக்காது, பொருளின்தன்மையைக் காட்டாது, பொருளை உணர்த்தும் அவ்வளவில் நிற்கும் ஒரு மூட்டையினுள் ஓர் அடையாளம் இட்டால், அந்த

மூட்டையினுள் இருக்கும் பொருளுக்கும், அந்த அடையாளத்துக்கும் தொடர்புண்டு என்று கூற முடியாது சில வேளைகளில் உள்ளே இருக்கும் பொருளின் வடிவத்தையே மூட்டையின்மேல் அடையாளமாக எழுதுவதும் உண்டு; ஆனால் அதுவே வழக்கம் என்று கூற முடியாது அதுபோல், ஒருசில சொற்களில் மட்டும் பொருளின் தன்மை ஏதேனும் புலப்படக்கூடும்; ஆயினும், அந்தச் சொற்களும் பொருள்களின் அறிகுறிகளாக நிற்பவையே கா கா என்ற ஒலியால் காக்கை என்று ஒருவகைப் பறவைக்குப் பெயர் அமைந்தது போல், சில சொற்கள் அமைந்திருக்கலாம் ஆனால் அப்படிப்பட்ட சொற்கள் மிகச்சிலவே

பேச்சு மொழி சிலகாலம் சைகை மொழியுடன் ஒன்றாக இருந்து, மெல்ல மெல்லப் பிரிந்து வளர்ந்தது; ஆகையால் இன்னும் சைகை மொழித்தன்மை சில சொற்களில் உள்ளது சுட்டுப் பெயர்களை ஆராய்ந்தால், அவற்றின்ஒலியில் சைகையின் தன்மை அமைந்திருக்கக் காணலாம் அண்மையில் உள்ள பொருள்களைச் சுட்டும்போது கை நீளாது சிறிது குறுகுவது போலவே, அண்மைச் சுட்டுப் பெயர்களில் நா நீளாமல் சிறிது குறுகி நிற்கும் ஒலியாகிய இகரம் அமைந்துள்ளது (இது, இங்கு, இப்படி; ஆங்கிலத்தில் திஸ் என்பதில் இகரம் இருத்தல் காணலாம்) சேய்மையைச் சுட்டும்போது கை நீளுவது போலவே, சேய்மைச் சுட்டுக்களில் நா நீளும் அகரம் உள்ளது (அது, அங்கு, ஆங்கு; ஆங்கிலத்தில் தேட் என்பதில் அகரம் இருத்தல் காணலாம்) மிகச் சிறியவற்றைக் குறிக்கும் சொற்களில் நாக் குறுகும் ஒலியாகிய இகரம் இருத்தல் கருதத்தக்கது (இம்மி, இடுக்கு, சிறிது;ஆங்கிலத்தில் லிட்டில் என்பதில் இகரம் காணலாம்) இவ்வாறு ஒரு வகைப் பொருளுணர்ச்சி அமைந்திருப்பதாக அறியக் கூடிய சொற்கள் மிகச்சிலவே

சொல்லின் பிறப்புக்கு உரிய காரணத்தை இவ்வாறு ஆராய்ந்து காணும்போது, காரணம் தெரியாதவை மிகப் பலவாக உள்ளன. காரணம் தெரிந்தவைகளாக உள்ள சில சொற்களிலும், அந்தக் காரணம் முற்றிலும் பொருந்தும் காரணமாக இருப்பதில்லை பொருளின் ஒரு பகுதியை அந்தக் காரணம் உணர்த்த முடிகிறதே தவிர, முழுமையும் உணர்த்த முடிவதில்லை எடுத்துக் காட்டாக. நாய் என்ற சொல் நா என்பதன் அடியாக பிறந்தது ஆனால் நா (நாக்கு) உடையதாக இருப்பதால் மட்டும் நாய் ஆக முடியாது பல்லி என்ற சொல் பல் என்பதன் அடியாகப் பிறந்தது ஆனால் பல் பல உயிர் களுக்கும் பொது; பல்லிக்குமட்டும் சிறப்பானது அன்று ஆகவே, தொடக்கத்தில் எவ்வாறோ அமைந்த சொற் களைப் பிற்காலத்தில் அறிகுறிகளாகப் பயன்படுத்திக் கொண்டார்கள் என்று கொள்வதே பொருந்தும்

சொல்லியல் ஆராய்ச்சியில் முழு வெற்றிபெறும் நோக்கம் வேண்டியதில்லை இயன்றவரையில் சொல்லின் தோற்றத்தையும் வரலாற்றையும் ஆராய்ந் தால் போதும். ஒரு சொல்லின் பழைய வடிவமாக நமக்கு எட்டுவது எது எனவும், அது அக்காலத்தில் என்ன பொருளில் வழங்கியது எனவும் ஆராய்ந்து அறிவதுடன், பிற்காலத்தில் அந்தச் சொல் நாட்டின் எந்தெந்தப் பகுதிகளில் எவ்வெவ்வாறு வழங்கியது என்பதையும் ஆராயலாம் அந்தச் சொல்லின் வடிவம் மாறிய காரணங் களையும் காணலாம் சிதல் என்பது பழைய சொல்; சிதைப்பது (சிதை>சிதல்) என்ற பொருளில் தோன்றியது; இகரம் எகரமாக ஒலித்தல் (இணை-எணை, இலை-எலை) உண்டு ஆகையால் சிதல் என்பதே பிற்காலத்தில் செதல் எனத்திரிந்து, செல் (செதல்> செல்) எனக் குறுகியது இவ்வாறு எட்டும் அளவிற்கே சொல்லின் தோற்றமும் வரலாறும் அறியப்படும்

பிற மொழியிலிருந்து வந்த சொற்களானால், அந்தச் சொற்களின் வரலாறு நாட்டு மக்களின் வரலாற்றோடு

| | சமஸ்கிருதம் | கிரேககம் | லத்தீன் | காததியம் | லிதுவேனியன | ஈரானியன் |
|---|---|---|---|---|---|---|
| தந்தை | பிதர் | பேடர் | பேடர் | பாதர் | | |
| தாய் | மாதர் | மாடர் | மாடர் | | மொதின | |
| உடன் பிறந்தான் · | ப்ராதர் | ப்ரேடர் | ப்ரேடர் | ப்ரொதர் | பரொதிஸ் | ப்ராதர் |
| வீடு | தம | தொமொஸ் | தொமஸ் | | பழைய ஸ்லொ வாணிககில் தெமொர் | |
| மரம் | த்ரு | த்ருஸ் | | த்ரியு | தௌர் | |
| நெருப்பு | அக்னி | | இக்னிஸ் | | ஒக்னிஸ் | |
| குதிரை | அசவ | இப்போஸ் இக்கோஸ் | இக்வஸ் | ஜஹ்ரவ | அஸ்வ | அச்ப (ஐரிஷ்ஏக) |
| பதது | தச | தெக | தெசம | தெய்ஹூம் | தசமஸ் | |

## இதிகாச இலக்கியம்

பாரதம் என்றால் பாரதர்களுக்குள் உண்டான போரின் பெருங்கதை என்று பொருள் இந்தப் பாரதர் கள் யுத்தப் பிரியர்களான ஒரு வகுப்பினரென்று ரிக் வேதத்திலேயே குறிப்பிடப்படுகின்றார்கள் பிராமணங் களில் பரதன் தந்தையான துஷ்யந்தனும், அவன் மனைவி சகுந்தலையும் குறிப்பிடப் பெறுகின்றனர் கங்கை, யமுனை என்னும் ஆறுகளில் மேல்கரையிலுள்ள நாடு பாரதர்களுடையது பாரதர்கள் மரபில் தோன்றியவர் களில் குரு மிகவும் பேர்பெற்றவர் அவர் மரபினர் குருக்கள் அல்லது கௌரவர்கள் எனப்பெறுவர். அம் மரபினரே பாண்டவர்களும் கௌரவருக்கும் பாண்ட வர்களுக்கும் உண்டான குடும்பப் பகையே பாரதப் போருக்குக் காரணமாகின்றது அது நடந்த குருக்ஷேத் திரம் என்ற இடப்பெயர் யஜுர் வேதத்திலும் பிராமணங் களிலும் வருகிறது

உண்மையான வரலாற்று நிகழ்ச்சியில் இடங் கொண்ட இச்சண்டையையும், அதில் செயல் புரிந்த படைவீரர்களையும், வருணித்துப் பலர் பலவித மான சிற்றிலக்கியங்களை இயற்றி இருக்கலாம் ஆங்காங்குச் சிதறிக்கிடந்த மறைப்பகுதிகளை வியாச முனிவர் எடுத்து, அவற்றை இருக்கு, யசுர், சாமம், அதர் வணம் என்று நான்காக வகுத்து அமைத்ததுபோல், இச்சிற்றிலக்கியங்

களையும் ஒன்றுதிரட்டி, அவற்றையே மூலக் கருவி களாகக்கொண்டு மகாபாரதம் என்ற பேரிலக்கியத்தை ஆக்கியிருக்க வேண்டும்

**மகா பாரதம் :**

வியாச முனிவர் எழுதிய மகா பாரதம் என்னும் இதிகாசத்தை இந்துக்கள் எல்லோரும் ஐந்தாம் வேத மாகக் கருதுகிறார்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களைப் பற்றி இந்நூல் கூறும் கருத்துகளைத் தவிர வேறு கருத்துகள் மற்றெங்கும் கிடையா என்று இந்த நூலே கூறுகின்றது மனு நூலில் பத்தில் ஒரு பாகம் பாரதத்தில் காணப்படு கின்றது

பாரத காலத்தில் நான்கு வருணத்தாருடைய தொழில்களும் நன்றாக வரையறுக்கப்பட்டிருந்தன இருபிறப்பாளர் காலையில் நீராடி மந்திரங்களால் சூரியனையும் ஆகுதிகளால் அக்கினியையும் வணங்கி வந்தார்கள் உருவ வழிபாடிருந்ததாகத் தெரியவில்லை கோயில்களும் சிலைகளும் சில இடங்களில் கூறப்பட்டி ருப்பது இடைச்செருகல் என்று கருதப்படுகிறது

இலக்கிய வர்க்கத்தில் பாரதம் இதிகாசம் எனப் பெறும் அறம், பொருள், இன்பம், வீடு என்றுள்ள நான்கைப்பற்றிய உபதேசங்களை உடையதும், பழைய மன்னர் குலக் கதையைக் கூறுவனவதுமான நூல் இதிகாசம் எனப்படும் இத்தகைய இலக்கியச் சிற்பத்தின் நுட்பத்தை அறியாமல், மேனாட்டு இலக்கியச் சோதகர்கள் தவறான பற்பல கற்பனைகளைக் கூறுகின்றார்கள் ஜோசப் டால்மன், சில்வான் லெவி இவர்கள் போன்ற இரண்டொருவர்கள் மட்டும் மகாபாரதம் இப்பொழுது காணப்படுகின்ற ரீதியிலேயே ஒரே கவியால் ஒரே காலத்தில் ஆக்கப்பட்ட பிரபந்தம் என்று வற்புறுத்தியிருக்கின்றார்கள்

மகாபாரதப் போர் நடைபெற்ற காலத்தைப் பற்றியும் பல அறிஞர்கள் பலவிதமாகப் பேசுகிறார்கள்

ஆனால், இந்தியரான சீ வீ. வைத்தியா என்பவர் பாரதப்போர் நடந்த காலம் கலியுகத் தொடக்கத்தில் அதாவது கி மு 3000 ஆண்டுகளுக்குமுன் என்கிறார்

ஒரு யுகம் முடிந்து, அடுத்த யுகம் தொடங்கும் காலத்தில் எல்லாத் துறைகளையும் பற்றிய பழக்க வழக்கங்களில் பழையன கழிதலும் புதியன புகுதலும் இயல்பென்பர் அப்பொழுது மனிதர்கள் மனப்பான் மையிலேயே தீவிரமான முரண்பாடுகள் உண்டாகி, அவற்றின் பயனாக மிகக் கொடும் போர்களும் நிகழ் கின்றன துவாபரயுகம் முடிந்து கலியுகம் தொடங்கிய காலத்தில் உண்டானதாகச் சொல்லப்படும் பாரதப்போர் அவ்விதப் போர்களில் முக்கியம் பெற்றதாகும் இத்தகைய சமயங்களிலேதான் சிறந்த வீரர்களும் அறிஞர் களும் பிறக்கின்றார்கள் பகவானுடைய அவதாரங்களும் தோன்றுகின்றன

8000 சுலோகங்கள் அடங்கிய மகா பாரதத்தை 18 பருவங்களாக வகுக்கப்பட்டு, சௌதி என்ற புராணிகரால் நைமிசாரணியத்தில் வேட்டல் புரிந்து வந்த சௌனகர் முதலிய வேதியர்களுக்கு உரையிடப்பட்டதெனச் சொல்லப்படுகின்றது

பெருங் காப்பியத்துக்குரிய எல்லாச் சுவைகளையும் இலக்கணங்களையும் உடைய தாயிருப்பதுடன் மனிதர்களுக்கு நல்லறிவு புகட்டும் பகுதிகள் நிறைந்திருப் பதுபற்றி மகா பாரதத்தை ஐந்தாவது வேதமென் பார்கள். எங்குத் தர்மமோ அங்கே ஜயம் என்ற விதி வாய்பாட்டை விளக்குவதால் ஜயம் என்ற மற்றொரு பெயரையும் அவ்விலக்கியம் பெற்றதாம் குருபாண்ட வர்களின் கதையை மட்டிலும் அளவிட் டால் 24,000 சுலோகங்களே கணக்காகு மென்றும், அதுவே பாரதம் என்றும், மகாபாரத மென்பது உபதேசங்களும், உபகதைகளும் சேர்ந்து முன்சொல்லிய தொகையுடைய தென்றும் சொல்வர் பாரதம், மகா பாரதம் இவ் விரண்டும் ஒரு காலத்தில் வெவ்வேறு நூல் களாகவே

இருந்து வந்தன என்பதற்கு ஆச்வலாயன க்ருஹ்ய சூத்திரம் என்பதில் சான்று காணப்படுகின்றது

மகாபாரதத்தின் நூலாசிரியராகச் சொல்லப்பட்ட வியாச முனிவரே அதில் தலைமை பூண்டு செயல் புரிகின்றவர்களுக்கும் மூலவராகின்றார் சந்தனு என்ற பாரத மன்னர் மூத்த மனைவியான கங்காதேவியிடத்தில் பீஷ்மரையும், இளைய தாரமான சத்தியவதி என்பவ ளிடத்தில் விசித்திர வீரியனையும் பெற்றார் விசித்திர வீரியன் இறந்தபிறகு சத்தியவதி தான் கன்னிப் பருவத்தில் இருந்தபோது பராசர முனிவரைச் சேர்ந்து தான் பெற்ற வியாச முனிவரை விசித்திர வீரியன் மனைவியரான அம்பிகை, அம்பாலிகை என்ற இருவர் களிடத்திலும் இரண்டு பிள்ளைகளை உண்டாக்கும்படி சொல்ல, அவரும் அவ்விதமே செய்தார் அவ்வாறு பிறந்தவர் களில் திருதராஷ்டிரன் பிறவிக் குருடன், மற்றொருவன் பாண்டு

காந்தாரியிடமிருந்து திருதராஷ்டிரனுக்குப் பிறந்த துரியோதனன், துச்சாதனன் முதலிய நூறு பிள்ளை களும் குருக்கள் அல்லது கௌரவர்கள் என்றழைக்கப் பட்டார்கள் பாண்டுவுக்குக் குந்தி தேவியிடத்தில் யுதிஷ்டிரன், பீமன், அருச்சுனன் என்ற மூன்று பிள்ளை களும் மாத்ரி என்பவளிடத்தில் நகுல சகாதேவர்கள் என்ற இரட்டைப் பிள்ளைகளும் பிறந்தார்கள். இவர்கள் ஐவரும் பஞ்சபாண்டவர்கள் எனப் பெயருடையவர்கள்

குந்திதேவி கன்னிப் பருவத்தில் கதிரவன் அருளால் கன்னன் என்ற மற்றொரு மகனை ஈன்று உலகப் பழிக்கு அஞ்சியவளாய்ப் பெட்டியிலிட்டு யமுனையாற்றில் மிதக்க விட்டாள் அதிரதன் என்ற தேர்ப்பாகன் கன்னனைக் கண்டெடுத்து வளர்த்து வந்தான் கன்னன் கொடையிலும் விற்போரிலும் இணையற்றவனாகி, இயற்கையாயுள்ள கவச குண்டலங்களுடன் விளக்கி னான் தன் பிறப்பையறியாத அவன் துரியோதனனையே உயிர்த் தோழனாகப் பற்றி, பாண்ட வர்கள் மீது

பகையுள்ளவனாய் அவனால் அங்கதேசத் தரசனாகித் தேர்ப்பாகன் மகனென்ற இழிவை ஒருவாறு மாற்றிக் கொண்டான்

வியாச முனிவர் அருளால் அம்பிகையின் தாதியிடம் உண்டானவர் விதுரர் அவர் கௌரவர்கள் வகுப்பில் அளவிலா அறிவு படைத்தவர் அறநெறி தவறாதவர் கிருஷ்ணனிடத்தில் அந்தரங்கமான பக்தியுடையவர்

பீஷ்மர், சத்தியவதியின் சந்ததியாரே சந்தனுக்குப் பின் அரசுரிமை பெறவேண்டி, வாழ்நாள் முழுதும் பிரமசாரியாய் இருப்பதாக விரதம் பூண்டார் அந்நாளில் வில்வித்தையில் கைதேர்ந்தவர்களே உலக மதிப்பிற்கு ஏற்றவர்களாய் இருந்ததால், அந்தணர்களும் அவ்வித்தையைப் பயின்று தேர்ச்சியடைந்திருந்தனர் அவர்களில் துரோணாசாரியரும், அவர் மைத்துனர் கிருபரும், அவர் மகன் அசுவத்தாமனும் மிகவும் பேர் பெற்றவர்கள்

துரோணாசாரியர் எல்லா வில்லாளிகளுக்கும் ஆசிரியராய் விளங்கினார் அக்காலத்து மன்னர்கள் சூதாட்டத்தில் அதிகப் பிரியமுள்ளவர்கள் ஆனால் துரியோதனன் தாய் மாமனான சகுனிக்கு இணையானவர்கள் எவருமிலர் யுதிஷ்டிரர் கவறாடலில் எந்த அளவுக்குப் பைத்தியம் கொண்டவரோ அந்த அளவுக்கு ஆடுவதில் திறமையில்லாதவர்; ஆடுவதற்கு அழைத்தால் மறுப்பதில்லை என்ற விரதத்தையும் கொண்டிருந்தார் பாண்டுவுக்குப் பிறகு குடும்பத் தலைவர் முறையில் அவரே அரசுரிமை பெறுவதற்கு உரியவரானாலும், துரியோதனனுடைய நிர்ப்பந்தத்திற்கு இணங்கி, இராச்சியத்தை இரண்டு பங்காக்கியதனால், ஒன்றை யுதிஷ்டிரரும் முற்றொன்றைத் துரியோதனனும் ஆளலானார்கள் யுதிஷ்டிரர் இந்திரப்பிரஸ்தத்தையும், துரியோதனன் அத்தினபுரத்தையும் தலைநகரமாகக் கொண்டு, தம்தம் சகோதரர்களுடனும் சுற்றத்தார்களுடனும் தனித்தனியே ஆண்டு வந்தனர்.

பிறகு, பாண்டவர்களின் செல்வப் பெருக்கைப் பொறாத துரியோதனன் சகுனியின் உதவியால் யுதிஷ்டிரரை இருமுறைகள் கவறாடலில் தோல்வியுறச் செய்து, அதன் பயனாகத் தம்பியருடனும் பாண்டவர்கள் ஐவருக்கும் மனைவியான திரௌதியுடனும் அவரைக் காடேறச் செய்து, அங்கு அவர்கள் 12 ஆண்டுகள் இருந்துவிட்டுப் பின்னும் ஓராண்டு கரந்துறைந்து, இட்ட நிபந்தனையைப் பூர்த்திசெய்து, அரசைத் திரும்பத் தரும்படி கிருஷ்ணனையே திருதராஷ்டிரனிடம் தூதனுப்பிக் கேட்டும், "ஊசி குத்தும் இடங்கூடத் தரமாட்டேன்" என்று துரியோதனன் மறுக்கவே, தொடக்கத்திலேயே குறிப்பிடப்பட்ட பாரதப் போர் மூளலாயிற்று

பாண்டவர் பக்கத்தில் திரௌபதியின் தமயனான திருஷ்டத்துய்மன் படைத்தலைவனாகிப் பாஞ்சால தேசத்தரசனான தன் தந்தை துருபத மன்னனுடனும் அருச்சுனன் மகன் அபிமன்யுவுடனும் அவன் மாமன் விராடனுடனும் பல போர்வீரர்களுடனும் கூடிப் போரை நடத்தினார் துரியோதனன் பக்கலிலோ முதல் பத்து நாட்கள் பீஷ்மரும், அடுத்து ஐந்து பகல்கள் துரோணாச்சாரியரும், அதற்குப்பின் இரண்டு நாட்கள் கன்னனும், கடைசியாகச் சல்லியனும் படைத் தலைவர் களாக இருந்து மாண்டனர்

18 ஆம் நாள் பிற்பகலில் நடந்த கதை யுத்தத்தில் பீமனால் தொடையில் அடிபட்டுத் துரியோதனன் விழுந்தான் அவனுக்கு முன்னரே அவனுடைய 99 சகோதரங்களும் பீமன் கைப்பட்டே உயிரிழந்து போயினர் பாண்டவர்கள் பக்கலில் உயிரிழவாமலிருந்த திருஷ்டத்துய்மனையும், திரௌபதியின் பிள்ளைகள் முதலிய பாஞ்சாலர்கள் அனைவரையும், உறங்கிக் கொண்டிருக்கும்போது அசுவத்தாமன் படுகொலை செய்தான் ஆகவே பாண்டவர்கள் ஐவரும், கிருஷ்ணன், சாத்தகி இவ்விரு வர்களும் ஆக 7 பேர்களே 7

அக்குரோணிகள் கணக்குள்ள யுதிஷ்டிரர் திறத்தில் உயிர்தப்பினோர் 11 அக்கு ரோணிகள் அடங்கிய துரியோதனன் திறத்திலோ அசுவத்தாமன், கிருபர், கிருதவர்மா என்ற மூவர்களே பிழைத்தனர்

யுத்தத்திற்குப் பின்னுள்ள நிகழ்ச்சிகளும் கிருஷ்ணன் தன் சுற்றத்தாருடன் அழிந்துபோன வரலாற்றையே முக்கியமாகக் கொள்ளுகின்றனவாகையால் துன்பியல் பெருங்காப்பிய வகைக்குப் பாரதமே ஒப்பற்ற உதாரணமாகும் பாரதக் கதையை ஆராயும் அறிஞர்களுக்கு, 'உலக வாழ்க்கையில் காணப்படும் உறவும், அறமும், அறிவும், ஆற்றலும் பயனற்றவை அவற்றை விட்டுப் பகவானை இடைவிடாமற் பக்தி செய்வதே பிறப்பின் பயன்' என்பது நன்கு புலப்படும் அவ்வித அறிவு தலையெடுக்கவேணுமென்ற வகையிலே பாரதத்திலுள்ள ஒவ்வொரு நிகழ்ச்சியும் சித்திரிக்கப் பட்டிருக்கின்றனஆகவே, பாரதப் பெருங்காப்பியத்திற் பரவியுள்ள சுவை சாந்தமே என்கிறார் ஆனந்தவர்த்தனர் என்ற அணியாசிரியர் இந்த ரசம் வெளிப்படையாகத் தோன்றாவிடினும், தொனியால் கிடைக்குமென்றும், இந்த பாரதத்தில் வாசுதேவன் மகனான கிருஷ்ண பகவானே எங்கும் கீர்த்தனம் செய்யப் படுகின்றார், என்று கவியே தொடக்கத்தில் கூறி யிருப்பது, இந்த வித ரச முடிப்பிற்கு ஆதாரம் அளிக் கின்றதென்றும் அவர் நன்கெடுத்துக் காட்டுகின்றார்

வால்மீகியின் இராமர் வில்லும் கையுமாய்த் தாமே நேர் நின்று, தேவர்கள் காரியமான இராவண வதத்தைச் செய்து முடிக்கின்றார் வியாசர் கிருஷ்ணர் பாண்டவர்கள் வேள்வியில் குற்றேவல் புரிந்தும், திருதராஷ்டிரரிடம் அவர்களுக்காகத் தூது நடந்தும், போர் மூண்ட காலத்தில் அருச்சுனனுக்குத் தேர் நடத்தியும், பூமியின் பாரம் நீங்குவதற்கு ஏதுவாகின்றார்

கீதையைப் பாடும்போதும், விசுவரூபம் கொள்ளும் போதும், சூதாட்டத்தில் திரௌபதியைத் துச்சாதனன்

துகிலுரியும் போது அவளுக்குப் புடைவைகள் சுரப்பதற்குக் காரணமானபோதும் நாராயணரே கிருஷ்ண உருவம் கொண்டவர் என்பதைக் கவி நமக்குப் புலப்படுத்து கின்றார் போர் நடக்கும்போது சிகண்டியை முன் வைத்துப் பீஷ்மரை வீழ்த்தும்படி அருச்சுனனுக்கு யோசனை கூறியும், துரோணரை மனமழியச் செய்வதற் காக அசுவத்தாமா என்ற யானை அடிபட்டுப் போனதை அப்பெயர் பூண்ட அவர் மகனே இறந்துவிட்டான் எனப் பொருள்படும்படி யுதிஷ்டிரரைப் பொய்யுரைக்கச் சொல்லியும், பூமியில் புதைந்துபோன தேர்ச் சக்கரத்தை வெளியேற்றும்போது கன்னனை அடித்து விடும்படி அருச்சுனனைத் தூண்டியும், இடைக்குக் கீழ்த் துடையிலடித்துத் துரியோதனனை மாய்க்கும்படி பீமனுக்குக் குறிப்புக் காட்டியும், இவ்விதமான உபாயங்களைக் கொண்டு பாண்டவர்கள் வெற்றி காண்பதற்குக் கிருஷ்ணரே துணை புரிகின்றார் இவ்வேளைகளில் தந்திரத்தில் தேர்ச்சிபெற்ற கபட புருஷராகவே தம்மைக் காட்டிக்கொள்ளுகின்றார்

இனி, காவிய நீதியைக் காணவேண்டுமானால் நம் கவனத்தைச் சகுனியின் சூது களத்திற்குத் திருப்ப வேண்டும். எல்லாப் பொருளையும் இழந்துவிட்ட பிறகு தம்மையும், தம் தம்பிமார்களையும், பிறகு திரௌபதியையும் பணயமாக, வைத்தாடித் தோற்கின்றார் யுதிஷ்டிரர் மாதவிடாயிலிருந்த திரௌபதியைக் கூந்தலைப் பற்றி இழுத்துச் சபை நடுவே நிறுத்துகின்றான் துச்சாதனன் 'இவ்வடிமையின் ஆடையக் களைந்து, என் தொடையின் மேல் உட்காரச்சொல்' என்று தன் தொடையைத் தட்டிக்காட்டுகின்றான் துரியோதனன் அப்பொழுது கன்னன் மனமகிழ்ச்சியுடன் கொக்கரித்துக் கூத்தாடுகின்றான்

பீஷ்மரும் துரோணரும் விதுரரும் இன்னுமுள்ள தக்கோர்களும் இதைப் பார்த்துக்கொண்டு ஓவியத்தில் உள்ள உருவங்கள்போல் வாய்மூடிச் செயலற்றுக்

கிடக்கின்றார்கள் 'தாம் அடிமையான பிறகு என்னை அடிமையாக்குவதற்கு யுதிஷ்டிரருக்கு உரிமை ஏது?' என்று கதறுகிறாள் திரௌபதி அவள் வினாவுக்கத் தக்க விடையளிக்க எவரும் முன் வரவில்லை துரியோதனன் தம்பி விகர்ணன் மட்டும் எழுந்து நீதி மொழி கூறுகிறான் அவ்வேழையின் சொல் அம்பலம் ஏறிற்றில்லை அரிநாமங்களே திரௌபதிக்குத் துணை புரிந்து, அவள் மானத்தைக் காப்பாற்றுகின்றன அதைப் பெரியோர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள் 'வாச்சியப் பிரபாவம் போல், அன்று வாசகப் பிரபாவம் அவன் தூரஸ்தனா னாலும் இது கிட்டி நின்றுதவும் திரௌபதிக்குப் புடவை சுரந்தது திருநாமமிறே'

இத்தகைய கொடுமையை இயற்றியவர்கள், ஆமோதித்தவர்கள், அதைப் பார்த்துக்கொண்டு வாளா இருந்தவர்கள், யாவரும் படுவதற்கு யுத்த நீதி முறையைக் கையாளவும் வேண்டுமா என்பதுதான் எல்லோர் மனத்திலும் உதிக்கக் கூடியது எல்லா விதிகளுக்கும் விலக்குண்டு அறம் மறமாகவும், மறம் அறமாகவும் திகழ்வது சந்தர்ப்பத்தைப் பொறுத்தேயாம்

இராமாயணக் கதையைச் சிறப்பிக்கின்றவையான சகோதர நட்பு, தோழமை, பெண்களுயர்வு, அரசநீதி, அந்தணர் பெருமை, தாய் தந்தையர் பாராட்டு முதலியன முக்கியக்கதையின் அங்கமாகவும், உபாக்கியானங்கள் உபதேசங்கள் இவற்றின் வாயிலாகவும் பாரதத்தில் இடம் பெறுகின்றன ஆனால், பாரதத்திலுள்ள விரிவும் விளக்கமும் பேச்சிலுள்ள சுதந்திரமும், நடையிலுள்ள வீரமும் உறுதிப்பாடும் வாசகப் போக்கின் தாராளமும் இராமாயணத்தில் இல்லையென்றே கூறலாம் உதாரண மாக, திரௌபதியை வைத்துச் சூதாடித் தோற்றபோது பீமன் யுதிஷ்டிரரைப் பார்த்து, 'மனையாளை விலை மகள் எனக் கருதிப் பணயமாக்குவதை உம் ஒருவரிடமே காண்கிறேன் சகாதேவா, கொண்டுவா நெருப்பை, இவர் கவறாடிய கைகளைக் கொளுத்திவிடுகிறேன்' என்று

கழறினான் 'பீமா, உங்களையும் திரெளபதியையும் யுதிஷ்டிரர் வைத்தாடியது செல்லாதென்று நீ சொல்லி விடு; போதும் எல்லோரும் அடிமைத்தனத்திலிருந்து நீங்கிவிடலாம்' என்று துரியோதனன் கேட்டபோதோ, அவ்விதம் நினைக்கின்றவன் பீமனல்லன் எங்கள் உடல், பொருள், ஆவி, இம்மூன்றுக்குந் தலைவர் எம் தமயனார்' என மொழிந்தான் பீமனைப் போல் திரெளபதியும் இதேமுறையில் யுதிஷ்டிரரைக்கடிந்து பேசிப் பிரேமை பாராட்டுவாள்

பொதுவாகப் பாண்டவர்களிடத்திலும், சிறப்பாக அருச்சுனனிடத்திலும் கிருஷ்ணர் காட்டிய தோழமைக்கும், அவ்விதமே துரியோதனனும் கன்னனும் ஒருவர் பால் ஒருவர் கொண்டிருந்த நட்புக்கும் இராம சுக்கிரீவர் நட்பு இணையாக மாட்டாது

ஓர் அந்தணன் மகனுக்குப் பதிலாக, பீமனைப் பகாசுரன் என்ற பயங்கர அரக்கனிடம் போகவிடுத்த வீரத்தாய் குந்தி, உலகப் பழிக்கு அஞ்சி ஸ்ரீராமர் சீதையைக் காட்டிலே விட்டதுபோல், கன்னனைப் பெற்றதும் ஆற்றிலே விட்டாள் கன்னன் பிறப்பைக் குந்தி ஒளித்து வந்தது இடைவிடாமல் அவள் உள்ளத்தை உறுத்தி வந்ததுடன், பாரதப்போர் மூளுவதற்கும் ஏதுவாயிற்று கன்னன் ஒருவனையே முக்கிய பலமாகக் கொண்டன்றோ துரியோதனன் பாண்டவர்களுக்கு அரசு தர மறுத்தான்? யுதிஷ்டிரர் முடிசூடும் வரையில் நல்குரலில் மூழ்கியிருந்த குந்தி அவருக்குச் செல்வம் வந்தவுடன் அதில் பங்கு கொள்ளாமல் தன் ஓரகத்தியுடனும் மைத்துனருடனும் காட்டிற்கே சென்று அங்குள்ள துன்பங்களை ஏற்றுக் காலமானாள்

கணவன் கண்ணிழந்தவன் என்பதை எண்ணித் தானும் ஆடையால் தன் இரு கண்களையும் மறைத்துக் கொண்டிருந்த மகாபதிவிரதை காந்தாரி 'அம்மா, போருக்குச் செல்லுகிறேன் ஆசிகூறு' என்று துரியோதனன் அவளிடம் மிகப் பணிவுடன் வேண்டிய போது, 'எங்கு அறமுளதோ அங்குத்தான் வெற்றி' என்றாள்

போரின் காரணமாகத் தான் பெற்ற நூறு பிள்ளைகளும் நீறுபட்டுப் போனதுடன், தன்னுடைய ஒரே மகள் துச்சளை என்பவளும் கைம்பெண்ணானாள் என்பதைக் கேட்டு மனக்கொதிப்படைந்த காந்தாரிக்குச் சமமாகத் துக்கங் கொண்டவள் ஒருத்தியுமிராள் தம் மறிவால் அத்துணையும் அடக்கிக் கொண்டிருந்தவர் களையும் பார்க்க முடியாது

திரௌபதியைப் பற்றித் தனித்தொன்றும் கூற வேண்டுவதில்லை இராமாயணம் சீதையின் பெருங்கதை என்றால் மகாபாரதமும் திரௌபதியின் பெருங்கதை யேயாம். வேள்வியின் நிலத்தில் பிறந்தவள் சீதை அந்த நெருப்பில் பிறந்தவள் பாஞ்சாலி. நிலத்திற்கும் நெருப் பிற்கும் உள்ள வித்தியாசமேதான் இவ்விரு அழகிகள் குணங்களிலும் ஏற்பட்டுள்ளது ஆங்காரம் அடங்கி யவள் சீதை அது பற்றி எரியுந் தன்மை யுள்ளவள் திரௌபதி அவமானப்படுத்திய துச்சாதனனுடைய குருதியை வாசனைத் தைலமாகத் தடவிக் கொண்டு, விரித்த கூந்தலை திரௌபதி முடித்துக்கொண்டதே அவள் சீலத்துக்கேற்ற செயலாகும்

இந்திரன் மகனான வாலியைக் கொன்று, சூரியன் மகனான சுக்கிரீவனுக்கு அரசளித்தவர் இராமர் அதற்கு நேர் எதிராகக் கிருஷ்ணர் கதிரவன் மகனான கன்ன னுடைய மரணத்திற்கு ஏதுவாகி, இந்திரன் மகனான அருச்சுனனுக்குத் தேரோட்டியாகச் செயல்புரிந்தார் வாலி இருந்தவரையில் யாதொரு குறையுமின்றி எல்லோரையும் தலைமிதித்து அரசாண்டு வந்தான் அவ்விதம் அல்லன் கன்னன் பிறந்தது முதலே ஆசாபங்கம் என்பதன் அவதாரமெனக் கூறும்படி அவன் வாழ்நாள் இருந்துவந்தது

ஆதித்தன் மகனானாலும் அதிரதன் மகனென்றே அவமதிக்கப்பட்டான் நேரே பரசுராமரிடமிருந்து அஸ்திரங்களைப் பயின்றான் ஆனாலும் அவன் பிறப்பை அறிந்த அந்த க்ஷத்திரியப் பகைவர் 'நீ கற்ற

வித்தை ஆபத்துக்குதவாமற் போம்' என்ற சபித்தார் இரப்போர்க்கு இல்லையென்று சொல்லும் குணமுடைய வனல்லன் கன்னனென்றறிந்து இந்திரனும் இயற்கை யாயுள்ள அவன் கவச குண்டலங்களை அந்தணர் வடிவங் கொண்டு வந்து இரந்து பெற்றுச் சென்றான் அதற்குப் பதிலாகச் சத்தியொன்றை இந்திரனிடமிருந்து பெற்று, அருச்சுனனைக் கொல்வதற்கென்று அதைக் காப்பாற்றி வந்த கன்னன் பாரதப் போரில் கடோத்கசன் என்ற அரக்கனைத் தாக்கி வீணாக்கினான் யுத்த ஆரம்பத்தில் குந்தி கன்னனைக் கண்டு, 'நீ என் மகன்' என அறிவிக்கவே, பாண்டவர் மீது கொண்டிருந்த அவனு டைய பகைமைப் பண்பு இளகிப்போயிற்று. பீஷ்மரும் துரோணரும் அசுவத்தாமனும் அவன்மீது பொறாமை கொண்டு, அவனை இடைவிடாமல் இகழ்ந்துபேசி, அவன் கொண்டிருந்த வீரச்செருக்கையும் உற்சாகத் தையும் பங்கப்படுத்தினார்கள் யுத்த காலத்தில் பீஷ்மர் ரதிகர்கள் பதவியைத் தீர்மானித்தபோது கன்னனை அர்த்த ரதன் என்று கணக்கிட்டார் அவன் சாரதியான சல்லியனும் 'அருச்சுனன் அன்னம், நீ காக்கை' எனக் கூறித் தேசிழக்கச் செய்தான் நினைப்பதற்கு வெகு துக்ககரமான இவன் வாழ்வு பாரதத்தின் துன்பியல் தன்மைக்கு உணவளிப்பதுபோல் ஆயிற்று

பாரதத்தின் இலக்கியச் சிறப்பெல்லாம் கிருஷ்ணர் அருச்சுனனுக்குப் பாடிய கீதையில் முடிசூடப் பெறுகின்றது 'எல்லா உபநிஷத்துக்களும் பசுக்கள்; அருச்சுனன் என்ற கன்று அவைகளை ஊட்டிப் பால் சுரக்கச் செய்கிறது; அப்பாலைக் கிருஷ்ணர் என்ற இடையர் கறந்து, உலகம் உய்யும் பொருட்டு அதற்கு விநியோகித்தார்' என்ற அதன் பெருமை வருணிக்கப் படுகின்றது

அர்ச்சுனனால் வீழ்த்தப்பட்டவுடன் அவனியிலே படுக்காமல் அம்புப் படுக்கையிலேயே படுத்து, உத்தராயணத்தைத் தம் இறுதிக்காக எதிர் பார்த்திருநத பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு உபதே சித்தவை சாந்தி,

அனுசாசனம் என்று பெயருள்ள இரண்டு பருவங்களில் அடங்கியுள்ளன இவற்றைத் தவிரச் சிறப்பாக ஆரணிய பருவத்தில் சில அழகான கிளைக் கதைகள் மார்க்கண்டேயரால் யதிஷ்டிரருக்குச் சொல்லப் படுகின்றன அவற்றில் நளதமயந்தியின் கதை, சாவித்திரி சத்தியவான் கதை, தரும வியாசன் கதை இவைகள் மிகவும் முக்கியம் பெற்றவை

நள தமயந்தியின் இலக்கியச்சீரை மேனாட்டு அறிஞர்கள் அதிகமாகக் கொண்டாடி, எல்லா மொழி களிலும் மொழி பெயர்க்கச் செய்திருக்கின் றார்கள் இவற்றைத் தவிர இராமாயணக் கதை முற்றும் சுருங்கச் சொல்லப்படுகின்றது இராமாயணத்திற்கு அதிகமாகவே பாரதத்தில் சிறப்புடைய இலக்கியங்கள் சமஸ்கிருதம், தமிழ் இவ்விரண்டிலும் காணப்படுகின்றன சாகுந்தலம், விக்கிரமோர்வசீயம், கிராதார்ச்சுனீயம், பாஞ்சராத்திரம், நளசம்பூ, பாரதசம்பூ இவைபோன்றவை சமஸ்கிருத இலக்கியங்களை ச் சிறப்பிக்கின்றன அவ்விதமாகவே பெருந்தேவனார் பாரதம், வில்லிபுத்தூரார் பாரதம், நளவெண்பா, நைடதம் இவை தமிழிலக்கியத்தில் முக்கியம் பெற்றனவாய்க் காணப்படுகின்றன

பாரதத்தின் அளவையும் பொருள் அடக்கத்தையும் கொண்ட நூல் இலக்கிய உலகத்திலேயே வேறில்லை எனலாம் கிரேக்க தேசத்தினரான ஹோமர் கவி ஆக்கிய இலீயாது, ஆடிசி இரண்டும் சேர்ந்து பாரதத்தில் எட்டில் ஒன்றேயாம் என்று கணக்கிடப்படுகின்றது பாரதத்தில் உள்ளவற்றையே பிறவற்றிலும் காணலாமேயன்றி, அதில் இல்லாதவற்றை வேறெதிலும் பார்க்க முடியாதென்று கொள்ளும்படி வியாசர் அதைப் பாடினாரென்று அந் நூலிலேயே கூறப்பட்டிருக்கின்றது

**பாரதம் பாடிய பெருந்தேவனார்:**

சங்க காலப் புலவர் பாரதக் கதையைத் தமிழில் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக இயற்றியவர் அந்த நூலின் செய்யுட்கள் தொல்காப்பியப் பொருளதி

காரத்தில் நச்சினார்க்கினியராலும், யாப்பருங்கலவிருத்தி முதலியவற்றிலும் மேற்கோளாக வந்துள்ளன ஐங்குறு நூறு, அகநானூறு, புறநானூறு, நற்றிணை குறுந்தொகை ஆகிய ஐந்து தொகை நூல்களிலும் இவர் பாடிய சிவபிரான், திருமால், முருகன் ஆகிய கடவுளரின் வாழ்த்துப்பாக்கள் உள்ளன இவைகளேயன்றி வேறு சில பாடல்களும் பாடியிருக்கிறார்

**பாரத வெண்பா**

பாரதக் கதையைக் கூறும் ஒரு நூல் (9 ஆம் நூ) இந் நூலாசிரியர் பெயரால் பெருந்தேவனார் பாரதம் என்றும் வழங்குகிறது இது வேறு; சங்க காலத்து வழங்கிய பாரதம் வேறு என்பர் சங்ககாலப் பாரதச் செய்யுட்களிலே சில தொல்காப்பியப் பொருளதிகார உரையிலே நச்சினார்க்கினியராலும், வீரசோழியவுரையி லும் புறத்திரட்டிலும் காட்டப் பெறுகின்றன அவை பாரதப் பாட்டு என்றாவது, குறிப்பிடப் பெற்றுள்ளன அப்பாட்டுக்கள் இப்பாரத வெண்பாவிலே காணப் பெறாமையால், இந்நூல் வேறென்றே கொள்ள வேண்டும் பாரத வெண்பாவைப் பாடிய சிறப்பினால் இவரும் சங்ககாலப் பெருந்தேவனார் பெயராற் பாராட்டப்பெற்றிருத்தல் வேண்டும்

சங்ககாலத்தே வழங்கிய பாரதத்தைப் பாடிய பெருந்தேவனாரும், தொகை நூல்களில் கடவுள் வாழ்த்தைப் பாடித் தந்த பெருந்தேவனாரும் இந்நூலைப் பாடிய பெருந்தேவனாரும் வெவ்வேறு காலத்தி லிருந்தவர்களென்றே ஆராய்ச்சியாளர் கொள்வர். இவரைப் பற்றி வேறொன்றும் அறியக்கூடவில்லை

இந்நூல் மூன்றாம் நந்திவர்ம பல்லவன் காலத்தில் எழுதப்பெற்றதென்பர் இது உரையிடையிட்ட பாட்டு டைச் செய்யுளாகும் வெண்பாக்களின் இடை யிடையே உரைநடை கலந்துள்ளது செய்யுள் நடை நல்ல தமிழா கவும், உரைநடையிலே வடமொழி விரவி மணிப்

பிரவாள நடையாகவும் உள்ளன அக்காலப் புலவர்கள் நடை அவ்வாறிருக்கும்போலும் அன்றிப் பிற்காலத்தே எவரேனும் கதைத் தொடர்பாக உரை நடையெழுதிச் சேர்த்திருக்கலாம் பாரதவெண்பா என்னும் பெயரிருப்பினும் இடையிடையே ஆசிரியப் பாக்களும் விருத்தப் பாக்களும் அருகியுள்ளன இது வில்லிபுத்தூரார் இயற்றிய பாரதத்திற்கும் முந்தியது

இந்நூலின் சிறு பகுதியே இப்போது கிடைத்து அச்சிடப் பெற்றுள்ளது உத்தியோக பருவம், வீடுமபருவ, துரோண பருவம் ஆகியவை மட்டுமே கிடைத்தவை மூன்று பருவங்களிலும் 818 வெண்பாக்களும், 6 ஆசிரியப்பாக்களும், 6 விருத்தப்பாக்களும் உள்ளன இந் நூல் 1925-ல் பண்டித அ கோபாலய்யரவர்களால் அச்சாகியுள்ளது

## புறநானூற்று இலக்கியம்

சங்கத் தொகை நூல்களில் எட்டுத் தொகையுள் ஒன்று புறப்பொருள் இலக்கணம் காட்டும் துறைவகைக் கேற்ப அமைந்த நானூறு பாட்டுக்கள் இதன்கண் தொகுக்கப்பட்டுள்ளமையால் இது புறநானூறு எனப் படுகிறது இதிலுள்ள பாட்டுக்கள் யாவும் சங்க காலத்துப் புலவர் பெருமக்களால் அவ்வப்போது பாடப் பெற்றவை அவர்கட்குப் பின்னே வந்த சான்றோர் இப்பாட்டுக் களைத் தேர்ந்து, திணையும் துறையும் வகுத்துத் தொகுத்துள்ளனர் இத்தொகுப்பின் கண் வேந்தர்கள் ஈடுபட்டிருப்பதால், இத்தொகை நூல்கள், பிற்போந்த வேந்தரும் சான்றோரும் கூடிச் செய்த இலக்கிய நன் முயற்சியின் விளைவாய்த் தோன்றியன வாகும்

ஆயினும், ஐங்குறுநூறு முதலிய தொகை நூல் களின் இறுதியில் தொகுத்த சான்றோர் பெயரும், தொகுப்பித்த வேந்தர் பெயரும் காணப்படு வது போல, இப்புறநானூற்றின் கண்காணப்படவில்லை; அதனால் இதனைத் தொகுத்தோரைப் பற்றி ஒன்றும் தெரிய வில்லை இந்நூலிலுள்ள பாட்டுக்களைப் பாடிய புலவர் கள் மட்டும் நூற்றமைம்பதுபேருக்குமேல் உள்ளனர்; இவருள் பதின்மருக்குமேல் பெண்பாற் புலவர்கள் இருக்கின்றனர் பாடப்பட்டோருள் ஐம்பது பேருக்கு மேல் முடிவேந்தரும், எண்பத்து மூன்று குறுநிலச் செல்

வர்களும் காணப்படுகின்றனர் இந்நூலில் இடையில் இரண்டு பாட்டுக்கள் மறைந்து போனதால் முன்னூற்றுத் தொண்ணூற்றெட்டுப் பாட்டுக்களையே இப்போது கொண்டிருக்கிறது சில பாட்டுக்கள் சிதைந் திருக் கின்றன தொடக்கத்திலிருந்து 266 பாட்டுக்கள் வரையில் பழைய சான்றோர் ஒருவர் எழுதிய உரை உள்ளது.

இந்நூல் தொகுப்பில், பாடப்பட்டோருள் முதலில் முடிவேந்தர்க்குரிய பாட்டுக்களும், பின்பு குறுநிலத் தலைவர் பாட்டுக்களும், அவற்றின்பின் புறத்திணைக்குச் சிறந்த சில துறைகட்குரிய பாட்டுக்களும் வைத்து, இறுதியில் முடி வேந்தர்க்குரிய பாட்டுக்கள் சிலவற்றை வைத்து முறைப்படுத்தியிருக்கின்றனர் முடி வேந்த ருள்ளும் சேரரை முதற்கண்ணும் பாண்டியரை இடை யிலும், சோழரைப் பின்னும் முறைப்படுத்தி யிருப்பது சேரபாண்டிய சோழரென்று கூறும் பழைய வழக்கத்தை வற்புறுத்துகிறது; இவ்வேந்தர்க்குரிய அடையாளப் பூவைக் கூற வந்த தொல்காப்பியர், "போந்தை வேம்பே ஆர் என வரூஉம், மாபெருந் தானையர் மலைந்த பூ" (புறத் 5) என இம்முறையே கூறியிருப்பது இங்கே நினைவுகூரத் தக்கது இம்முறையால் முதற்பாட்டுச் சேரவேந்தனுக்கும், இரண்டாம் பாட்டுப் பாண்டி வேந்தனுக்கும், மூன்றாம் பாட்டுச் சோழ வேந்தனுக்கும், நான்காம் பாட்டுச் சேரவேந்தனுக்கு உரியவாய் வந்து கொண் டிருக்கின்றன கால முறையிலும் இம்முறை வைப்புச் செவ்வையாக அமைந்திருக்கிறது

இம் முறைவைப்பில் சேரமன்னர்களில் பெருஞ் சோற்றுதியஞ் சேரலாதனும், அவனுக்குப்பின் கருவூ ரேறிய ஒள்வாட்கோப் பெருஞ்சேரலிரும் பொறை யும், அவனுக்குப்பின் செல்வக்கடுங்கோ வாழியாதனும் கால முறையில் வைத்துக் குறிக்கப் படுகின்றனர். பாண்டியர் களில் கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதியும், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியும், சோழர்க ளில் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியும், கரிகாற்

பெருவளத்தானும் ஒருவர் பின்னொருவராக நிறுத்தப் படுகின்றனர் குறுநிலத் தலைவர் பாட்டுக்களிலும் சேர நாட்டுத் தலைவர், பாண்டி நாட்டுத் தலைவர், சோழ நாட்டுத் தலைவர் என்ற வைப்புமுறையே காணப் படுகிறது

இப்புறநானூறு காட்டும் சேரரது ஆட்சியில் ஒரு பால் மலைமணந்த காடுகளும், ஒருபால் கடலும் கிடந்து நிலப்பரப்பைச் சுருக்கினமையால், "இடஞ்சிறிது என்னும் ஊக்கம் துரப்ப", நாட்டவர் குடி பெருகி வாழ்வது குறித்து வடக்கிலும் கிழக்கிலும் தெற்கிலும், "நாடு கண் அகற்றும்" முயற்சியும் நாட்டமும் முற்பட்டுத் தோன்றுகின்றன சேரவேந்தருள், அந்துவஞ்சேரல், கடல்பிறக்கோட்டிய வேல் கெழுகட்டுவன், செல்வக் கடுங்கோ வாழியாதன், கருவூரேறிய ஒள்வாட்கோப் பெருஞ்சேரலிரும் பொறை, சேரமான்குட்டுவன் கோதை, குடக்கோச்சேரலிரும் பொறை, குடக்கோ நெடுஞ்சேரலிரும் பொறை, சேரமான் கோக்கோதை மார்பன், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறை, பாலைபாடிய பெருங்கடுங்கோ, பெருஞ் சேரலாதன், பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன், மாந்தரஞ்சேரல், சேரமான்மாவண்கோ, வஞ்சன், கணைக்காலிரும் பொறை, கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை முதலிய வேந்தர்கள் இந்நூலில் இடம் பெறுகின்றனர்

அடுத்து நிற்கும் பாண்டியர்களுள், அறிவுடைநம்பி, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, கருங்கையொள்வாட்பெரும்பெயர் வழுதி, கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி, கூட காரத்துத் துஞ்சிய மாறன்வழுதி, சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பாண்டியன் நெடுஞ்செழியன், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன், பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்

பெண்டு, வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்ற பதினைவர் ஆட்சி நலம் இத்தொகை நூற்பாட்டுக் களில் சிறப்பிக்கப்பெறுகின்றது

உலகில் வாழ்வில், "தமக்கென முயலா நோன்றாள், பிறர்க்கென முயலும்" பெரு வாழ்வே வாழ்வானது என்ற கருத்துப் பாண்டி வேந்தர் பண்பாடாக இருந்திருக்கிறது; இவ்வியல்பால், "வல்லாரர்யினும் மாட்டாராயினும், புகழ்தலுற் றோர்க்கு, மாயோன்போல" இவ்வேந்தர் விளங்கு கின்றனர் "தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்த ராக லின்" புலவர் பாடும் புகழ் பெறுவது அவர்கட்குப் பெருமிதமாக இருக்கிறது

இனி, சோழ வேந்தர்க்குரிய பாட்டுக்கள் காட்டும் சோழ நாடு, வடவேங்கடமலைத்தொடரையும், கொல்லி மலையையும், பெண்ணையாற்றையும், காவிரி யாற்றை யும் கொண்டு இனிய காட்சித் தருகிறது வேங்கடத்திற் பிறந்த யானைகள் காவிரிக்கரையில் சோழர் படைக்கு அணி செய்கின்றன "கோடை யாயினும் கோடா வொழுக்கத்" துடன் காவிரியாறு சோழ நாட்டைப் புரக் கின்றது. "ஒருபிடி படியும் சீறிடம் எழுகளிறு புரக்கும்" நெல்வளம் நிறைந்துளது சோழ மன்னருள், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, உருவப் பஃறேர் இளஞ் சேட்சென்னி, கரிகாலன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன், குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், கோப்பெருஞ்சோழன், செங்கணான், செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி, சோழன் நல்லுருத்திரன், நலங்கிள்ளி மாவளத்தான், நெய் தலங்கானல் இளஞ்சேட்சென்னி, போர்வைக்கோப்பெரு நற்கிள்ளி, முடித்தலைக்கோப்பெருநற்கிள்ளி, வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி, சோழன் நலங்கிள்ளி முதலியோர் சிறந்து காணப்படுகின்றனர்

இம் மூவேந்தரும் தம்முட் பகைமையின்றி ஒத்து வாழவேண்டுமென்ற கருத்துத் தமிழ்ச் சான்றோர்

உள்ளத்தில் இருந்தமை இந்நூலால் தெரிகிறது உயிர் கட்குறுதியெனக் கூறும் அறம் பொருள் இன்பம் என்ற முப் பொருளையும்போல இவ்வேந்தர் மூவரும் சான்றோர்களால் சுட்டப்படுகின்றனர் (31); ஒரு சான் றோர், இறைவன் திருமுகத்தில் விளங்கும் முக்கண் போல்வர். இம் மூவேந்தரும் (55) எனக் குறிக்கின்றார்; ஔவையார், இம்மூவரையும், "இருபிறப்பாளர் முத்தீப் புரையக் காண்டக இருந்த வேந்தர்" (367) என்று இனிமை யாகப் பாடுகின்றார்.

இவர்கட்கு இத் தமிழகம் பொதுவென்பது தோன்றப் "பொதுமை சுட்டிய மூவருலகம்" என்பர் இம்மூவரும் மனமொத்து ஒருங்கிருக்கும் காட்சியைக் காணும் சான்றோர், "நீவிர் உடனிலை திரியீராயின், பௌவம் உடுத்த பயங்கெழு மாநிலம், கையகப்படுவது பொய்யாகாது" (58) என்று வற்புறுத்துகின்றனர்; அடிக்கடி நிகழும் போர்களால் நாடுகள் பாழாவதைப் பல பாட்டுக்களில் அரசர்கட்கு எடுத்துக்காட்டி அறிவு கொளுத்துகின்றனர்

இனி, குறுநிலத் தலைவர் பலரும் இம்மூவர் நாடுகளில் இருந்து சிறந்தவர் சேரநாட்டுத் தலைவர் களில் அதியமான் நெடுமான் அஞ்சி, ஆய் அண்டிரன், ஏறைக்கோன், குமணன், பிட்டங்கொற்றன், வாட்டாற் றெழினியாதன் முதலிய பலர் விளக்கம் பெறுகின்றனர் சோழ நாட்டுக் குறுநிலத் தலைவர்களில் ஆதனுங்கன், கடுமான்கிள்ளி, கண்டீரக்கோப்பெரு நள்ளி, கரும்பனூர் கிழான், சிறுகுடிகிழான் பண்ணன், சோழிய ஏனாதி திருக்குட்டுவன், தாமான் தோன்றிக் கோன், திருக்கண்ணன், திருக்கிள்ளி, நல்லியக்கோடன், நல்லேர் முதியன், பெருஞ்சாத்தன் பொறையாற்றுக் கிழான், மலையமான் திருமுடிக்காரி, வல்வில் ஓரி, விச்சிக்கோ, விண்ணந்தாயன், வில்லியாதன் முதலியோர் சிறப்பாகக் குறிக்கப்படுகின்றனர்

முடிவேந்தரையும் குறுநிலத் தலைவரையும் பாடிய சான்றோர் பாட்டுக்களுள் பாடியவரும் பாடப் பட்டோருமாகிய இருதிறத்தாரும் இன்னாரென விளங்காதபடி பதினொரு பாட்டுக்கள் சிதைந்துள்ளன ஏனைப் பாட்டுக்களைப் பாடியோருள் வேந்தரும் வணிகரும், வேளாளரும், பார்ப்பாரும் எனப் பல இனத்தவரும் இருக்கின்றனர் மகளிருள், அள்ளூர் நன்முல்லையார், இளவெயினியார், ஒக்கூர் மாசாத்தி யார், ஒளவையார், காக்கைபாடினியார், நச்செள்ளை யார், காவற்பெண்டு, பாரிமகளிர், பூங்கண் உத்திரையார், பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு, பெருங் கோழிநாய்கன் மகள் நக்கண்ணையார், பேய்மகள் இளவெயினியார், மாறேக்கத்து நப்பசலையார், வெண் ணிக் குயத்தியார், வெறிபாடிய காமக்காணியார் முதலி யோர் தெளிவாய்த் தெரிந்த நல்லிசை மெல்லிய லாராவர்

இனி, புறத்திணைக்கேயுரிய துறைகளுட் சில வற்றைப் பொருளாகக் கொண்ட பாட்டுக்கள் பலவுள்ளன என முன்பே கூறினோம். அவற்றால், நாடு நாட்டு மக்கட்குரியது; நாட்டுமக்கள் நாடாளும் வேந்தர்க்கு உடம்பாவர்; தன் நாட்டவராகிய உடம்புக்குத் தான் உயிரெனக் கருதுவது வேந்தனுக்குக் கடன்; "மன்னன் உயிர்த்தே மலர்தலையுலகம்; யான் உயிர் என்பது அறிகை வேந்தர்க்குக் கடன்" ஏன்பது தமிழகத்து அரசியலடிப்படையென்பதை விளக்குகிறது

"எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி " நாடும் நற்புகழ் பெறுகிறது "யாதும் ஊரே யாவரும் கேளிர்" ஏன்பது நாட்டு மக்களின் கருத்து, அரசுக்கு, "வினை வேண்டு வழி அறிவுதவியும், படைவேண்டுவழி ஆளுதவி யும்" நாட்டவர் துணைபுரிகின்றனர் நாட்டின் நன்மை குறித்து வேண்டுவன எடுத்தோதும் பேச்சுரிமையும், வேண்டுவார் வேண்டிய தெய்வங்களை வழிபடும் வழி பாட்டுரிமையும், வணிகர்க்கு வாணிக வுரிமையும், கல்வி, அரசியல் முதலிய துறைகளில் ஆடவரையொப்ப மகளிர்க்கு உரிமையும் தந்து மகிழ்வது புறநானூறு

"வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைகல்" என்பது வாழ்வின் குறிக்கோள். நாரும் போழும் பருத்தியும் பட்டும் தழையும் தோலும் கொண்டு தூசும் துகிலும் உடையும் ஆடையும் பாயலும் போர்வையும் நெய்வது முதலிய தொழில் வகைகளும், நெற்சோறும் பலவகை இனிய பண்ணியங்களும் ஊனும் பிறவும் ஆகிய உணவு வகைகளும், பலவேறு கருவி வகைகளும் சிறந்து காணப்படுகின்றன

அரசியல் குறித்து நடக்கும் போர் களிடையே மகள் மறுத்தது குறித்தும் போர் நிகழ்கிறது; தமிழ் வேந்தரும் செல்வரும் புலவர், பாணர், கூத்தர் முதலியோர்க்கு மிகுபொருள் கொடுத்து, முறையே இயலும் இசையும் கூத்துமாகிய தமிழை வளர்க்கின்றனர்; இச் செல்வர்களை, " அதூஉம் சாலும் தமிழ் முழுதறிதல்" என்று சான்றோர் வியந்து கூறுகின்றனர் "புலவர் பாடும் புகழுடையோர்" வானுலக வாழ்வுக்குரியர் என்பதும் ஒரு கொள்கை உள்ளதன் உண்மையும் நல்லதன் நன்மையும் எடுத்தோதுவர் இச்சான்றோர்; "செய்யா கூறிக் கிளத்தல், எய்யாதாகின்று எம் சிறு செந்நாவே" என்பதும் இவர்கள் கூற்று ஞாயிறு மண்டிலத்துக்கும் நில மண்டிலத்துக்கும் இடையே, "ஞாயிற்றுப்பரிப்பு" (ஈர்த்து நிற்கும் பிணிப்பு) உண்டு என்றும், வானத்தின் மேலே செல்லச் செல்லக் காற்றே இல்லாத "வளியிடை வழங்கா வழக்கறு நீத்தம்" உண்டென்றும், இவ்வாறு இத்தொகை நூல் கூறும் நுண்பொருள் பல வுள்ளன

இவ்வாறு சங்ககாலத் தமிழ் மக்களிடையே நிலவிய அரசியல், சமயம், வாணிகம், சமுதாய வாழ்வு, அறிவாராய்ச்சி முதலிய கருத்துகளைப் போதிய அளவில் எடுத்துக்காட்டும் இலக்கியக் கருவூலமாக நிற்கிறது புறநானூறு இதன்கண் வழங்கும் சொற்களுள் மக்கள் பேச்சுவழக்கில் இன்றும் உள்ளன

**புறத்திரட்டு** : என்பது சங்க நூல்கள் முதலாக 15ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட நூல்களிலுள்ள புறப் பொருட்

செய்யுட்களைத் தொகுத்த ஒரு நூலாகும் சங்ககாலத்துத் தொகை நூல்கள் பல தனிச் செய்யுட்களைத் தொகுத் தவை. புறத்திரட்டோ பல நூல்களிலுள்ள செய்யுட் களைப் பிரித்துத் தொகுத்துள்ளது. புறத்திரட்டு நூலா னது திருக்குறளைப் பின்பற்றி முப்பால்களாகப் பிரிக்கப் பெற்றது ஆனால், புறத்திரட்டுப் பிரதிகளிற் காமத்துப் பால் காணப்பெறவில்லை புறத் திரட்டுச் சுருக்கமெனப் பின்னரெழுந்த நூலில் உள்ள காமத்துப்பால் செய்யுட் களே இப்போது அச்சிடப் பெற்ற புறத்திறட்டிற் சேர்க் கப்பெற்றன அவ்வாறு சேர்க்கப்பெற்ற காமத்துப்பாற் செய்யுட்கள் 65 இவை யாவும் முத்தொள்ளாயிரச் செய் யுட்கள் பாட்டுடைத் தலைவனையே கிளவித் தலை வனாகக் கொண்ட புறப்பொருட் கைக்கிளை யென அவை கூறப்பெறும்

புறத்திரட்டை நீதித்திரட்டென்றும் சில பிரதிகள் குறிப்பிட்டிருந்தன. நீதி என்பது புறப்பொருளில் அடங்குமேனும், புறப்பொருளெல்லாம் நீதியாகா. ஆகை யால் புறத்திரட்டு என்னும் பெயரே பொருத்த மாயிற்று புறத்திணைத் துறைகள் யாவும் பன்னிரு படலத்தைப் பின்பற்றி அமைக்கப் பெற்றுள்ளன அவை நிரை கோடல் முதல் வாழ்த்து முடிய உள்ள இருபத்து மூன்று அதிகாரங்களாக உள்ளன அறத்துப்பாலில் 45 அதி காரங்களாக உள்ளன அறத்துப்பாலில் 45 அதிகாரங் களும் 473 செய்யுட்களும், பொருட்பாலில் 86 அதிகாரங் களும் 1032 செய்யுட்களும் உள்ளன புறத்திரட்டுச் சுருக்கத்திலிருந்து சேர்த்த காமத்துப் பாலில் உள்ள 65 செய்யுட்களுடன் 1570 செய்யுட்கள் புறத்திரட்டிலுள்ளன

இச்செய்யுட்களைத் திரட்டினோர் யாவரெனத் தெரியவில்லை நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையிலே பல இடங்களிற் புறத்திரட்டுச் செய்யுட்களை எடுத்துக் காட்டுகிறார் புறத்திரட்டாசிரியர் தாம் எடுத்த நூலின் பெயரைக் குறிப்பிடுவதனால் இப்போது முழுவடிவில் இல்லாத பல நூல்களின் பெயர்கள்

தெரிகின்றன அவை ஆசிரியமாலை, நாரத சரிதை, இரும்பல் காஞ்சி, சாந்திபுராணம், பெரும்பொருள் விளக்கம் என்பவை மற்றும் பழைய உரை முதலியவற் றால் நூலின் பெயர் தெரிந்தும், சில செய்யுட்கள் மட்டும் கிடைத்துமுள்ள தகடூர் யாத்திரை, வளையாபதி, குண்டலகேசி போன்றவற்றின் செய்யுட்கள் திரட்டப் பெற்றுள்ளன கம்பராமாயணம் போன்ற வற்றினின்றும் செய்யுட்கள் திரட்டப்பெற்றுள்ளன கம்பராமாயணம் இராமாவதாரம் என்னும் பெயரால் வந்துள்ளது புறத்திரட்டுக் கிடைத்ததனால் இந்நூலில் வந்த நூற்செய்யுட்களில் பிழையற்ற பாடமும் சில வரலாற்றுச் சான்றுகளும் கிடைத்துள்ளன

**புறப்பொருள் :**

தமிழிலுள்ள பொருளிலக்கணம் அகம், புறம் என்னும் இரு பிரிவுகளையுடையது அகப் பொருள் காதலையும், புறப் பொருள் வீரம், கொடை போன்ற வற்றையும் உணர்த்தும் மக்களின் வீரத்தையும் கொடை யையும் அவர் செயல்களாற் பிறருணர இயலுமாகையால் இவை புறப் பொருளாயின

அகவொழுக்கமும் புறவொழுக்கமும் ஐவகை நில மக்களிடையே நிகழுமாதலின் அவ்வாற்றான் ஐந்து வகையாகவும் இவைகளினிடையே நிகழும் ஒழுக்கங்கள் அகம், புறம் என இரண்டு வகையாகவும் கொண்டு, அகத்திணை யேழெனவும் புறத்திணை யேழெனவும் பொருளிலக்கணத்தைத் தொல்காப்பியர் பிரிப்பர்

அம்முறையில், அகத்திணைகளாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை கைக் கிளை என்பவற்றிற்குப் புறத்திணைகளாக முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் எனக் கொள்ளப்பெற்றன

ஆனால், புறப்பொருள்களை மட்டும் பாடிய பன்னிரு படலம், புறப்பொருள் வெண்பாமாலை ஆகிய நூல் உழிஞை, தும்பை, வாகை, பாடாண், கைக்கிளை,

பெருந்திணை, பொதுவியல் என்று பன்னிருவகை களாகப் பிரித்துள்ளன

**இவற்றின் இலக்கணம் :**

1 வெட்சி என்பது அரசனுடைய படைத் தலைவருடைய நாட்டிற்குச் சென்று, அங்குள்ள ஆனிரைகளைக் களவினாலே கொண்டு வருதலைப் பொருந்தியது என்பர். இவ்வாறு செய்தல் போரில் ஆனிரைகளுக்குக் கேடு வராவண்ணம் காத்தலென்னும் அறமாகும் என்பர் எனினும், ஒரு நாட்டின் செல்வமான ஆனிரைகளைக் கவர்ந்தால் அந்நாட்டரசன் போர் தொடுக்க வருவான் என்பதையே நோக்கமென்று கொள்ள வேண்டும் பாரதக் கதையிலும் விராடனுடன் போர் தொடுக்கவிரும்பிய துரியோதனன் ஆனிரை களையே கவர்ந்தனன் என்று கூறுவதுணர்க போர் முறையிலே இது வொன்றே களவென்றும், மற்றவை களவல்ல என்றும் ஆசிரியர்கள் கூறுவர் மற்றும் மலையும் மலைசார்ந்த பகுதியும் இதற்குரிய இடமாகும் என்றும், ஐப்பசியும் கார்த்திகையுமான கூதிரும், மார்கழி, தையெனும் முன்பனியும் ஆகிய பெரும்பொழுதும், இரவாகிய சிறுபொழுதும் இதற்குரிய காலமென்றும் புலவர் அமைப்பர் இவர்கள் வெட்சி மலரை அடை யாளப் பூவாக அணிவர் இவர்கள் ஆனிரைகளைக் கவராவண்ணந் தடுப்பதும் வெட்சியென்றே தொல் காப்பியர் கூறுவர்; கரந்தை கரந்தையை அடையாளப் பூவாக அணிவர் கொட்டைக் கரந்தை யென்னும் பூடு கரந்தையாகும்

2 வஞ்சி யென்பது நாட்டைக் கவரும் விருப்புடைய வேந்தனும், அதனை அவனிடம் விடவிரும்பாத வேந்தனும் பொருதலாகும் விடவிரும்பாத வேந்தன் பொருவதைக் காஞ்சியெனப் பன்னிரு படலம் முதலிய பிற நூல்கள் கூறும் தொல்காப்பியர் வஞ்சி யென்றே கூறுவர் இதற்குரிய இடம் காடும் காடு சேர்ந்த பகுதியும் ஆகும் என்றும், ஆவணி, புரட்டாசித் திங்கள்களாகிய

கார் என்னும் பெரும் பொழுதும், மாலையென்னும் சிறு பொழுதும் இதற்குரிய காலமென்றும் புலவர்கள் அமைப்பர் இவர்கள் வஞ்சி மலரை அடையாளமாக அணிவர்

3 உழிஞை யென்பது ஒரு வேந்தனுடைய தலைநகரைக் கைப்பற்ற அவனுக்குரிய அரணை அவன் பகையரசன் முற்றுகையிடுதலும் ஆகும் தொல்காப்பி யரைத் தவிர்ந்த மற்றையோர் அரணைக் காப்போர் பொருவதை நொச்சித் திணை யென்பர் இதற்குரிய இடம் கழனியும் கழனி சூழ்ந்த பகுதியும் என்றும், காலம் ஆறு பெரும் பொழுதும் வைகறையென்னும் சிறு பொழுதும் என்றும் புலவர் அமைப்பர் புறத்தோன் உழிஞை மலரையும், அகத்தோன் நொச்சியையும் அடையாளமாக அணிவர்

4 தும்பை யென்பது தன் ஆற்றலை உலகம் புகழ வேண்டிப் போர் செய்ய வந்த வேந்தனை மாற்று வேந்தனும் தன் ஆற்றலை உலகிற்கறிவிக்க எதிர்த்துச் சென்று பொருவது இப்போருக்குரிய இடமாகப் பெருமணலுலகமான கடலைச்சார்ந்த நிலப்பகுதியைக் கொண்டனர் ஆறு பெரும்பொழுதும், மாலையான சிறு பொழுதும் தும்பைக்குரிய காலமெனப் புலவர் கூறுவர் இருவருந் தும்பை மலரை அடையாளமாக அணிவர்.

5 வாகை யென்பது அந்தணர், அரசர், வணிகர், வேளாளரென்போரும், அறிவரும் தாபதரும் பொருநரும் ஆகிய பலருடைய இயல்புகளை மற்றை யோரினும் மிகுதிப் படுத்திக் கூறலாகும் இவ்வாறு கூறுதலில் தாமே கூறலும் மற்றையோர் கூறலுமாகிய இருநிலைமையும் உண்டு பாலைக்கு நிலமில்லை யானாற்போல, இதற்கும் தனியே நிலமின்றி நால்வகை நிலமும் இடமாகும் போரில் வெற்றி கொள்வதும் வாகையாகும் வெற்றி கொண்டோர் வாகை மலரை அடையாளமாக அணிவர்

6 காஞ்சி யென்பது வீடுபேறு நிமித்தமாகப் பல வேறு வகைப்பட்ட நிலையாமையைக் கூறுவதாகும். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றின் பகுதியினும் நிலையாமையைக் கூறுவதால், நால்வகை மணமும் கொண்ட பெருந்திணையென்னும் அத்திணைக்கு இது புறனாயிற்று மடலேறுதல் முதலியவை தீயகாமம் ஆயினாற்போல, உலகியலை நோக்க நிலையாமையும் நற்பொருளன்றாயிற்று இதுவும் பெருந்திணை போலத் தனக்கென நிலமும் பொழுதும் வரையறையில்லாதது

இத்திணையில் போர்க்களத்திலே இறந்த வீரர்களைப் பற்றிய பல்வேறு நிலைகளைக் கூறும் மறக்காஞ்சி, பேய்க்காஞ்சி, தொடாக்காஞ்சி, ஆஞ்சிக்காஞ்சி, தொகை நிலை முதலியனவும், வீரர்கள் வஞ்சினங் கூறும் வஞ்சினக் காஞ்சியும், இறந்தவர்களை யெண்ணி வருந்திக் கூறும் மன்னைக் காஞ்சியும் அடங்கும் மற்றும் பொதுவாகக் கூற்றுவன் பெருமையைக் கூறும் பெருங்காஞ்சி, முதியோர் இளைஞர்கட்டு உலகியல் கூறும் முதுகாஞ்சியும், கணவன் இறந்தவுடன் உயிர் நீங்கிய மனைவியின் நிலை கண்டார் இரங்கிக்கூறும் மூதானந்தமும், மனைவியை யிழந்த கணவனுடைய தபுதார நிலையும், கணவனை யிழந்த மனைவியின் தாபத நிலையும், இறந்தவர்களை யெண்ணி மற்றோர் வருந்திக்கூறும் கையறு நிலையும், உறவினர் கூறும் ஆனந்தப் பையுளும், முதுகாட்டை வாழ்த்தும் காடு வாழ்த்தும் போன்றவையாவும் அடங்கும்

7 பாடாண் என்பது பாடுதல் தொழிலையும் பாடப்பெறும் ஆண்மகனையும் நோக்காமல் அவன் ஒழுகலாறாகிய திணையை உணர்த்துவது கைக்கிளை ஒருதலைக் காமமானாற் போலப் பாடுவோன் பரிசிலைக் காதலிக்கப் பாடப் பெறுவோன் புகழையே காதலிக்கி றான் இருவர் காதலும் ஒன்றவில்லை இதுவும் நிலமும் பொழுதும் வரையறையில்லாதது அகத்திணையில்

வரும் காமப் பொருளைக் கூறுங்கால் ஒருவருடைய இயற் பெயரைச் சுட்டுவதும் பாடாண்திணையாகும் முனிவரையும், பார்ப்பாரையும், ஆனிரையையும், மழையையும், முடியுடை வேந்தரையும், உலகையும் வாழ்த்தும் அறுமுறை வாழ்த்தும், தேவர்களை வாழ்த்துவதும் பாடாண் பாட்டாகும்

கடவுளரைக் கடவுட் பெண்டிரும் மானிடப் பெண்டிரும் காதலிப்பதும், கடவுளர் மானிடப் பெண்டிரை நயப்பதும் பாடாண் பாட்டாகும் மற்றும், குழந்தைகளிடம் அன்புற்றுக் கூறும் பிள்ளைத் தமிழும், கடவுளரும் மக்கள் தலைவரும் உலாப் போகும்போது எழுபருவப் பெண்டிரும் காதலிப்பதாகக் கூறும் உலாவும் பாடாண் பாட்டே யாகும் கடவுள் வாழ்த்தொடு வரும் கொடி நிலை, கந்தழி, வள்ளி என்பனவும் பாடாண் பாட்டு இனி அரசர்களையும் வள்ளல்களையும் பாடும் போது கூறும் இயன் மொழி வாழ்த்து, கடைநிலை, பரிசில் நிலை, பரிசில் விடை என்பனவும், செவியறிவுறூஉ புறநிலை வாழ்த்து என்பனவும், அரசர் துயில்வது கூறும் கண்படை நிலையும், அவர்களைத் துயிலெழப் பாடும் துயிலெடை நிலையும், கூத்தரையும் பாணரையும் பொருநரையும் விறலியரையும் ஆற்றுப் படுத்தும் ஆற்றுப்படையும், பிறந்த நாள் விழா, முடிசூட்டு விழா முதலியனவும் பாடாண்திணையில் அமைத்துப் பாடப்பெறும்

## தொல்காப்பிய இலக்கியம்

தொன்மையிலும், புலவர் பாராட்டும் பண்புகளிலும், தன்மையிலும் இறவாச் சிறப்புடைய தமிழ் நூல் தொல்காப்பியரியற்றியது அவர் பெயரே அதற்கு ஆகுபெயராய் வழங்கும் சிறப்புடையது எழுத்திலும் சொல்லிலும் மாறுதலின்றி, ஒன்றன்பெயர் ஏதாமொரு தொடர்பு பற்றிப் பிறிதொன்றிற்கு வழங்குமாயின், அது தமிழில் ஆகுபெயர் எனப்படும் ஆக்குபவர் பெயரின் உயிரைத் திரித்து, அதனோடு 'அம்' விகுதி புணர்த்தி, அவர் நூலுக்குப் பெயரிடும் தத்தித முறை வடநூல் வழக்கு அதை வட சொல்லுக்கு அன்றித் தமிழ்ச் சொல்லுக்கு ஏற்றத் தமிழ் நூலுக்குப் பெயராக்க, வழக்கும் செய்யுளுமாகிய இரு மரபும் இடம் தராது இத்தமிழ் நூலுக்குத் தமிழாகுபெயரைத் தத்திதமாக்கித் தொல்காப்பியமெனப் பேசுவது பிற்காலப் பிழை வழக்கு

**தொல்காப்பியச் சூத்திரவிருத்தி**

*சிவஞான முனிவர் இயற்றிய தொல்காப்பியச் சூத்திரவிருத்தி எனும் இந்நூலில்' தொல்காப்பியப் பாயிரத்திற்கும் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் நூன்மரபில் முதற் சூத்திரத்திற்கும் விரிவுரை எழுதியிருக்கிறார் இது மிகச் சிறந்தவுரை யெனப்புலவர்களாற் பாராட்டப்பெறுகிறது இவ்வுரையில் தமிழிலக்கணம்*

பற்றிய இவர் கொள்கைகள் பல விளங்குகின்றன. அவற்றில் சில தொல்காப்பியத்திற்கு முதல் நூல் அகத்தி யமே. வடமொழி இலக்கணத்திற்கு தமிழி லக்கணம் மாறு படலாகாது. எனினும் வடமொழி இலக்கணம் வேறு.; தமிழிலக்கணம் வேறு, ஆகுபெயரும் அன் மொழித் தொகையும் வேறு. குற்றியலுகரம் உகரத்தின் திரிபன்று. நன்னூலாசிரியர். சார்பெழுத்து பத்து என்றது தவறு; மூன்றேயாம். இவர் இவ்வுரையில் கூறும் தொகைநிலைத் தொடர், தொகாநிலைத்தொடர் வேறுபாடும், இடைச் சொல்லின் பெயர்க்காரணம், பாலைத்திணை நடுவுரு நலைத்திணையெனப் பெயர் பெற்றதன் காரணம் போன்ற விளக்கங்ளும் மிகவும் பாராட்டற்குரியன.

தமிழில் மூவாயிரம் ஆண்டுக்கு முன் பிறந்து, இன்னும் இறவாது நின்று நிலவும் பனுவல் தொல்காப் பியர் நூலொன்றேயாம். 'பஃறுளியாற்றுடன் பன்மலை அடுக்கத்துக் குமரிக்கோட்டுத்' தென்பாண்டி நாட்டைக் கடல் கொள்ளு முன் கபாடபுரத்தில் நிலம்தரு திருவிற் பாண்டியன் அவையில் வழங்கிப் பொருவிலாப் பெரு நூல் தொல்காப்பியர் என்பது நமக்குக் கிடைக்கும் அகப் புறச் சான்றுகள் அனைத்தாலும் விளக்கமாகிறது. இதன் பெருந்தொன்மை, நடு நிலைப் புலவர், ஆராய்ச்சி யாளர் எல்லாரும் உடன்படும் நல்ல முடிபு.

முதலில், புற வரலாறுகளால் இந்நூல் 3,000 ஆண்டுகளுக்கு முந்தியதாதல் ஒருவரும் மறுக்கொணா உண்மை. கடல் கோளுக்குப் பிந்தி, பாண்டியர் ஆண்ட கூடல் மதுரை மூன்றாம் சங்கம் முழங்கிய காலம். மதுரை புத்தருக்கு முந்தியது. புத்தருக்கு முந்திய பாடலி மோரியர் ஆட்சியிலேயே மதுரையும் பாண்டியரும் வட ஆரியர் புகழும் பெருமை பெற்றிருந்தன. பாண்டியர் பாடிய பழந்தமிழ் நாட்டுக் கடல்கோளில் அழியாமல் சிதறிய பிழைத்த தென்தமிழர் மீண்டும் கூடிக் குடியேறியதால் முதலில் 'கூடல்' எனப் பெயர் பெற்ற ஊரே பிறகு கூடல் மதுரை எனச் சிறந்தது. கடல் கோள், கி.பி.2 ஆம்

நூற்றாண்டுக்குப் பிந்தாத சேரன் செங்குட்டவன் காலச் சிலப்பதிகாரத்தில் 'பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள..........'(11:19-20) பேசப்படுகிறது. இன்னம் இக்கடல் கோள் 24 நூற்றாண்டுகளுக்கு முந்திய முல்லைக் கலியிலும் வருகிறது.

'மலிதிரை ஊர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம்பட
புலியொடு வில்நீக்கிப் புகழ் பொறித்த கிளர்கெண்டை
வலியினால் வணக்கியவாடாச்சீர்த் தென்னவன்'(கலி.104)

கூடல் மதுரைக் கடைச்சங்கப் பாட்டுக்கள், கி.மு. முதல் 5-6 நூற்றாண்டுவரை பழமை உடையன. அவற்றுள் சில கடல்கோளுக்கு முந்திய கபாடப்பஃறுளி நாட்டுப் பாண்டியரை நேரில் பாராட்டிப் பாவலர் பாடியவை. முடிகொண்ட மூவரையும் அவரவர் குடிக்குச் சிறப்புரிமை பூண்டு வறளாது புரண்டோடும் பேராற்றைச் சுட்டி, 'அதன் மணலிலும் பலவாண்டு வாழ்திர்' எனப் பாடுதல் பண்டைப்புலவர் கொண்ட மரபு. ஆன்பொருநையைச் சேரருக்கும், காவிரியைச் சோழருக்கும் சுட்டுதல்போலக் கடல்கோளுக்கு முந்திய குடும்பப் பாண்டியனுக்கு வையையைப் பேசாமல் 'அவன் காலப்' பஃறுளி மணலினும் பலவாய்ச் சிறக்க நின் ஆயுள்' என வாழ்த்திய நச்செள்ளையாரின் புறப் பாட்டு (புறம் 9) அக்காலம் பஃறுளி யாற்றுடன் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ளுமுன் பாண்டியர் சுபாடபுரத்தி லிருந்து தென்பொருனை என்னும் தாம்பிர பருணிக்குத் தெற்கேயிருந்த நாட்டை ஆண்டதற்குச் சான்று பகரும். அது நற்றிணையிலும் புறப்பாட்டுக்ளிலும் சுட்டப்படுவ தால் அறியலாம்.

அன்றியும், கி.மு. 6ஆம் நூற்றாண்டுக்கு முன் இருந்த வான்மீகரும், தாம்பிரபருணியைத் தாண்டித் தெற்கே

பாண்டியரின் செல்வாகுமிகுந்த கபாடபுரத்தைப் பார்க்கலாம் எனத் தெளிவாகக் கூறுதலாலும், தொல் காப்பியனார் தம் நூலை அரங்கேற்றிய இபாடபுரம் பஃறுளியாற்றுப் பாண்டிநாட்டிலிருந்தது தெளிவாகும்

இன்னும் தொல்காப்பியர் நூலின் வாழ்த்தாய், அவருடன் படித்த பனம்பாரனார் பாடிய பாயிரப் பாட்டி லும், குமரி முதல் வேங்கடம் வரை விரிந்து பரந்த பழைய பஃறுளிப் பாண்டிநாட்டை ஆண்ட நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையில் தொல்காப்பியர் தம் தமிழ்ப் பெருநூலை நிறுவினர் எனும் செய்தி விளக்கப் படுகிறது

அன்றியும் கி.மு 4ஆம் நூற்றண்டுக்கு முந்திய தெனத் துணியப்பட்ட பாணினியாரின் சிறந்த வடமொழி நூலுக்கு முந்திய வியாகரணம் எல்லாம் வழக்கொழிந்து மறுக்கப்பட்டன அக்காலமுதல் வடசொல் எல்லாம் வினை முளையை முதலாகக்கொண்டு விளைந்த தென்னும் கொள்கை இறுதியாக நிறுவப்பட்டு, அது முதல் நிலைக்காத ஆட்சியிலிருந்து வருகிறது

தொல்காப்பியர், பாணினி-பதஞ்சலி முனிவரின் வியாகரணங்கள் பிறக்குமுன் இருந்திறந்த 'ஐந்திரம்' நிறைந்தவர் என்று பனம்பாரர் பாயிரப்பாட்டு வற்புறுத்து வதாலும், வினைத்தொடர்பும், விதையும், முளையும் வேண்டாமலே இசை, உரி, பெயர்ச்சொல் வகைகள் எல்லாம் தொல்காப்பியர் சொல்லுவதாலும் பாணினிக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னமே ஆக்கப்பட்டதாதல் தேற்றமாகும் இவை பலவும் தொல்காப்பியர் நூலின் பெருந்தொன்மைக்குப் புறச் சான்றுகளாம்

இனி, இந்நூலின் அகச்சான்றுகளும் இதன் இறப்பவும் முந்திய அறப் பழந்தொன்மையை வற்புறுத்தக் காணலாம் தொல்காப்பியர் நூல் மதுரைக் கடைச்சங்கத்துத் தொகைச் செய்யுள் அனைத்துக்கும்

பல நூற்றாண்டுகளுக்கு முன்னது என்பதும், நற்றிணை, அகம், புறம் தொகைப் பாட்டுக்களில் சில கி.மு.5-6ஆம் நூற்றாண்டுகளுக்கு முந்தியவையென்பதும் ஒருவாறு முன்னமே சொன்னதாகும் தொல்காப்பியர் தம் நூலைத் தற்கால நூலொடு வழக்கையும் தழுவி, எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி, முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப் புலந்தொகுத்தார் என்றறிகிறோம் அம் மூன்று பகுதிகளின் ஆன்ற விதிகளும் பண்டைத் தொகைப் பாட்டுக்களில் கண்ட பல ஆண்டுகளுக்கு முந்தியதாதல் ஒரு தலையாகும் இம் முரண்பாடுகள் இந்நூலின் தொன்மைக்கு நற்சான்றாவதுடையன, அவை இந்நூலின் நன்மரபுகளை விளக்குவதாலும் அவை ஆராயத்தக்கனவாம்

1 முதலில் தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில்

(1) சகரக்கிளவியும் அவற்றோரற்றே, அ,ஐ,ஔ
எனும் மூன்றலங்கடையே (சூத் 27)

(2) ஆ-எ-ஒஎனும் மூவுயிர் ஞகாரத்துரிய (31)

(3) 'அ' போடல்லது யகரம் முதலாது (32)

இவை ஒவ்வொன்றுக்கும் மாறாகச் சங்கப் பாட்டுக்களின் பலமொழிகள் பல்காலும் பயிலுகின்றன

2 சமழ்தல்-சவட்டு-சாந்தி-சட்டி-சண்பு-சதுக்கம் என்பல சொற்களில் விலக்கப்பட்ட சகரமும், சைவம்-சௌரம்-எனச் சைகார-சௌகாரங்களும் மொழி முதலாகப் பயிலுகின்றன

3 அதுவே போல, ஞமலி - ஞரலல்-ஞமிறு,ஞேயம் என விலக்கப்பட்ட உயிர் ஏறிய ஞகர உயிர் மெய்களும்

4 யவனர், யூகம், யூபம் என விலக்கப்பட்ட உயிர் ஏறிய யகர உயிர்மெய் முதலிலுடைய சொற்களும் சங்கப் பாட்டுக்களில் பயிலுகின்றன

இனி, இரண்டாவது சொல்லதிகார முரண்பாடு களையும் பார்க்கிறோம்

*1 'முன்னிலை தன்மை ஆயீரிடத்தொடு மன்னா தாகும் வியங்கோட் கிளவி' (சூத் 226)*

இது தொல்காப்பியரின் தெள்ளிய கூற்று இதற்கு நேர்மாறாகச் சங்க இலக்கியங்களில் முன்னிலை-தன்மை இரண்டிலும் வியங்கோள் பயிலுவன

*2. முன்னிலையில் வியங்கேள் : அ (புறம்.6) - குடுமி மன்னிய பெருமநீ நிலமிசையா.னே ஆ (புறம் 9) எங்கோவாழிய, குடுமி நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே இ (நற்34) 'கடவுறாயினும் ஆக; மடவை மன்ற வாழிய முருகே' ஈ (அகம் 46) 'வண்டூது பனிமலர் ஆரும ஊர, யாரையோ நிற்புலக்கேம், வாழியர் எந்தை' உ நற்றிணை 16-32-86-212; அகம் 54-59-85 பாக்களையும் பார்க்க*

*தன்மையில் வியங்கோள் : (புறம் 71) அ 'அவர்ப்புறம் காணேன் ஆயின், சிறந்த பேரமர் உண்கண் இவளினும் பிரிக' 'மெலிகோல் செய்தேன் ஆகுக' இவற்றுள் 9 ஆம் புறப்பாட்டுப் பஃறுளிப் பாண்டி நாட்டைக் கடல் கொள்ளுமுன் பாடிய -27 நூற்றாண்டுகளுக்கு முந்திய-பழம்பாட்டாதல் வெளிப்படை. இவை போல்வன பல தொல்காப்பியர் சொல்லதிகார விதிகளொடு முரணும் வழக்குகள் இனிக் கடைசியாகத் தமிழிற் சிறந்த பொருள திகார விதி வீழ்ச்சி வழக்குக்குகளையும் சந்திப்போம்*

*1 அகத்திணைப்பாக்கள், 'கலியே, பரிபாட்டு-ஆயிரு பாவினும், உரியதாகும் என்மனார் புலவர்' (அகத்திணை சூத்.53)*

*2 புறநிலை வாழ்த்தே, கலிநிலை வகையும், வஞ்சியும் பெறா' (செய்யுளியல் சூத்.110)*

*3 'வாயுறை வாழ்த்தே, அவையடக்கியலே செவியறிவுறூ என அவையும் அன்ன' (செய் சூத் 111)*

*இவை தொல்காப்பியரின் விதிகள் 1 அகத்துறைப் பாக்கள் எல்லாம்கலி - பரிபாட்டுக்களில் மட்டும் வருதல் வேண்டும்; 2 புறநிலை முதலிய நான்கு வாழ்த்தியல் வகைகளும் வஞ்சி - கலிப்பாக்களில் வாரா என, 106, 107 சூத்திரங்கள் கூற, அவை வெண்பா-அகவல்களில் தான் வரும் என இவ்விதிகளின் எதிரிடையாயும் 154 ஆம் சூத்திரம் சுட்டுகிறது. இவற்றிற்கு முற்றும் மாறாக, அகநானூறு, நற்றிணை, ஐங்குறு நூறு, குறுந்தொகை அனைத்தும் அகவலிலும், கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, வள்ளுவர் காமத்துப்பாற் குறள்கள் எல்லாம் வெண்பாவிலும் காதல் பாடுகின்றன*

*117 ஆம் சூத்திரம் பரிபாடலைக் காதலுக்குரிய கவியாக விதிப்பதற்கு மாறாகச் சங்க காலப் பரிபாடல் களில் பெரும்பாலன, காதல் கருதாப் புறத்திணைப் பாக்களாகப் பயில்கின்றன*

*இன்னும் மரபியலில் சூத்திரம் 4-5-11ல் பிள்ளை யென்னுஞ் சொல்லும், சூத்-6ல் 'குட்டி', சூத்-8ல்'குருளை', சூத் 22ல் 'குழவி', சூத் 63-64ல் 'நாகு" என்ற சொற்களும் இன்னின்ன உயிரினங்களின் குழவி, பிள்ளை, குஞ்சுகளுக்குரியவை என்ற விதிகள் அனைத்தும் பிறழச் செந்தமிழ்ச் செய்யுட்களில் வந்திருக்கின்றன*

*சூத்திரம் 287 முதல் 291 வரை உவம இயல் விதிகளைப் புறக்கணித்து, உவமப் பொருளோடு பொருந்தா உருபுகள் சிறந்த பழைய தொகைப் பாட்டுக்களில் வழங்குகின்றன*

*இவ்வாறு முரணும் மாறுபாடுகள் எண்ணில இவை சிறந்த செய்யுள் வழக்குகளில் இருக்க, இவற்றை மறுத்து இலக்கண விதிகளை யாரும் இயற்றத் துணியார் ஆதலால் இவ்விதிகளை யாரும் இயற்றிய காலம் இப்பாட்டுக்களுக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னா தல் ஒருதலை இப்பாட்டுக்கள் கிமு 7 ஆம நூற்றாண்டு*

வரை போவதால, தொல்காப்பியர் நூல் 3,000 ஆண்டுகளுக்கு முன்னதாதல் தேற்றமாகும்

தொல்காப்பியருக்கு முன் தமிழில் நுண்புலமை இலக்கண நூல்கள் இருந்த செய்தி இவர் நூலில் பல இடங்களில் இவர் கூற்றுக்களுக்கு ஆதரவாக ஆங்காங்கே 'என்ப', 'என்மனார் புலவர்', 'மொழிப' என்று சுட்டுவதால் விளங்கும் இவருக்கு முன் பல நூல்கள் இருந்தது மட்டுமல்ல; சிறந்த பகுதிகளுக்கு விரிந்த தனிச்சிறப்பு நூல்களும் வழங்கின என்பதும் சுட்டப்படுகிறது 'யாப்பென மொழிப, யாப்பறி புலவர்', 'தோலென மொழிப தொன்மொழிப் புலவர்', 'என்பர், தொடை உணர்வோ' என்ற குறிப்புக்கள் இடை யிடையே சுட்டுதல் சிந்தித்தற்குரியனவாம்

எனவே, தொல்காப்பியருக்கு முன் ஆதார நூல்கள் பல என்பதும், அவற்றைப் படித்துத் திரட்டிச் சுருக்கி உருவாக்கியதே தொல்காப்பியர் நூலென்பதும், அதற்கு முதுல் நூல் அழிந்த 'அகத்தியம்' ஒன்றே என்பது பின் புராண காலத்திற் புகுந்த கதை என்பதும், நேரிய ஆராய்ச்சி யாளர் நடுநிலை முடிபாம்

இலக்கிய வரலாறுகளும் நூற்சான்றுகளும் இவ்வுண்மையை வலியுறுத்தக் காண்பதுமட்டுமன்று, கி பி 3 ஆம் நூற்றாண்டுக்கு முந்திய சங்க இலக்கியங்களில் அகத்தியர் பெயர் கூறப்பெறாமையும் இவர் கதையின் புதுமையைச் சுட்டப் போதிய சான்றாம் ஆரிய நூல் வரலாற்றால் மூவர் அகத்தியர் கூறப்படுகின்றனர்

முதலூழியில் ஆதிவேத காலத்துக்கு முன் இமயத் தருகே திரிந்த முனிவர் தலைவர், உலோப முத்திரையின் கணவர் முதல் அகத்தியர் பிறகு 2 ஆம் ஊழியில், வான்மீகர் இராமாயண ஆரணிய காண்டத்தில், அயோத் திக்குத் தெற்கே பஞ்சவடிப் பக்கத்தில் தவம் பண்ணிக் கொண்டு தங்கியவராகச் சொல்லுகிற அகத்தியர் 2 ஆம் அகத்தியர் இருவரும் ஆரியர் முதல்வர் தென்தமிழ்

நாடிருந்த செய்தி கேட்டு மறியாதவர் இராமர்காலப் பஞ்சவடி அகத்தியரும் தமிழறிந்தவராக வான்மீகர் சுட்டவில்லை அவரின் வேறாய் கிட்கிந்தா காண்டத்தில் தெற்கே மலையத்தின் தென்கோடியில் வசித்தவராக ஓர் அகத்தியர் சுட்டப்படு கிறார். அவருக்குத் தமிழ் தெரிந் திருக்கலாம் ஆனால் தமிழ் இலக்கண முதல் நூல் இயற்றியவரென்றவரை வட வான்மீகரும் தமிழ் கம்பரும் சொல்லாததோடு, கம்பர் அவரை, 'என்று முள தென் தமிழ் இயம்பி இசை கொண்டார்' எனவும், தம் நூலால் தமிழுக்குச் சிறப்புத் தருதற்கு மாறாகத் தமிழ்ப் பயிற்சி யால்தான் பெருமை யடைந்தாரெனவும் தெளிவாக விளக்குகின்றார் இது, தொல்காப்பியருக்கு அகத்தி யரைத் தமிழறிவித்த முதுனூலாசிரியராக்கி, அகத்தியர் முதனூலை வழக்கிழக்கவைத்து நன்றி கொன்ற பழியையும், தொல்காப்பியருக்குச் சுமத்தும் பிற்காலக் கதையை முழுதும் பழுதாக்கும் நூற்சான்றாகும் 'காப்பியர்' என்பது பழைய தமிழ் நூல்களில் குடிப் பெயராய் வழங்குகிறது சேந்தன் தந்தை காப்பியனார், காப்பி யாற்றுக் காப்பியனார், பல் காப்பியர், தொல் காப்பியர், எனப் பல புலவர் அகபெயரு டையார் உண்டென்பது பண்டை இலக்கியங் களில் கண்ட செய்தி

இப்பெருநூலைத் தம் பெயராலியற்றியவர் அப் பெயருடையரான இவருக்கும் முந்தியவராதலால் தொல்காப்பியர் எனப் பனம்பாரர் விளக்கமாகக் கூறு வதைப் பொய்யாக்க, யாதோர் ஆதாரமுமில்லாத தோடு அகத்தியர் பெயரும் சுட்டாத சங்கத்தொகை நூல்களும் அக்கதையைப் புறக்கணிக்கப் போதியனவாம்

இனி இப்பழம்பெரு நூலின் அருமை பெருமை பற்றிச் சுருக்கமாகபார்ப்போம்

தொன்மையாலும், நிறை நூல் முறை நன்மை யாலும் சிறந்தது தொல்காப்பியர் நூல் தமிழில் இறவாமல் 3000 ஆண்டுகளுக்குமேல் நின்று நிலவும்

பழமை போலவே, கறையிலா நிறைவு, அறிவு சால் செறிவு, நிரம்பு வளம் வபரம்பிறவாமல் வரையறுத்து வடித்த முறை வனப்பு, மொழிவளர்ச்சிக் கென்றும் தளர்ச்சி தராக் கட்டமைப்புக்களால் ஒப்புயர் சிறப்பு வாய்ந்த (இலக்கண) நூல் தொல்காப்பியர் பெயரால் வழங்குகிறது

தமிழில் மட்டுமன்று; உலகில் நிலவும் பலமொழி களில் பாராட்டப்பெறும் எல்லா இலக்கணங் களிலும் இல்லாத பழமையும் பெருமையும், அழகும் அருமையும் அமைந்தது யவன அரித்தாட்டில், ஆரியப் பாணினி பதஞ்சலி நூல்களுக்கு முன்னமே, அவர் நூல் களில் நிரம்பா வளமும் வரம்பும், வகுப்பியல் நெறி முறைச் செறிவும், செப்பமும், இயல் எழிலும் நிறைந்து நிற்பதிது எபிரேயம், பழைய பாரசீகம், சீனம் போன்ற பழைய மொழி நூல்களில் காணொணாத் தருக்க வருக்கப் பெருக்கும், செய்யா வரன்முறை இயற்கை வளர்ச்சி வரலாற்றின் நெருக்கும் இருக்கப்பெற்றது தொல் காப்பியர் நூல்

இலத்தீன், ஆரிய இலக்கணங்களில் பொருளியல் பால் சொல்வகை அமையாமல், விதித்த சாரியை-விகுதிகளால் இடம் பால் பிரிவுகள் நடைபெறுகின்றன; திறம்பாச் சில வரம்பால் பெயர் வினைச்சொல்லியல் மாறுதல் தெளிக்கப்பெறாமல் எழுத்துக்களின் உருவும் ஒலியும் திரிபுச் சொற்கள் பலவித மாறுதலையடை கின்றன உதாரணமாக வடமொழி இலக்கணப்படி மனைவி எனும் ஒரு பொருள் குறிக்கும் 'பாரி - தாரம் - களத்தி' எனும் மூன்று சொல்லும் மூவேறு பால்களைக் குறிக்கும்

குருவிலிருந்து 'கவுரவம்' எனவும், சுலபத்திலிருநது சௌலப்பியம் எனவும், சுந்தரத்தி லிருந்து சௌந்தரம் எனவும் புதிய சொற்கள் பிறக்கும் ஒரு சொல்லின் எழுத்துகளைக் குறுக்கலும், நீட்டலும், குறைத்தலும்,

கூட்டலும், திரித்தலும், விரித்தலும் நியதியின்றி உருவும் பொருளும் வேறுபடப் புதிய சொற்கள் பிறக்கும் தொல்காப்பியர் நூற்படி, தமிழ்ச் சொற்கள் நியதி என்றும் பிறழாமல் எளிதிலுணரும்படி வினைபெயர் வகையும், இடம் பால் இயல்பும் சுட்ட எல்லாச் சொல் லுக்கும் என்றும் யாண்டும் மாறாத சில உறுப்புக் களால் உடன் உணர இயற்கையொடு முரணாமல் அமைந்திருப் பதைக் காணலாம்

உயிரினங்களில் மக்கள் வகுப்பு மட்டுமே கூட்டுறவுக்கின்றியமையாத பேசும் திறம் பெற்றுள்ளது பொருளைக் குறிப்பதே பேச்சின் நோக்கமாகும் பொருள் குறிக்கும் சொற்களே எல்லா மொழிக்கும் அடிப்படை சொற்கள் ஒலிகட்குரிய எழுத்துக்களை உறுப்பாகக் கொண்டிருக்கின்றன. அதனால் , கருதும் பொருளும், பொருள் குறிக்கும் சொல்லும், சொல்லின் உறுப்பாம் எழுத்துமே இலக்கண நூலின் இயற்கைப் பகுதிகளாகும் இவ்வியலின் முறைப்படி தொல்காப்பியர் இலக்கண நூல், எழுத்து, சொல், பொருள் என முத்திறப்பட வகுக்கப்பட்டு , ஒவ்வொரு பகுதியும் இயன் மொழி வளர்ச்சி வரலாறுகளை வரன்முறைப் படுத்தி வகை, தொகை, வரிசைப்படுத்தி ஒழுங்குபடச் சுருக்கி விளக்குகிறது

‘எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே’ (சொல் 155), ‘பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும் சொல்லின் ஆகும்’ சொல் (156) என்பன தொல்காப்பியர் விதிகள் ஐம்பால் மூவிடம் எல்லா மொழிக்கும் இயற்கை வகைமுறை திணைவகை மட்டும் பிறமொழி எதனிலும் இல்லாத தமிழனுக்குரிய தனிப் பெருஞ்சிறப்பு பொறிகளிற் பிறக்கும் புலனைந்தும் உயிரினமெதற்கும் பொதுவுடைமையாகும். நன்று தீதறிந்து, தீமையை விலக்கி, நன்மையே விரும்பி ஒழுகும் சிறப்பு மக்களின் தனிச் சிறப்பாதலின் ஒழுக்கம் ஒன்றே மக்கட் பண்பெனப்பட்டது ‘உறுபொத்தல் மக்கள் ஒப்பன்றால்;

வெறுத் தக்க - பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு'(குறள் 993), 'அரம்போலும் கூர்மையே ரேனும் மரம்போல்வர் மக்கட் பண்பில்லாதவர்' (குறன் 997) இவை இறவாக் குறள் அறநூற் கூற்றுக்கள் இம்மக்கட் பண்பாம் ஒழுக்கத்தினை திணையாக்கி, உயர்ந்த ஒழுக்கம் உடைய மக்களை குறிக்கும் சொற்களை உயர்திணை எனவும், பிற எல்லாச் சொற்களும் திணை (ஒழுக்கம்) அல்லாதன (குறியாதன) அதாவது அல் திணைச் சொற்கள் எனவும் தொல்காப்பியர் கூறினர் 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்பது தொல்காப்பியர் விதி மக்களை சுட்டுவனவாம் சொற்கள் மட்டுமே உயர்திணை எனப்படும் என்று அவர் தெளிவாக விளக்கியுள்ளார் இத்தமிழ் மரபறியாத வட நூலறிவு நிறைந்த பெரும் பண்டிதர்கூட, சொற்களைவிட்டு, 'மக்கள்தேவர் நரகர் உயர்திணை' எனக்கூறுவர்

முதலில் இலக்கண நூல் சொற்களையே குறிக்கும் அன்றிப் பொருட்பாகுபாடு சுட்டாது தேவரும் நரகரும் யாவரும் ஆகுக. அவரைப் பற்றிய பேச்சுக்கு இலக்கண நூலில் இடமில்லை ஒழுக்கம் 'மக்கள் பண்பு' அதனால் அப்பண்புடைய மக்களை மட்டும் சுட்டும் சொற்களை உயர்திணை எனச் சுட்டும் தொல்காப்பியர் இம் மரபறியாமல், இழிவொழுக்குடைய நரகரை உயர்திணை யாக்கியதோ டமையாமல் ஒ(ழு)க்கமே குறியாத மரம், மண் முதலிய பொருள்களை எல்லாம் 'அல்திணை' எனவும் 'இழிதிணை' எனவும் சுட்டினர் பின் நூலார் (நன்னூல் 245 ஆம் சூத்திரம் காண்க) பெயர்ச் சொற்களுக்கு இடம் பால் வகைகள் எங்கும் உண்டு எனில் திணைப் பிரிவு வேறு

எந்த மொழியிலும் இயலாத தமிழின் தனிச் சிறப்பு அம் மரபறிந்து ஐயம் திரிபுகளுக்கிடமின்றித் திணையை விளக்கியவர் தொல்காப்பியர் பொருளைக் குறிப்பதே சொல்லின்.நோக்கம், சொல்லின் உறுப்பு எழுத்தாதலால், அவர் எழுத்தை முதலில் சுருக்கியும், அடுத்துச்

சொல்லைப் பெருக்கியும், இறுதியில் கருதும் பொருளை வகுத்தும் பொருள் குறிக்கும் சொல் தொடர் முறை களைத் தொகுத்து விளக்கியும் நூலெழுதி உள்ளார் முதலில் எழுத்துப் படலத்தில் தனி உயிர்க்குறில் 5 அவற்றின் நெடில் 5, அ+இ, அ+உ எனும் இணையுயிர் 2 ஆக உயிர்வகை 12 இனத்துக்கு 6 வீதம், வன்மை, மென்மை, இடைமை என முத்திறத் தொலிக்கும் மெய் 18; ஆய்தம் 1 ஆக எழுத்து 31 தாமே இயங்கவும், ஒன்றை இயக்கவும் பயன்படு மெழுத்தை உயிரெனவும், உயிரின்றி இயங்கா எழுத்தை மெய் எனவும், தனக்கு உருவின்றி ஆயும் நுண் ஒலியுடை ஒன்றை ஆய்தம் எனவும் முறையே எழுத்துக்களுக்கு மூன்று பெயரிடப் பெற்றன எழுத்துக்களின் பிறப்பும், புணர்ப்பும், வரிசையும், வகுப்பும் எல்லாம் இப்படலத்துள் அடங்கும்

இரண்டாவது சொல்லின் படலம், திணை, பால், எண், இடம் எனும் வகை விளக்கியும், பெயர்களை அவற்றின் வேற்றுமை வகையொடும், செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருளென்று ஆறும் தரும் வினைகளைத் தெரிநிலை, ஏவல், வியங்கோள் வகையுடன் அவற்றின் முதல், ஈறு, இடைநிலை, சாரியை, சந்தி வேறுபாடெனும் வகை ஆறோடும், பெயர், வினை இரண்டின் எச்சங்களோடும், இடை, உரி இனவகை, பயன் இவை எல்லாம் விளக்கியும், சொல்லின் இலக்கணம் எல்லாம் வகுத்தார் இயற்கை, திரிபு, திசை, வட சொற்கள், நான்கும், அவற்றின் பொருட்கிடை நான்கும், தொகை வகை ஆறும், எச்சம் பத்தும், சொற்களின் மரபும் ஆட்சியும் விளக்கித் தொகுத்தார்

மூன்றாவதாக, முடிவில் பொருட் பகுதி மக்கள் வாழ்வொடு தொடர்புடைய எல்லாம் பொருள் என்று எண்ணப்படும் எனவே, வாழ்வொழுக்கமும் அறமும் பொருள் வகையாகும் பால் வேறுபட்டால் இயற்கைப் பண்பால் ஒன்றி ஒருப்படும் ஒழுக்காறனைத்தும் அகத்திணை எனப்படும். பால் இயலன்றி மக்களின் மற்றக்

கூட்டுறவொழுக்க வகை புறத்திணையாகும் பால் பற்றிய அக ஒழுக்கம் காதல் கண்ணியதாதலால் காதலர் கூட்டமும் பிரிவும், நாட்டமும் வாட்டமும், இணக்கமும் பிணக்கமும், ஏனைய விளைவும், மறைவில் தொடங்கி நிறையால் மணந்து தொடரும் களவு, கற்பு என்னும் இருவகை ஒழுக்கமும் அவ்வொழுக்கிற்கு இயல்பாம் உள்ளத்து உணர்வும், கருதாதியல்பில் உடலில் நிகழும் மெய்ப்பாட்டு வகையும் அகத்திணையாகும் பண்டை மக்கள் கண்ட கூட்டுறவெல்லாம் அண்டலும் சண்டையும் நேரிய உறவும் போரின் முறைகளும் ஆகும். அவை புறத்திணை வகைகளாகும் இருதிணை வகைகளும் பொருளின் தொகையாம் இதுவே பொருட்பாலின் சிறப்புப் பகுதி.

இனி, அப்பொருளைப் பேசும் செய்யுள் அல்லது சொற்றொடை யாப்பு மரபுகளைச் சுருக்கி, உவமம், செய்யுள், மரபு என வகுத்து விளக்கி முடிக்கும் இந்நூல்; அதாவது அணி, யாப்பு, வழக்கு வகைகளாம் யாப்பு அல்லது செய்யுள் என்பது பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என ஏழு வகையாகும் செய்யுளைப் பாட்டென்பது பிற்கால வழக்கு அதனால், இலக்கியம் என ஒரு புதுச்சொல் ஆட்சி எழுவதாயிற்று

உரையும், பாட்டும், பிசியும் எல்லாம் செய்யுளின் வகைகள் என்று தொல்காப்பியர் தெளிவுறுத்தியும், பின்னோரதனைப் போற்றாது மறந்து, மரபிறக்கத் தமிழ்ப் பழஞ் சொல்லையும் துறந்ததார் ஓசையும் தூக்கும் கருதிப் பாட்டுக்குச் சிறப்பாக எழுத்தால் அசையும், அசைகளால் சீரும், சீரால் தளையும் வரையறை செய்தார் சீரொடு தளையால் பாவகை நான்காய், அடி யளவாக்கம், முடிவின் முறையொடு, பொருள்கோள் வகையும், மரபும் பிறவும் மயக்கற விளக்கிப் பொருட் பாலோடு நூல் முடிந்துள்ளது

இடையிற் சிற்சில பிறரால் பிந்திப் புகுத்தவும் பெற்றுள தொழிலான்றி பிறப்பால் பிளவாம் சாதி வகைகள் நுழைக்கப்பட்ட நூதன விதிகள் என்பது முன்பின் சூத்திர முறையொடு பொருந்தா வெறிப்பால் எளிதில் விளங்கும் விலங்கின் மரபுகளுக்குப் பின்னும் தாவர வழக்குகளுக்கு முன்னும் இயல் தொடர்பின்றி மரபியல் 70 முதல் 84 முடிய உள்ள சூத்திரங்கள் அக்காலத் தமிழகத்தில்லாத சாதி வகை வழக்கங்களைக் குறிப்பது வைப்பு வரிசை முறையொடு முரணும் தப்புச் செருகலென்பது தேற்றம்

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' என்பது, காலத்தால் தொல்காப்பியரை அடுத்து, மற்றச் சங்கப் பாட்டுக்கள் அனைத்துக்கு முன் அதனை எடுத்தாளும்படி குறைந்தது 25 நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்து சிறந்த வள்ளுவர் குறளும், அக்காலத் தமிழர் வழக்கை வற்புறுத்துவதாலும், அதற்குப் பல நூற்றாண்டு முந்திய தொல்காப்பியர் சொல்லாத இடைச் செருகல் இச்சாதி பேத சூத்திரங்கள் என்பது வலியுறும்

இக்கட்டுரையின் முதலிற் சொன்னது போலவே, முடிவிலும் தொல்காப்பியர் நூல் தொன்மையாலும், நூற்பொருட் சிறப்பின் நன்மையாலும் முதலிடம் பெறுதற்குரிய தென்பதை யாரும் மறுக்கவும் மறக்கவும் இயலாது.

**தொல்காப்பியனார்**

தொல்காப்பியம் என்பது இலக்கண நூலின் ஆசிரியர் பண்டைத் தமிழ்ப் புலவர்களின் வரலாறு போலவே இவருடைய வரலாறுந்தெரியாத நிலையிலுள்ளது தொல்காப்பியர் செய்தது தொல்காப்பியமென்று பெயர்பெற்ற தென்பார் பலர். தொல்காப்பியர் என்னும் நூலைக் கொண்டே தொல்காப்பியம் என்று பெயர் வந்திருக்க வேண்டுமென்பர் சிலர் தொல்காப்பி

யத்தின் சிறப்புப்பாயிரத்திலே 'தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி' என்பதற்கு உரையாசிரியர் இளம்பூரணர், 'பழைய காப்பியக் குடியிலுள்ளோன் என்று தன் பெயரைத் தோற்றுவித்து' என்று உரை கூறுகிறார் இங்குக் காப்பியக் குடி என்பது எதைக் குறிக்கிறதென்று தெரியவில்லை சிலர் கவியின் மரபு என்னும் பொருள் கொண்டு கவி சுக்கிரனைக் குறிக்கிறதென்று குறிக்கறிதென்றும், சுக்கிரனுடைய மரபிலே தோன்றியவ ரென்பது தத்திதாந்த நாமம் என்றும் கூறுவர் காப்பியக்குடி தமிழ்நாட்டிலுள்ள ஓரூராக இருக்கலாமோ என்பதும் நினைத்தற்குரியது

இப்போது தொல்காப்பியரைப் பற்றி வழங்குங் கதைக்குத் தொல்காப்பிய எழுத்ததிகாரத்திற் பாயிர உரையிலே நச்சினார்க்கினியர் கூறியுள்ளதே ஆதார மாகும் அக்கதையில் இவர் ஜமதக்கினியின் மகனா ரென்றும், திரணதூமாக்கினி என்பது இவரியற் பெயரென்றும் அறிகின்றோம் ஜமதக்கினியின் பிள்ளை களில் இப்பெயருடன் எவரும் இருந்ததாக ஜமதக்கினி யின் கதையிலோ, அவர் மகனரான பரசுராமர் கதை யிலோ எங்கும் இல்லை மற்றும் தொல்காப்பியரின் ஆசிரியரான அகத்தியர் துவாரகையிலிருந்த நிலங்கடந்த நெடுமுடியண்ணலெனப்பெறும்

கண்ணன் மரபினரான வேளிரை அழைத்து வந்தார் என்று நச்சினார்கினியரே கூறுகிறார் அவ்வாறா யின், பாரத காலத்திற்குப் பின்னிருந்த வேளிரை அழைத்து வந்த அகத்தியர்க்குப் பாரத காலத்திற்குப் பின்னிருந்த வேளிரை யழைத்து வந்த அகத்தியர்க்குப் பாரத காலத்திற்கு முன்னிருந்த இராமன் காலத்தவரான பரசுராமரின் உடன் பிறந்த திரணதூமாக்கினி மாண வராவதெப்படி? இவை போன்ற ஐயங்கள் பல அக்கதை யிலிருப்பதால் இக்கதை ஆராய்ச்சிக்குப் பொருந்து வதன்று

'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்று சிறப்புப் பாயிரம் கூறுவதால் வடமொழி இலக்கண மாகிய ஐந்திர வியாகரணத்திலே இவர் சிறந்த புலமை பெற்றவரென்பது கொண்டு, இவர் வட மொழியிலும் தமிழிலும் சிறந்த புலமை பெற்றவரெனலாம் சிலர் 'ஐந்திரம்' என்பது 'ஐந்திறம்' என்றிருக்கலாமென்று கருதுகின்றனர் ஐந்திறம் என்பது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐவகையிலக்கணத்தைக் குறிக்குமென்பது அவர் கருத்து

அகத்தியர்மாணவர் பன்னிருவரில் தொல்காப்பியர் ஒருவரென்பர் தொல்காப்பியம் என்னும் நூலையே அன்றி, பன்னிருபடலத்தில் உள்ள வெட்சிப் படலத்தை யும் இவரியற்றினரென்பர் உரையாசிரியர் இளம்பூரணர் தொல்காப்பிய கருத்துக்கு முரணான படல அமைப் புள்ள பன்னிருபடலத்தில் தொல்காப்பியரைச் சேர்ப்பது தவறென்று மறுக்கிறார்

தொல்காப்பியர் செய்தது தொல்காப்பியம் என்று வழங்குவது வடமொழியிலக்கணமாக தத்திதாந்தப் பெயராக இருக்கிறதென்றும், இவ்வாறு ஒரு பழைய தமிழிலக்கணத்திற்குப் பெயர் வழங்கியிராதென்றும் ஆசிரியர் பெயரால் வழங்கவேண்டுமாயின் தொல் காப்பியர் என்றே நூலுக்கும் வழங்கியிருக்க வேண்டு மென்றும், தொல்காப்பியமென்பது பிற்காலத்திய பிழை பட்ட வழக்கென்றும் ஆராய்ச்சியாளர் சிலர் கூறு கின்றனர் தொல்காப்பியரின் காலத்தையோ சமயத் தையோ அறியமுடியவில்லை சிலர் கி மு ஏழாம் நூற்றாண்டுக்கு முற்பட்டிருக்கலாமென்கின்றனர்

பரிதி

என்பவர் திருக்குறளுக்கு உரையெழுதிய பதின்மருள் ஒருவராவர் இவர் 'பருதி' எனவும் வழங்கப்படுவர். இவர், பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த பரிமேலழகர்க்கு முற்பட்டவராவர் இதனைச்

‘செல்வி முப்பாலுக்கு ஒருரையின்றி ஒன்பது சென்றும் ஐயுறவாக நையுறுகாலை’ என்ற பரிமேலழகர் உரைப் பாயிரத்தால் உணரலாம் இத்தொடரில் ஒன்பது உரைகள் எழுதப்பட்டும், திருக்குறளில் வரும் ஐயம் தெளியமாட்டாமல் தமிழுலகம் வருந்தியதாக, அந்த ஐயங்கள் நீங்கப் பரிமேலழகர் செவ்விய நல்லுரை செய்தாரென்பதால் அவ்வொன்பது உரையாசிரியருள் ஒருவராகிய ‘பரிதியார்’ அவர்க்கு முறபட்டவராதல் தெளிவாதல் காண்க

“இருள்சேர் இருவினையும்” என்ற குறளுக்கு, “மும்மலவித்தாகிய பாவமானது சிவகீர்த்தி பாராட்டு வானிடத்து இல்லை” என்றும், ‘நற்றாள்’ என்பதற்கு “அறிவாளனான சிவன்சீபாதம்” என்றும் இவர் உரையெழுதியுள்ளமையால், இவர் சைவசமயத்தினர் ஆவர்

இவருரை, பதவுரையாகவோ பொழிப்புரை யாகவோ இல்லை கருத்துரையாகவே யமைந்துளது இவருரையால் திருக்குறள் கருத்தை விளங்கிக் கொள்வது அரிது இலக்கண முடிபுகளும் சிலவிடங்களில் சரியாகவில்லை. ‘நல்லாரெனப்படுவது’ (324) என்புழி ‘நல்லார்’ எனப்பாடங் கொண்டு இவர் எழுதிய உரையைக் காண்க 1950 ஆம் ஆண்டில் தருமபுர ஆதீன வெளியீடாக வந்துள்ள திருக்குறள் உரைவளம் என்னும் நூலில் இவருரையும் சேர்ந்துள்ளது.

## பதிற்றுப்பத்து
## ஒருபார்வை

சங்க நூல்களுள் எட்டுத்தொகை எனப்படும் தொகுதியில் ஒரு நூல், இதில் உள்ள நூறு பாட்டுக்கள் பத்துப் பத்துக்களாகத் தொகுக்கப்பட்டிருப்பதால் இது பதிற்றுப்பத்து என்று பெயர் பெற்றுள்ளது இதன் நான்காம் பத்தில் உள்ள பாட்டுக்கள் மட்டில் அந்தாதி முறையில் தொகுக்கப்பட்டிருக்கின்றன இந்நூலிலுள்ள பாட்டுக்கள் யாவும் தொகுத்தோரால் துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்ற பாட்டியற் கூறுகள் வகுக்கப் பட்டுள்ளன

இந்நூல் முழுதும் தமிழ் மூவேந்தருள் சேர மன்னர்களின் செயல் நலங்களை மட்டும் வரைந்து கூறுகிறது இந்நூலில் முதற்பத்தும் பத்தாம்பத்தும் இதுவரையில் கிடைக்கவில்லை இரண்டாம் பத்து முதல் ஒன்பதாம் பாத்து ஈறாகவுள்ள எட்டுப் பத்துக்களே இப்போது கிடைத்துள்ளன ஒவ்வொரு பத்துக்கும் இறுதியிற் பதிகம் ஒன்று காணப் படுகிறது. இப்பதிகங் கள் மூல ஏடுகளில் காணப்படாமையால், இதன் தொகுப் பாசிரியருக்குப் பின்னே வந்த சான்றோ ஒருவரால் எழுதப்பட்டிருக்கலாம் என ஆராய்ச்சியாளர் கருது கின்றனர். இந்நூலுக்குப் பழைய உரை ஒன்றுளது.

இப்போது கிடைத்துள்ள இப்பதிற்றுப்பத்தில் சேர வேந்தர்களில் எட்டு வேந்தர்கள் காணப்படுகின்றனர்

அவருள் இரண்டாம் பத்தால் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனும், மூன்றாம் பத்தால் அவன் தம்பி பல் யானைச் செல்கெழுகுட்டுவனும், நான்காம் பத்தால் இமயவரம்பன் மகன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும், ஐந்தாம் பத்தால் அவன் தம்பி கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனும், ஆறாம்பத்தால் அக்குட்டு வனுக்குப் பின்னவனான ஆடுகோட்பாட்டுச் சேரலாத னும் பாடப்படுகின்றனர் இவ் ஐவரும் சேரர் குடியில் உதியஞ்சேரல் என்பவன் வழிவந்தவர்கள் ஏனை மூன்று பத்துக்களும் இரும்பொறையென்ற சேரர் குடியில் வந்த அந்துவஞ்சேரல் இரும்பொறைக்கு மகனான செல்வக் கடுங்கோ வாழியாதன், அவன் மகன் தகடூ ரெறிந்த பெருஞ் சேரலிரும்பொறை, அவனுக்குப்பின் தோன்றிய குட்டுவன் இரும்பொறையின் மகன் குடக்கோ இளஞ்சேரலிரும் பொறை என்ற மூவரையும் முறையே பாடியுள்ளன இரண்டாம் பத்து முதலாகக் கிடைத் துள்ள இவற்றை முறையே குமட்டூர்க் கண்ணனார், பாலைக்கோதமனார், காப்பியாற்றுக் காப்பியனார், பரணர், காக்கை பாடினியார், நச்செள்ளையார் என்னும் அம்மையார், கபிலர் அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் எனப் புலவர் எண்மர் பாடியிருக்கின்றனர்

மேலைக் கடற்கரையிலுள்ள தீவுகளில் இருந்து கொண்டு கடலில் செல்லும் கலங்களைத் தாக்கிக் கடற் குறும்பு செய்துவந்த கடம்பர்களைச் சேர மன்னர்களில் இமயவரம்பனும், அவன் மகன் கடற்பிறக்கோட்டிய செங்குட்டுவனும் வென்றெடுக்கிய செய்திகளும், மேலைக்கடற்கரையில் ஏழில்மலைப்பகுதியிலிருந்து ஆட்சி செய்த நன்னன் முதலிய குறுநிலத் தலைவர்களைச் சேரவேந்தர் வென்று மேம்பட்ட திறங்களும், தகடூர் நாட்டையாண்ட அதியர்களை வென்ற திறமும் பிறவும் இந்நூலிற் காணப்படும் வரலாற்றுச் செய்திகளாகும்

இனி, மேற்குமலை தொடரில் உள்ள நேரிமலை, அயிரைமலை, செருப்பு மலை முதலிய மலைகளும்,

அம்மலைகளில் தோன்றி நிலவும் பேரியாறு, வாணி யாறு, கோயம்புத்தூர்க்கு அண்மையிலோடும் காஞ்சி யாறு (நொய்யல்), காவிரியாறு முதலிய ஆறுகளும் இத்தொகை நூலில் ஆங்காங்கே குறிக்கப்படுகின்றன நேரிமலைப் பகுதியில் சேரவேந்தர் சென்று தங்கி மலைவளம் காண்பதும், அயிரை மலையில் கொற்ற வையைப் பரவுவதும், பேரியாறு கடலோடு கலக்கு மிடத்தே ஆற்றாட்டயர்ந்து திருமாலை வழிபடுவதும், காஞ்சியாற்றங்கரையில் செல்வமக்கள் வேனிற்காலத்தில் வந்து தங்கி விருந்துண்டு இன்புறுவதும் இதன்கண் இனிது காட்டப்படுகின்றன.

இப்பதிற்றுப்பத்துப் காலத்தில், சேரநாடு கடம்பர் குறும்பொழுந்திருந்தது வடபகுதியில் வானநாடு வரம்பு செய்யப்பட்டிருந்தது கிழக்கிலுள்ள கொங்கு நாடும் சேரர் ஆட்சியிலிருந்தமையின் அதன் எல்லையில் வாழ்ந்த அதியரும் மழவரும் சோழரும் அடங்கியி ருந்தனர் இந்நூலைப் பாடிய புலவர்கள், வேந்தர்கள் இசையும் கூத்துமாகிய இன்பம் துறைகளில் ஈடுபட்டுத் தம் கடமைகளில் நெகிழ்ந்திருக்கும் காலத்தில், 'பாடல் சான்று நீடினையுறைதலின் வெள்வேலண்ணல் மெல்லியன்போன்ம் என உள்ளுவர் கொல்லோநின் உணராதோரே' என்று தெருட்டிக் கடமைக்கண் கருத் தூன்றச் செய்தும், இவர் செய்யும் போர்கலால் நாடுகள் அழிவதனை எடுத்துக்காட்டிக் 'காணுநர் கைபுடைத் திரங்க மாணாமாட்சிய மாண்டனபலவே' என அவருள்ளத்தில் அருள் தோற்றுவித்துப் போரை விலக்கியும் செய்துள்ள நற்பணிகள் இந்நூலில் சிறந்து விளங்குகின்றன

ஏனைத்தொகை நூல்களைவிட இந்நூற்கண் வரும் பாட்டுக்கள் பொருள் நிறைந்து, சொற்செறிவு மிகுந்து, ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டிருத்தலின், தமிழ் கற்போர் இதனை 'இரும்புக்கடலை' என இயம்புவ துண்டு

## செந்நூல்
## நன்னூல்

இக்காலத்தில் தமிழ் கற்பவர் முதலில் படிக்கும் இலக்கண நூல் நன்னூலே இலக்கணவிளக்க ஆசிரியர் இந்நூலிலிருந்து 250 சூத்திரங்கள் வரை தமது நூலிற் சேர்த்திருத்தலை அறியின் இந்நூலின் பெருமை புலனாகும்.

நன்னூல் ஆசிரியர் பவணந்திமுனிவர் இவர் சமணத்துறவி; " முன்னோ ரொழியப் பின்னோர் பலரி னுள், நன்னூலார்தமக் கெந்நூலாரும், இணையோ என்னுந்துணிவே மன்னுக" என்று இலக்கணக்கொத்தின் ஆசிரியரும்," பல்கலைக்குருசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான்" என்று நன்னூல் உரைகாரர்களுள் ஒருவரான சங்கர நமச்சிவாயப் புலவருங் கூறியுள்ளனர்

நன்னூல் பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் என்னும் பாயிரங்களைத் தவிர, எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என்னும் இரண்டு அதிகாரங்களை உடையது. பாயிரங்களில் பழைய நூல்களிலுள்ள சூத்திரங்கள் பல சேர்க்கப்பட்டிருக்கின்றன நூலி னுள்ளுந் தொல்காப்பியத்திலிருந்து எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஒவ்வொன்றும் ஐந்து இயல்களை உடையது

நன்னூல் பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் என்னும் பாயிரங்களைத் தவிர, எழுத்ததிகாரம்,

சொல்லதிகாரம் என்னும் இரண்டு அதிகாரங்களை உடையது பாயிரங்களில் பழைய நூல்களிலுள்ள சூத்திரங்கள் பல சேர்க்கப்பட்டிருக்கின்றன நூலி னுள்ளும் தொல்காப்பியத்திலிருந்து ஏழு சூத்திரங்கள் எடுத்தாளப் பட்டுள்ளன எழுத்ததிகாரம், சொல்லதி காரம் ஒவ்வொன்றும் ஐந்து இயல்களை உடையது

நன்னூலார் தொல்காப்பியத்தையும் அதற்கு இளம்பூரணர் எழுதிய உரையையும் பெரும்பாலும் மேற்கொண்டுள்ளார்; சிலவிடங்களில் அவிநய நூலையுந் தழுவியுள்ளார் என்பது தெரிகிறது எழுத்ததி காரத்தில் உள்ள பதவியல்மட்டும் வடமொழி இலக் கணத்தை நோக்கி அமைத்ததாகும் இவ்வியலில் பதங்க ளின் வகைகள்,அவற்றின் இலக்கணம், பகுபதவுறுப் புக்கள், தற்பவங்களில் வடமொழி யெழுத்துக்கள் திரியும் முறை இவை தெளிவாகக் கூறப்பட்டுள்ளன

தொல்காப் பியத்தில் ஆறு இயல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ள புணர்ச்சிவிதிகள் இந்நூலில் மூன்று இயல்களில் சுருக்கமாகவும் விளக்கமாகவுங் கூறப் பட்டுள்ளது. ஆதலின் இந்நூலில் உள்ள விதிச் சூத்திரங் களை எடுத்தாளுதல் எளிதாயிருக்கின்றது இந்நூல் சுருங்கிய அளவிற் செய்யப்பட்டதாயினும், தொல்காப்பி யத்தில் கூறப்படாதனவும் சங்கச் செய்யுட் களில் காணப் படுவனவு மாகிய சில இலக்கணங்கள் இதில் அமைக்கப் பட்டுள்ளன இவை முதலிய காரணங்களால் இந்நூல் அனைவராலும் கற்கப்பட்டு வருகின்றது

நன்னூலார் தொல்காப்பியர் கொள்கைக்கு மாறாகச் சிலற்றைக் கூறியுள்ளார். உதாரணமாக, அள பெடையுள் ஓரெழுத்தே மூன்று மாத்திரை பெறும் என்றதும், உயிரெழுத்துவருமிடத்துக் குற்றியலுகரம் கெடும் என்தைக் காணலாம்

சீயகங்கன் என்னும் அரசன் எழுத்து முதலிய ஐந்திலக்கணத்தையும் தொகுத்தும் விரித்தும் இயற்றித்

தருமாறு பவணந்திமுனிவரை வேண்ட, அவர் அதற் கிணங்கி நன்னூலை இயற்றினார் என்பது, அதன் பாயிர வடிகளால் தெரிகின்றது இதனால், பவணந்தி யார் ஐந்திலக்கணத்தையுஞ் செய்தார் என்று கொள்வர் சிலர் ஆயின், பவணந்தியார் இயற்றிய எழுத்தையுஞ் சொல்லை யும் போற்றிக் கற்றுவந்த தமிழறிஞர் ஏனையவற்றையும் அவர் செய்திருப்பாராயின் அவற்றையும் கற்றுவந்திருப் பர்; இறந்தொழிய விட்டிரார் அவற்றுள் ஒரு சூத்திரமுங் கிடைத்திலாமையின் பவணந்தியார் பொருளிலக்கணம் முதலியவற்றைச் செய்திலர் என்று கொள்வர் சிலர்

பவணந்தி முனிவர் ஊர் சனகை என்று பாயிரங் கூறுகின்றது அவர் பிறந்த ஊர் தொண்டை மண்ட லத்தில் உள்ளது என்று தொண்டைமண்டல சதகமும், கொங்கு மண்டலத்தில் உள்ளது என்று கொங்கு மண்டல சதகமும் கூறுகின்றன இவற்றுள் இதுதான் அவரூர் என்று துணிதல் அரிதாயுளது

நன்னூலை இயற்றுமாறு வேண்டிய சீயகங்கன் மூன்றாங் குலோத்துங்கனுக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசன் என்று தெரிதலால் அவன் காலம் அக்குலோத்துங்கன் காலமாகிய (1178-1216) பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி யும் ஆகும் ஆகவே பவணந்தி முனிவர் காலமும் அதுவே யாகும் என்று கொள்ளுதல் அமையும்

நன்னூற்குச் சிறந்த உரைகள் இரண்டு உள அவை மயிலைநாதருரையும் சங்கர நமச்சிவாயருரையுமே அவற்றுள் மயிலைநாதர் எழுதிய உரை நூலாசிரியர் கருத்தினை யொட்டியதாயுளது அதில் அகத்தியச் சூத்திரங்கள் என்று சில சூத்திரங்கள் காட்டப்பட்டுள் ளன; அவிநய உரையிலிருந்து ஒரு சூத்திரத்தின் உரை எடுத்தெழுதப்பட்டுள்ளது அன்றியும், தொல் காப்பியர் கருத்தினை மறுத்துரைக்கும் வெண்பாக்கள் இரண்டு குறிக்கப்படடுள்ளன சங்கர நமச்சிவாயர் (தக) எழுதிய உரை விரிவானது

சிவஞானமுனிவர் சங்கர நமச்சிவாயருரையில் இடையிடையே தங்கருத்தினைச் சேர்த்தும், இலக்கணக் கொத்தில் உள்ள சூத்திரஞ் சில சேர்த்தும் விருத்தியுரை செய்துள்ளார் இவ்விருத்தியுரையைப் பின்பற்றி முகவை இராமாநுச கவிராயர் ஓர் உரை எழுதியுள்ளார் விசாகப் பெருமாளையர் தெளிவாக ஓர் உரை எழுதியிருக்கிறார் ஆறுமுக நாவலர் சுருக்கமாக உரை எழுதியுள்ளார் பின்னர், வை மு சடகோப ராமாநுஜாசாரியார் கலாசாலை மாணாக்கருக்கு ஏற்றவாறு மிகத்தெளிவாக உரை எழுதியிருக்கிறார் இவை காண்டிகையுரை என்று வழங்கும்

**நன்னெறி**

சிறுவர்களுக்கான அற நூல்களில் ஒன்று 40 நேரிசை வெண்பாக்களால் ஆனது உவமையும் பொருளுமாக ஒவ்வொரு செய்யுளும் அமைந்திருக்கும் இதன் ஆசிரியர் சிவப்பிரகாச சுவாமிகள் (த க) முற்காலத்தில் சிறுவர்கள் கற்கும் இலக்கிய வரிசையில் ஆத்தி சூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி எனக் கற்ற பின்னர் நன்னெறி கற்பது வழக்கம் இப்போதும் சிறுவர்க்கான பாடநூல்களில் இந்நூலின் செய்யுட்களை அமைத்துக் கொண்டு வருகின்றனர்

**நனவு நிலை (consciousness) :**

மனிதன் நனவோடு இருப்பது நமது அனுபவத்தி லுள்ள ஓர் உண்மை நனவுநிலை என்று சொன்னவுடன் அது எங்கிருக்கின்றது, அது ஒரு சக்தியா, குணமா என்றெல்லாம் ஆராயத் தோன்றும் ஆனால், நனவு நிலையில் நாம் ஆற்றும் செயலைக் குறிப்பிட்டு அதை விளக்கலாமே யொழிய அதை ஒரு தனிப்பட்ட பொருளாகவோ, சக்தியாகவோ நினைப்பதாவது காட்டுவதாவது இயலாது

நமது நனவு நிலை நம் செயலின் ஒரு தன்மையே (Aspect) யாம் ஏனென்றால் நம் செயல்கள் கவனமுள்ள

நனவு (Attentive c.), நனவிலி நிலை (Unconsciousness), தெளிவிலா நனவு (Vague c.) என்ற மூன்று வித நனவு நிலைகளிலிருந்து வெளிப்படுகின்றன ஒரு புத்தகத்தைப் படிக்கும்பொழுது, படிக்கும் வரிகளில் நம் முடைய ஊக்கம் முழுதும் பதிந்திருக்கிறது ஆனால், புத்தகம், நாமிருக்கும் அறை, வெளியிலிருந்து வரும் ஒலிகள் இவையெல்லாவற்றையும் நாம் அறிந்தே இருக்கிறோம் இதனுடன், நமது செயலைத் தூண்டுவனவாய் ஆழ்ந்த உள்ளிலிருந்து பல இயல்பூக்கங்கள் வேலை செய்கின்றன

கவனத்தோடு கூடிய நனவுடனும் நாம் செய்பவை அறிதல்நிலை உணர்ச்சிநிலை இயற்றிநிலை என மூன்றுவிதமாம் இதில் ஒவ்வொன்றும் தனிப்பட்ட ஒரு குணமுள்ளது உணர்ச்சியென்பது ஒருவித அறிதல் என்றோ, ஒருவித இயற்றிநிலை யென்றோ அல்லது இரண்டும் கலந்த ஒருநிலையென்றொ சொல்ல முடியாது இதுபோன்றனவே அறிதலும் இயற்றி நிலையும் ஆனால் இவை ஒருமித்து வரும்

சான்றாக, ஒரு கும்பலின் நடுவே என் பழைய நண்பன் ஒருவன் நின்றுகொண்டிருப்பதை நான் பார்க்கிறேன் இது நான் அறிவது அதனுடன் என் மனம் ஒருவித மகிழ்ச்சியடைகிறது இது ஓர் உணர்ச்சி நான் சும்மா நில்லாமல் அவனருகில் செல்ல முயல்கிறேன் இது இயற்றிநிலை நண்பனை அறிவதும், மகிழ்வதும், அவனருகில் செல்ல முயல்வதும் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்தாலும் எப்பொழுதும் அப்படியே வரும் என்று சொல்ல முடியாது இவை மாறியும் வரலாம்

அறிதல் மட்டுமோ, உணர்ச்சி மட்டுமோ, இயற்றி நிலைமட்டுமோ தனியாக நிகழ்வதில்லை இதில் ஒன்று மட்டும் நிகழ்வதாகத் தோன்றினாலும் மற்ற இரண்டும் மறைவாக இருப்பதைக் காணலாம் ஒரு கணித வினாவின் விடையை அறிவதில் நான் முனைந்திருந்தால் அது அறிதல் மட்டுந்தான் என்று நினைப்பது சரியன்று என் மனத்தில் பல உணர்ச்சிகள் உண்டாகின்றன விருப்பு,

வெறுப்பு, மகிழ்ச்சியெல்லாம் தோன்றி மறைகின்றன இந்த வினாவின் விடையை விரைவில் கண்டுபிடிப்பதில் நான் முனைந்து நிற்பதோடு, இயற்றி நிலையும் இருந்து கொண்டே இருக்கின்றது அல்லது, நீங்கள் மிகுந்த கோபம் கொண்டிருக் கிறீர்கள்என்று வைத்துக் கொள்வோம் இது வெறும் உணர்ச்சிமட்டுமே என்று தோன்றலாம் ஆனால், நீங்கள் யார்மேல் அல்லது எதன்மேல் கோபம் கொண்டிருக் கிறீர்கள் என்பதை அறிந்திருக்கிறீர்கள் இந்தக் கோபத்தை வெளியில் காண்பிக்க முயலுகிறீர்கள் இதில் அறிவு, உணர்ச்சி, இயற்றி நிலை மூன்றும் இருக்கின்றன.

இவ்விதமே இம்மூன்று நிலைகளும் ஒருமித்துக் காணப்படுகின்றன நனவுநிலை இம் மூன்று தன்மைகளை உடையது

## போர் பாசறை இலக்கியம்

சங்க நூல்கள் என்று பழைய உரையாசிரியர்களால் பாராட்டப் பட்டவை, பாட்டும் தொகையும் என்று சிறப்பிக்கப் பெறுகிற பதினெண் மேல்கணக்கு நூல்களே யாம் தொகை என்பது எட்டுத் தொகை நூல்களைக் குறிக்கும் பல புலவர்கள் பாடிய பாக்களை எட்டுத் தொகுதிகளாக வகுத்து வைத்த நூல்கள் இவை, இவற்றில் வரும் பாக்களில் மிக நீண்டு வரும் பாக்களைப் பாட்டு என வழங்கி, அத்தகையை பாட்டுக்கள் பத்தினையும் திரட்டி வைத்த நூலே பத்துப்பாட்டு ஆகும் இதில் வரும் பாட்டின் சிற்றளவு 103 அடிகள்; பேரளவு 782 அடிகள்

இவற்றில் ஆற்றுப்படையாக 5 நூல்கள் அமைந்துள்ளன தொல்காப்பியக் கொள்கைப்படி, நிலையாமையை வற்புறுத்தும் காஞ்சித் திணையில், மதுரைக் காஞ்சி என்ற பாட்டு அமைந்துள்ளது, அகப்பொருளில் குறிஞ்சி, முல்லை, நெய்தலை, பாலை, மருதம் என்ற ஐந்தில் மருதம் நீங்கலாக, மற்றை நான்கையும் நான்கு பாட்டுக்கள் கூறுகின்றன அவற்றுள் குறிஞ்சிப்பாட்டு, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை என்பன தம் பெயராலேயே திணையை விளக்கும் நெடுநெல்வாடை என்பது நெய்தற்றிணை எனக்கூறலாம் என்றாலும், அகப்பாட்டில் மக்களில்

சிறந்தாரது ஒழுக்கத்தினை மேல்வரிச் சட்டமாக நாடகத் தமிழாய்ப் புனைந்துரைப்பதே அன்றித் தனியொருவர் ஒழுக்கமாகப் பெயர் கூறிப்பாடுவது பழைய தமிழ் வழக்கமன்று. இந்த நூலில் பாண்டியனைக் குறிப்பிடுவ தால் இது அகப்பாட்டு ஆகாது; அரசனது போர்ப் பாசறையைப் பற்றியதே என்று உரையாசிரியர் கூறுகின்றார்.

ஆற்றுப்படை என்பது ஒருவகையான பாடல் மரபுடையது. புரவலரைக் காணாது வறுமையில் வாடுகின்றான் ஒரு கலைஞன். புரவலன் ஒருவனைக் கண்டு பரிசில்கள் பெற்றுச் சீரும் சிறப்புமாகத் திரும்புகின்றான் மற்றொரு கலைஞன். இவன்அவனைச் பார்க்கிறான்; இரக்கத்தால் அவன் வாழ வழி காட்டு கின்றான். அவன் புரவலனிடம் சென்றால், "வறுமை தீரும், கலை வளரும்; தன்மானம் அழியாது" என்று கூறி அப்புரவலனுடைய பெருமையையும் விளக்கி, அவன் ஊருக்குப் போதும் வழியையும் சுட்டுகின்றான்; பெறப் போகும் பரிசில்களைப் பற்றிக் கனவு காணுமாறும் செய்கின்றான். பொருநர், பாணர், கூத்தர் என்ற கலைஞர் தம்முன் ஒருவரை ஒருவர் ஆற்றுப்படுத்தும் மரபை இங்கே காணலாம். (தொல்காப்பியம் 103).

பொருநன் என்பான் மற்றொருவர்போல வேடம் கொண்டு போர்க்களம் பாடுவோன் ஆவான், பாணன் என்பான் பாடுகின்ற பழைய குலத்தைச் சேர்ந்தவன். இப்பாணன் மரபினர் சிறுபாணர், பெரும்பாணர் என்று இருவகையினராவர். ஏழு நரம்பு உள்ள சீறியாழ் கொண்டு பாடுவோர் சிறு பாணர். 21 நரம்பு உள்ள பேரியாழ் கொண்டு பாடுவோர் பெரும்பாணர். கூத்தர் என்பவர் எண்வகைச் சுவையும் மனத்தின் கண் பட்ட குறிப்புக்களும் புறத்துப் புலப்பட ஆடுவோர், எனவே மூவைகையினரானாலும் உண்மையில் நால்வகையினர் ஆவர். இந்த நான்கு வகையினரையும் ஆற்றுப்

படுத்துகின்ற முறையில் நான்கு ஆற்றுப்படைகள் பத்துப்பாட்டில் அமைந்துள்ளன

பத்துப்பாட்டில் இரண்டாவதாகிய பொருநராற்றுப் படை முடத்தாமக் கண்ணியார் பாடிய பாட்டு பாட்டு ஆசிரியப்பா வகையைச் சார்ந்தது 248 அடிகள் கொண்ட இந்த ஆசிரியப்பாவில் வஞ்சியடிகளும் இடையிடையே வருகின்றன, கொலைஞரையும் கள்வரையும் திருத்தும் யாழின் இனிமையில் ஈடுபட்டு, மணப்பெண்போல் அது விளங்குவதாகக் கொண்டு, அதனை மீட்டுகிற பெண்ணை, அதற்கேற்ப அழகே உருக்கொண்டது போல் ஒளிர்கின்ற நிலையில் வைத்து, அவள் கையில்யாழினைக் காண்கின்றார் புலவர், அழகிய பெண்ணின் புனைந்துரையும் அங்கே எழுகின்றது கலையின் வாட்டம் புண்பட்ட அழகின் வாட்டமா வதனை நிழலுக்கும் பஞ்சமான காட்டிடையே புலவர் காட்டுகின்றார் ஆனால், கலையோ மூவேந்தரும் ஒன்ற கூடியதுபோலத் தன்மான வீறுகொண்டு விளங்கு கின்றது

புரவலனைக் கண்டபின் பட்டினியால் வாடுகின்ற வர்களுக்கு உணவு வருமென்று கூறவேண்டும் ஆனால், கலைஞனைச் சாப்பாட்டு ராமனாக்க விரும்பாத இந்தக் கலைஞனது உள்ளம், தான் உண்ட உணவின் பெரு மையை எல்லாம். தன்னுடைய தனியின்பமாகப் பாடிக் கொண்டு போய்க் கேட்போன் மனத்தில் பதியச் செய்கின்றது விருந்தினைப் பாட்டாகப் பாடிப் புகழ் பெற்றவர் மலையாளக் குஞ்சன் நம்பியாருக்கு முன்னே கண்ணியர் ஒருவரே எனலாம் பின்னர்த் தான்கண்ட புரவரனாம் கரிகற் பெருவளத்தா னின் பெருமையும் வீரமும் பரிசில் வழங்கும் வள்ளன்மையும் கலைஞரைப் பிரிவதற்கு அஞ்சி வாடும் அவன் அன்புள்ளமும் கேட்போர் மனத்தில் இனிக்க இனிக்க உரைக்கின்றான் பொருநன் ஏழைப் பொருநன் அவனிடம் சென்றதும், அவன் செய்யப்போகும் பாராட்டினை எல்லாம்

கலையின் பெருமிதம் குறை யாமல் வீறுபெறப் புகழ்கின் றான்

கரிகாற் பெருவளத் தானது சோழநாட்டின் பெருமையையெல்லாம் ஒவ்வொன்றாகச் சுவைத்துச் சுவைத்து ஆறஅமர இருந்து, திளைத்து உண்பார்போலக் கூறி முடிக் கின்றான் அவன் வாய்மொழியாகக் கூறும் பாடற் பகுதியில் பின்னாளைய நாட்டுப்படலத்திற்குப் புலவர் வித்திடுகின்றார் இதனைப் பாடிய புலவரது பெயரால் இவரைப் பொன் என்று கூறுவாரும் உளர் இவரை முடமென்று கூறுவாரும் உண்டு

இந்தப் பாட்டின் தலைவன் உருவப்பல்தேர் இளஞ் சேட்சென்னியின்மகனான கரிகால்வளவன்; வெண்ணிப் போர்க்களத்தே சேரனையும் பாண்டியனையும் வென்ற வன்; தாய் வயிற்றிலிருந்தே தாயம் எய்தியவன்

மூன்றாம் பாட்டாம் சிறுபாணற்றுப்படை 269 அடிகள் கொண்ட ஆசிரியப்பா இதனைப் பாடியவர் இடைக் கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், இடைக்கழி நாடு (இட்க்கநாடு-மருஉ) சென்னைக்குத் தெற்காகக் கடலை யொட்டி உப்பங்கழி பாயும் பகுதியேயாம் அங்குள்ள நல்லூரில் பிறந்த இவர் தலைசிறந்த பாடல் பாடியதன் பயனாகச் சிறப்பினைக் குறிக்கும் 'ந' என்ற அடையோடு நத்தத்தனார் என்று வழங்கப் பெறு கின்றார், ஓய்மான் நாட்டு நல்லிக்கோடனைப் புகழ்ந்து பாடியபாட்டே இந்தப் பாட்டு

ஓவியர் குடியின் தலைவனை ஓய்மான் என்பர் அவன் நாடு ஓய்மான் நாடு "கிடங்கிற்கோமான்" என்று புலவர் அவனைப் புகழ்கின்றார் கிடங்கில் (கிடங்கால்-மருஉ) என்பது தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டி வனத்தில் இருக்கிறது மாவிலங்கை என்பது அவனுடைய அரண்மனை இருந்த இடம், இஃது அருவாநாடு, அருவாவடதலை நாடு என்ற இரண்டும் சேரும் இடத்தில் இருந்தது என்பர் எயிற் பட்டினமும் அவனுடையது

கிரேக்க பூகோள ஆசிரியர்கள் கூறும் சோபடான் இதுவேபோலும். உப்புவேலூர் என இப்பொழுது வழங்கும் வேலூரும் ஆமூரும் அவனுடைய ஊர்களே. இவையெல்லாம் தொண்டை மண்டலத்தில்·உள்ளவை. முருகனை வழிபட்டுப் பகைவரை வெல்லப் பூவையே வேலாகப் பெற்றான் அவன் என்பது செவிவழிச் செய்தி.

பொருநராற்றுப் படையிற்போல் யாழை மீட்டும் விறலியின் அழகினைக் கற்பனைத் திறமெலாம் தோன்றப் புகழ்ந்துகொண்டே தொடங்குகிறது இந்தப் பாட்டு. இயற்கையும் பெண் அழகும் ஒன்றோ டொன்று முதலும் நிழலுமாக அமைந்திருக்கின்ற ஒற்றுமை நயத்தைச் சொற்றொடர்களிலும் எதிரொலிக்குமாறு பாடுகின்றார் புலவர். பின்னர் மூவேந்தர் நாடு பரிசில் தருகிற வண்மை குன்றிக் கிடப்பதனை அந்தந்த நாட்டுப் பெருமையோடு வைத்துப்பாடிப் புலம்புகின்றர். எருமை பூக்களை மேய்ந்து, மிளகின் கொடி படர்ந்த பலா மரத்தின் நிழலை மஞ்சளின் இலைதன்னைத் தடவப் பூப் படுக்கையில் அசைபோடுவதனை மலையும் காடுமாய்ச் சிறந்த சேர நாட்டின் அழகாகக் காண்கின்றார்.

குரங்குகள் சிறுவரைப்போல் கிளிஞ்சலுக்குள் முத்தினை வைத்துக் கிலுகிலுப்பை ஆட்டும் அழகினை முத்தாற் சிறந்த பாண்டிய நாட்டின் அழகாகக் காண்கின்றார். தண்ணீர்த் துறையருகே வளர்ந்த மரங்களின் வரிசைகளிடையே மகரந்தப் பொடிகள் சிவந்த செந்தாமரையில் வண்டுகள் பாடுவதனை நீர்வளஞ் சிறந்த சோழநாட்டின் அழகாகக் காண்கின்றார்; மறைந்த கடையெழு வள்ளல்களின் கலைவாழ்வினைப் புனைந் துரைத்துப் புலம்புகிறார். கலையழகில் ஈடுபட்டு முல்லைக் கொடியின் அழகு வாடாதபடி பெருந் தேரினைத் தந்தான் பாரி.

மயிலின் பல நிற ஓவியப் பேரழகு மழையால் கெடாதபடி போர்வையைத் தந்தான் பேகன்; சிற்பியின்

கனவு கலைச் செல்வமாய்ச் சிவனது திருமேனியாய் விளங்குவது கெடாதபடி அரிய கலிங்கம். தந்தான் ஆய், அன்பும் அறமும் பாடுகிற புலவர் சொற்களில் ஈடுபட்டு, அவர்கள் வாடாது ஏறிப் போகக் குதிரையும் தேரும் தந்தான் காரி, தன்னை நட்புரிமை கொண்டு வந்தடைந்த கலைஞர், வருத்தமின்றி வாழ்க்கை நடாத்த, நடைப் பரிகாரம் தந்தான் நள்ளி, தான் நீண்டநாள் வாழாது செத்தாலும் கலையே நீடு வாழவேண்டுமெனக் கலை வடிவான அவ்வைக்கு நெல்லிக்கனி தந்தான் அதிகன், கோடியருடைய பாட்டிலும் கூத்திலும் ஈடுபட்டு, அவர் கள் நலிவின்றி வாழ நாட்டையும் கொடுத்தான் ஓரி என முறையே பாடி, அவர்கள் வள்ளன்மையை எல்லாம் நல்லியக்கோடனிடம் கண்டு மகிழ்கின்றார் புலவர்.

நல்லியக்கோடனது ஊருக்குச் செல்லும் வழியைக் கூறுவாராய், அவன் நாட்டின் வளத்தினைப் புகழத் தொடங்கி, எயில் பட்டினத்தாற் சிறந்த அவனுடைய நெய்தல் நிலத்து நுளையர் வாழ்க்கையினையும், வேலூரோடு சார்ந்து விளங்கும் முல்லை நிலத்து எயிற்றியர் விருந்தோம்பும் திறத்தினையும், ஆமூரால் சிறந்த அவனது மருத நிலத்தில் வாழும் அந்தணரது ஊறுகாய்ச் சோறும், உழத்தியர் தரும் கவைத்தாள் நண்டின் கலவையும் என இவற்றையும் எல்லாம் இருந்ததனை இருந்தபடி கூறும் இலக்கியச்சுவை தோன்றப் பாடுகின்றார்.

நல்லியக் கோடனின் சிறப்பினையெல்லாம் கூறி யாழினைப் புனைந்துரைப் பதில் மற்றைய புலவரோடு போட்டியிடு கின்றார். மூங்கில் தோலுரித்தாற் போன்ற துணியும், பாம்பு சீறினாற் போன்ற கள்ளும், வீமபாகத் தாற் சிறந்த விருந்தும், கலைஞருக்குக் கிட்டுமென்று சுட்டுகின்றார். மாடு பூட்டிய தேரும் தந்து, ஏழடிவந்து வழியனுப்புவான் என்று உறுதி கூறி முடிகின்றது இந்தப் பாட்டு, மற்றைய ஆற்றுப் படைகள் எல்லாம் நாடு கிழவோனே, மலைகிழவோனே என்று முடிவது போல் இது முடிய வில்லை.

நான்காம் பாட்டாம் பெரும்பாணாற்றுப்படை என் பது 500 அடிகளால் அமைந்த ஆசிரியப்பா இதனைப் பாடியவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் இவர் பெயர் உருத்திரன் என்பது இவருடைய தந்தையார் பெயர் உருத்திரன் என்பது இந்தப் பாட்டுத் தொண்டை மான் இளந்திரையனது புகழைக் கூறுவது இவன் காஞ்சியிலிருந்து அரசாண்டவன்; சங்கப் பாடல்கள் சிலவற்றைப் பாடியவன்; பல்லவர்களது முன்னோன் என்று சிலரால் கருதப்படுகின்றவன் இப்பாட்டும் யாழினை மனம் கவரப் புனைந்துரைப்ப தோடு தொடங்குகிறது

இந்தப் பாணனது வறுமையைச் சுட்டி, வருகின்ற பாணன், திரையனிடம் போனால் யானையும் குதிரையும் வாரிக் கொண்டு வரலாம் என்று ஊக்கம் ஊட்டு கின்றான்; அவனுடைய குடிப்பெருமையும், கொடியோர் இல்லாத அவன் நாட்டின் சிறப்பையும் கூறி, மற்றைய ஆற்றுப் படைகளில் போல் அவன் ஊருக்குச் செல்லும் வழியைக் கூறும் வழியாகக் அவன் நாட்டுப் பூகோளத்தை இலக்கியச்சுவை தோன்றப் பாடுகின்றான். உப்பு வாணிகர்கள் தங்களுடைய வண்டிகளிலே வீட்டி னையே ஏற்றிச் செல்வதுபோல் போகின்ற வியப்பி னையும், அங்கே மிளகு பொதி ஏற்ற வருவார் முதலி யோரிடம் சுங்கம் வாங்கிக் கொண்டு,காவலாளர் கவர்த்த வழியைக் காக்கின்ற பெருமையையும் கொண்டு அவனது குறிஞ்சி நிலப்பெருமையை அறியலாம்

எயிற்றியர் ஈச்சம் ஓலை வேய்ந்த குடிசையில் பிள்ளை பெற்றவள் வீட்டிலே கிடக்கத்தாம் போய்ப் புல்லரிசி கொண்டு வந்து, கிணற்று நீரில் இட்டு, முரிந்த அடுப்பில் ஏற்றிச் சமைத்து, ஊன்புழுக்கலோடு விருந்து தரும் பெருமையினையும், பன்றியும் முயலும் வேட்டை யாடி, வில்லும் அம்பும் சார்த்திய வீட்டில் உடும்பின் வறுவலை விருந்தாகத் தருவதனையும், குறிஞ்சி நிலத்துப் பெருமையாகப் பாடுகின்றார் புலவர்: முல்லை

நிலத்தில் இடைப்பெண் மோர் விற்றுக் குடும்பத்தைக் காப்பாற்றி நெய் விற்று எருமை வாங்கிச் செல்வத்தால் சிறக்கின்ற நுட்பத்தைக் குறித்துவிட்டு, அங்கே கிடைக்கும் பாலோடு சேர்ந்த தினை அரிசி விருந்தினையும் வாயாரப் புகழ்கின்றார் அங்குள்ள மக்களது இயல்பினை இருந்தது, இருந்தவாறே பாடுகின்றார் மருத நிலத்தில் கோரையில் பூவைக் கட்டிச் சூடிக்கொண்டு உழவர்கள் இனிதே தங்கள் தொழிலை வளமெலாம் பெருக உழுது விளைவிக்கும் பெருமையைப் பாராட்டி அங்குக் குழவிகள் விளையாடும் வீட்டிலே வெண்ணெல்லின் சோறும், கோழிக்கறியும், கருப்பங் கட்டியும், கள்ளும் விருந்தாக வருதலைப் புகழ்கின்றார்; வலைஞர் வாழும் நெய்தல் நிலத்தில் வடித்த கள்ளும், மீனும், வந்தார்க்கு அவர்கள் வழங்குவதனைக் கூறித் தூண்டிலைப் புனைந்துரைக்கின்றார்.

அடுத்துள்ள அந்தணரது தூய இருப்பில் மாங்காய் ஊறுகாயுடன் சோறு விருந்தாகக் கிடைப்பதில் ஈடுபடுகின்றார்; நீர்ப்பெயற்று என்ற கடற்கரைப் பட்டினத்தின் செல்வத்தினையும் கலங்கரை விளக்கத்தினையும் தமிழ் நாட்டின் பழைய வாணிகப் பெருமையெல்லாவற்றையும் நம் கண்ணெதிரே தோன்றப் பாடுகின்றார் பிறகு காஞ்சியில், வெஃகாவில் காந்தளஞ் சிலம்பில் களிறு, படிந்தாங்குப் பாம்பணைப்பள்ளி அமர்ந்தோனைக் காட்டுகின்றார்

காஞ்சி நகரின் சோலைகள், தெருக்கள் இவையெல்லாம் பிரமன் பிறந்த தாமரைப் பூப்போல்தோன்ற, அதனக் காணக் கூட்டம் கூட்டமாக அரசரும் காத்திருக்கின்றனர்; " அவனைப் பாணர்களே நீங்கள் பாடினால் விருந்தூட்டி உங்கள் விறலியர்க்குப் பொற்றாமரை அணிவித்து, உங்களுக்குப் பொன்னரி மாலையும் சூட்டி வெள்ளைக் குதிரை நான்கு பூட்டித் தேரில் உங்களை ஏற்றிப் பரிசில் தந்து விடை கொடுப்பான் " என்று வந்த பாணன் கூறுவது போல் கூறி முடிக்கின்றார் ஐந்திணை,

அந்தணர் முதலிய பலப்பல குடியினர் அவர்களுடைய பழக்க வழக்கங்கள், விருந்தோம்பும் முறைகள், கடற்கரைப் பட்டினத்தின் இயல்பு, கச்சிநகரின் நிலை, திரையனது பெருமை, யாழ்ப்பாணரது மரபு முதலியன எல்லாம் இந்தப் பாட்டில் இலக்கியச்சுவை ததும்ப விளக்கம் கூறுகின்றன

பத்தாம் பாட்டாம் மலைபடுபகடாம் என்பது ஒரு கூத்தராற்றுப் படை இதனைப் பாடியவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் இரணிய முட்டம் என்பது மதுரையை அடுத்த ஒருபகுதி இந்தப் பாட்டின் தலைவன் நன்னன் இவன் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னன் என இந்த நூலின் உரை முடிவில் காண்கின் றோம் பல்குன்றக் கோட்டம், திருவண்ணாமலை, திருவேங்கடம் முதலியவை அடங்கிய ஒரு பகுதி செங் கண்மா என்பது அதன் தலைநகரம் இஃது இன்று திருவண்ணாமலைக்கருகே செங்கம் என வழங்குகிறது இந்த நாட்டில் சேயாறு பாய்வதனையும், காரியுண்டிக் கடவுள் நவிர மலை (பர்வத மலையென்று இன்று வழங்கும்)யில் இருப்பதனையும் இந்தப் பாடல் பாடுகின்றது

இந்தப் பாட்டு 583 அடிகளைக் கொண்டதொரு பெரிய பாட்டு, பலவகை இசைக் கருவிகளின் பெயர்களையெல்லாம் சொல்லி யாழினைப் புனைந் துரைத்துக் கொண்டு தொடங்குகிறது இந்தப் பாட்டு இருந்த கூத்தனை, வந்த கூத்தன்," என்னைப் பார்த்த தால் உங்களுக்கு நல்ல காலமே" என்று கூறிப் புரவல னைப்பற்றி என்னென்ன சொல்லப் போகின்றான் என்ப தனை முன்னரே சில தலைப்புக்களில் தொகுத்துச் சுட்டி விளக்கி விடுகின்ற முறையைக் கையாளுகின்றான் போகின்ற வழியைப் புனைந்துரைக்கத் தொடங்கிப் பூக்களை யெல்லாம் இன்பம் சொட்டச் சொட்டப் பாடுகின்றான் அவரைப் பூக்கள் தயிரைத் தெளித்தாற்

போல் இருத்தலும், வரகின் கதிர்கள் வாதிகள் கையில் இணைந்த விரல்கள் போல் தோன்றுதலும், முழவு போலப் பலாப்பழம் தொங்குதலும் குறித்துப் போகின்றான் இந்த மலைச்சாரலில் வாழும் நன்னனுடைய காவலாளரும், புரவலரும் பலவகை ஊனோடு சேர்த்து விருந்திடுகின்றனர் இப்பகுதியின் சிறப்பாவது வழியில் தோன்றும் இடை யூறுகளையும், அதற்கு முன் காவலாகச் செய்ய வேண்டுவனவற்றையும் விரித்துக் கூறும் முகத்தால் நாட்டின் வளத்தைச் சிறப்பித்தலேயாம். " வழி வழுக்கும், பாம்பிருக்கும், பல்லி பிடிக்கும் பொறியருக்கும்; ஆதலின் கையைப் பிடித்துக் கொண்டு கோலூன்றிச் செல்லுங்கள் வியத்தரு காட்சிகளைக் கண்டாலும் திடீரென மேல் நோக்கிப் பாராதேயுங்கள்" என்றெல்லாம் கூறிப் பாடுகின்றான்

கூத்தன் கவர்த்த வழியில் சரியான வழி இது எனப் பின்வருவோர்க்குத் தெரிவிப்பதற்காகப் புல்லை முடிந்து வைத்து நம் சாரணச் சிறுவர்கள் இன்று கைக்கொள்ளும் முறையை அன்றே இந்தப் பாடலில் பாடுகின்றான் வழியில் நன்னனுடைய காவலாளர்கள் வழிகாட்டி யுடன் வருவார்களாம் வழியே போகும்பொழுது பலப்பல ஓசைகள் கேட்பதனை யெல்லாம் இலக்கியச் சுவை தோன்றக் கூத்தன் வாய்மொழியாகப் புனைந் துரைக்கின்றார் புலவர்.

கடாம் என்றால் மதம் மதம் பிடித்தபொழுது யானை முழங்கும் மதயானை பிளிறுவதுபோல் இந்த மலையும் பிளிறுகிறது அந்த ஓசையினையே மலைபடு கடாம் என்று, இப்பாட்டுக் கூறுகின்ற அழகிலே ஈடுபட்டுப் பிற்காலத்தினர் இந்த நூலின் பெயராக வழங்கலாயினர் முள்ளம்பன்றியால் இறந்தவனுக்காக அழுதல், புலியால் தாக்கப்பெற்ற கணவன் புண்ணாற மகளிர் பாடுதல், மலைப் பிளவில் குட்டி விழுந்ததற்காகக் குரங்குகள் வருந்தி ஆரவாரித்தல், தேன்கூட்டை அழிக்கும் ஆரவாரம், ஏறு தழுவும் முழக்கம் என்று

பலப்பல ஓசைகள் எழுவதனை வீறுகோளணி ஒரு சிறிதுமின்றி, உள்ளது உள்ளவாறே எல்லார் மனதும் இனிக்கப் பாடுகிறார் புலவர் விழாவைப் போன்றது அவனுடைய மலை மேலும் பல பாதுகாவல்களைக் கூறுகின்றான் வழிகூறும் கூத்தன் மலையைக் கடந்து ஆயர் இடத்தே சென்றால் அவர்கள் தரும் விருந்தினைக் கூறுகின்றான் பின் நன்னனுடைய மருத நாட்டு வளம் காக்களும் பள்ளிகளுமாயிப் பழையரது விருந்தோடு வரவேற்கின்றது " ஆறு எனக் கிடக்கும் தெருக்கள், மலையென ஓங்கும் மாடங்கள், இவையுள்ள அவன் ஊர், அருகேதான் உண்டு அவன் எதிரே சென்றால் பல வகைப் பொருளையும் காணிக்கையாகத் தந்து பலர் காத்துக் கிடக்கக் காண்பீர் அவனை நீங்கள் பாடியதும் நும்மில் தலைவன் தாமரைமலைய, விறலியர் விளங் கிழை அணியத் தந்து நீரியக்கம் போல் செல்லும் தேரும், மலைபோன்ற யானையும், மாட்டு மந்தையும், குதிரை களும், மண் தின்று கிடந்த பொற்காசுகளும் வாரி வழங்கி நன்னன் வழி விடுவான் " என்று வந்த கூத்தன் கூறுவது போல் பாடி முடிக்கின்றார் புலவர்

திருமுருகாற்றுப் படை என்பது பத்துப் பாட்டின் முதலிலே அமைந்த ஆற்றுப் படை இது 317 அடிகளால் அமைந்த ஆசிரியப்பா இதனைப் புலவர் ஆற்றுப் படை என்று நச்சினார்க்கினியர் விளக்குகின்றார் பிற ஆற்றுப் படைகள் எல்லாம் வழிகாட்டப்படுகின்றவனது குடிப் பெயரால் பெயர் பெறும்

முருகனிடம் வழிகாட்டப் படுவோர் உலக மக்கள் அனைவரும் ஆதலின் அந்த வகையால் இதனை வேறுபடுத்த முடியாது புரவலன் பெயராலேயே முருகாற்றுப்படை என இந்த நூல் பெயர் பெறுகிறது ஆசிரியரின் பொதுமை அறப் பெயராலேயே இவ்வாறு அங்கு விளங்குகின்றது. 'உலகத்தில் எல்லோர் அறிவையும் மயக்கிக் குழப்புவது, நம்மை தீமைகளும், இன்ப துன்பங்களும் உலகில் சிக்கிக் கிடக்கின்ற நிலையேயாம்.

தீமையினை விளக்குவதே தத்துவ சாத்திரங்களின் பெருமுயற்சி; கடவுட் புலவர்களின் பேரவா இந்த ஆற்றுப்படையைப் பாடிய நக்கீரரும் இந்த முயற்சியில் ஈடுப்பட்டுப் பாடுகின்றார்

ஒளி வடிவான ஞாயிற்றைக் காணும் பொழுதும் முருகன் காட்சி அளிக்கின்றான், வெயிலுக்கும் ஒளிக்கும் எதிர்மறையான மழையிலும் இருளிலும் தொட்டுப் பார்த்து, அதன் உருண்டைவடிவால் கடப்பம் பூவென அறியும் இடத்திலும் அப்பூவில் ஆழ்ந்து ஒளிர்கின்றான் ஆண்டவன் நன்மையின் வடிவம் சூரர மகளிர் தீமை யின் வடிவம் பேய் மகள் இவை இரண்டும் முருகனது இருவேறு வழிபாட்டு வடிவமாகத் தோன்றுகின்றன ஆற்றுப் படையில் பெண்ணழகினைப் புனைந்து ரைக்கும் வழக்கத்தினைக் கண்டோம்

இங்கும் பெண் அழகு செய்துகொள்ளும் இயற்கையான ஒப்பனையைப் புலவர் பாடுகின்றார் ஆற்றுப் படையில், இருந்தவனது வறுமையும், வந்த வனது செல்வமும் முரண்பட்டுத் தோன்றும் இங்கே உலகின் அடிப்படையான இன்பதுன்ப, நன்மை தீமை களின் முரண்பாடு தோன்றுவதனைக் காண்போம் நன்மை பெற விரும்புவோனை நோக்கி, "உனக்கு விருப்பம் இருக்குமானால் நீ நினைத்ததை இப்போதே பெறலாம்" என்று உறுதி கூறுகின்றார் புலவர்

மதுரையின் வனப்பையும், சிறந்த கடைத் தெருவின் செல்வத்தினை யும், பகைவரைப் பெண்களென இகழும் கொடிமரத்தால் தோன்றும் வீரத்தினையும், சில அடிகளில் விளக்கி வைத்து, அதற்கு மேற்கில் உள்ளது முருகன்வாழும் பரங்குன்றம் என்கின்றார் ஆன்மா சேற்றில் அழுந்திப் பின் விடுபட்டு உயர் நிலையை அடைவதனைக் குறிப்பார்போல் வண்டு தாமரையில் சிக்கிப் பின் நெய்தல் ஊதிப் பின் உயரப் பறந்து, புலரி விடிந்ததும் சுனைமலரில் ஒலிக்கின்ற அழகைக்

குறிக்கின்றார் முருகன் உள்ள பிற இடங்களையும் சுட்டிக் காட்டுகின்றார்

திருச்சீரலைவாயில் (திருச்செந்தூர்) வேழத்தின் மேல் முருகன் விளங்குவதாகப் பாடுகின்றார் விலங்கு லகையும், சட உலகையும் கடவுளானவர் அறிவு இன்பமாக ஆளுகிற காட்சி இது பொதுமையறத்தில் அனைத்தும் ஒன்றாகத் தோன்றும் காட்சியைக் காண்கின்றோம்

முருகனது முடியிலே பலவகை வடிவங்களும் ஒன்றாக இணைந்து விளங்குவது இதனையே குறிக்கின் றது உலகிலுள்ள மக்கள் காதல், போர், ஞானம், விஞ்ஞானம், சட்டம் என்று பலப்பல துறையில் முயல் கின்ற முயற்சியை எல்லாம் ஆறு பிரிவாகப் பகுத்து, அவற்றையே ஆண்டவரின் ஆறு முகங்களாக்கி, அவற்றின் இயக்கநிலையைக் குறிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவனவாகப் பன்னிரண்டு கைகளையும் புகழ்ந்து, இவ்வாறு அனைத்துலகையும் முருகனது வடிவாக்கி, அங்கே இயற்கையும், அந்தப் பெருங்காட்சியில் ஈடுபடுவதால் மூங்கில்கள் குழல் ஊத, சங்குகள் ஒலிக்க, இடியே முழவாக ஒலிக்க, ஆண்டவனது பிரபஞ்ச விரிவின் வடிவான மயிலே கொடியாக வெற்றி முழக்கம் செய்ய, அடியார்க்கருள முருகன் விரைந்து வருவதனைத் திருச்சீரலைவாயின் பெருமையாகப் பாடுகின்றார் புலவர் திருஆவிநன்குடி அவர் கூறும் அடுத்த இடம் அங்குச் சிறந்ததோர் ஓவியத்தினைத் தீட்டுகின்றார் புலவர் மில்ட்டன், முன்னோர் வழிபட்ட கடவுள்களை யெல்லாம் நரகத்தில் சாத்தானது தலைமையிலே நிறுத்திக் கண்டுகளிக்கின்றார்

நக்கீரரோ கடவுளர்களை யெல்லாம் குழவியைக் காணவரும் பெருமக்களாக வைத்து, முருகன் எதிரே நிறுத்திக் காண்கின்றார் இங்கு ஓர் ஊர்வலம் வருகிறது இதன் முன்னணியில் நிற்பவர்கள் எலும்பும் தோலுமாய்,

அறிவாலும் ஒழுக்கத்தாலும் சிறந்த முனிவர்கள் அடுத்த வருபவர்கள் அழகிற் சிறந்து, காதலில் ஒன்றாகி, இசையில் பண்பட்டு, உயர்ந்த மனத்தோடு விளங்கும் கந்தருவத் தம்பதிகள் திருமாலின் பெருமையை, அவனேறும் கருடன் பதைபதைக்க, ஆட்டிவைக்கும் பாம்பின் வழியே சுட்டுகின்றார் புலவர் மூவெயில் முறுக்கில் செல்வரும் உமையோடு வருகின்றார் ஆயிரம் கண் படைத்து யானைமேல் வரும் இந்திரன் பெருமையைச் சொற்றொடர்களின் ஒலியாலேயே புலவர் விளக்குகின்றார் வான்மீன் பூத்தாற் போன்றது இவர்களது நடை, அதனோடு தீயும் பற்றிக் கொண்டற் போன்றது இவர்களுடைய ஆற்றல் தீப்பறக்க இடிஇடித்தாற் போன்றது இவர் குரல் மடந்தையோடு விற்றிருக்கும் முருகனை இவர்கள் வேண்டிக் கொள்ளுகின்றர்கள் அந்நாளைய புராணங்களை யெல்லாம் இக்காட்சி ஒற்றுமைப் படுத்துகின்றது

இனித் தமிழ் நாட்டில் வழங்கிய பலவகை வழிபாடுகளையும் முருகன் வழியே ஒற்றுமை கொண்டு பாடப்புகுகின்றார் புலவர் திருவேரகத்தில் அந்தணர்கள் 48 ஆண்டுக்குப் பின் மணந்து, ஈரத்துணியோடும் பூணூலோடும் மந்திரம் கூறிப் பூவைத் தூவி வழிபடுகின்றனர் உலகெங்கும் ஆண்டவன் கோயில் கொண்டு இருப்பதனைப் பொதுமையறம் ஓங்கக் கூறுவார்போல்குன்றுகள் எல்லாம் அவன் கோயில்களே என்று குன்றுதோறாடலைப் புகழ்கின்றார் புலவர்.

வேலன் கடவுள்களை கள்ளுண்டு பெண்களோடு கூடிப் பாழாகாது முருகனை எண்ணிக் குரவைக் கூத்தாடுகையில் முருகப் பெருமானே அங்கு வந்து அடைவதாக நக்கீரனாருக்குத் தோன்றுகிறது கண்ணன் கோபிகைகளோடு ஆடியகுரவைக் கூத்தாம் ராதாலீலை ஆண்டவன் ஒருவனாய்ப் பல ஆன்மாக்களிடத்தும் ஒருங்கு மகிழ்ந்து குலாவி நிற்கும் சிறந்த உண்மையைக்

குறிப்பதுபோல இங்குக் கூறப்பெறுகின்ற குரவைக் கூத்தும் குறிக்குமென்று கொள்ளுதல் வேண்டும்

எஞ்சி நிற்கும் பலவகையான வழிபாடுகளை அடுத்தபகுதியில் புலவர் சுருக்கிக் கூறுகின்றார் வழிபாடு என்று கருதக்கூடாத ஓரிடம் இந்நாளைய மக்களுக்குத் தோன்றுவதுபோல நக்கீரருக்கும் தோன்றியுள்ளது இது வரையில் கூறிய வழிபாடுகள் எல்லாம் முருகனுக்கு ஏற்றவையானாற்போல் இதுவும் அவருக்கு உகந்தததாகவே புலவர் சுட்டுகின்றார் அச்சத்தை ஊட்டும் வெறியாட்டுச் செந்நூல், வெண்பொறி, கிடாய்பலி, இரத்த அரிசி, வெறியாட்டு வாத்தியங்கள், குறமகள்மேல் ஆவேசம் இத்தனையும் புலவர் கூறுகின்றார் இங்கும் இத்தனை கொடுமைகளுக்கு இடையே, வழிபடுவோர் தம்மை மறந்து தமக்கும் அப்பாற்பட்டதொரு பேராற்றலுக்கு முடிவணங்கி, நைந்துருகியாடும் பொழும் அச்சத்தைத் தரும் வாத்தியமெல்லாம் கடவுளது இன்னிசையாக நக்கீரருக்குக் கேட்கின்றன பகைவர் அஞ்சலாம், அன்பர் அஞ்சுவதேன்? முருகன் அங்குத் தோன்றுகின்றான் குறத்தி அங்கே முருகாற்றுப் படுத்துகின்றாள் நம்ப முடியாத இடத்திலேயும் கடவுள் வருவதனை நம்பும்படி செய்து, " முருகாற்றுப் படுத்த வியன்நகர்" என்று புகழும் சிறப்பை நோக்கி, அந்தத் தொடரே இந்த நூலுக்குப் பெயர் ஆயிற்று என்று சொல்வோரும் உண்டு "எங்கேனும் ஆண்டவனை வழி பட்டால் அவன் தோன்றுவான் அவனைப் புகழ்ந்து, அவன் அடியில் விழுந்தால் தனது இளமை வடிவைக் காட்டி உலகில், 'நீயே உனக்கு உவமை' யாகும்படி சிறந்த நிலையைத் தருவான் " என்று புலவர் முடிக்கின்றார்

முடிவிலே பழமுதிர்சோலையும் முருகனது இடம் என்று கூறுவார் அங்கு வீழும் அருவி, பழமும் தேனும் பொன்னும் கொண்டு வந்தாலும் விலங்குகள் அஞ்சி ஓடுவதனைக் காட்டிப் புலவர் புகழ்ந்து, ஆண்டவன் அருள் வெள்ளம் உலகில் பெருக்கெடுத்து ஓடினாலும்,

பொன்னும் மணியும் பூவும் உணவுமாய்ப் பொங்கினாலும், அதனைக் காணக் கண்ணின்றி மக்கள் விலங்குகள் போல் வாரிந்து, அஞ்சியோடித் தங்களுடைய பழைய துன்ப இருட்டுக்குள்ளேயே நுழைந்து வாடுகின்றார்கள் என்பதனைச் சுட்டுவது போன்றுள்ளது இந்த அருவி வருணனை

அகப்பொருளைப்பற்றிப் பாட்டுக்களை ஆராய்வதற்கு முன் புறப்பொருளைப் பற்றியதாய்ப் புரவலன் பெயரை வெளிப்படக் கூறும் ஆறாம் பாட்டாம் மதுரைக் காஞ்சியினை ஆராய்வோம் இது 782 அடிகளைக் கொண்ட மிக நீண்ட பாட்டு ; இஃது ஆசிரியப்பா; வஞ்சியடிகள் வருவதால் வஞ்சிப் பாட்டு என்றும் கூறுவர் இதனை இயற்றியவர் மதுரைக் காஞ்சிப் புலவர் என்று புகழப் பெறும் மாங்குடி வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் இதனுடைய தலைவன் அவன் பாடிய புறப்பாட்டு, " யான்பகைவரை வெல்லேனாயின் மாங்குடி மருதானர் தலையாலங் கானத்துப் பகைவரை மருதனாரைத் தலைவராகக் கொண்ட புலவர் என்னுடைய நாட்டைப் பாடாது ஒழிக" என்று வஞ்சினம் கூறுவதால், இப்புலவரை எவ்வளவு உயர்வாகக் கருதியிருந்தான் அவன் என்பது தெளிவா கிறது பின் வந்தோர்கள் காஞ்சி என்பதனைப் படையெடுப்பைத் தடுத்துப் போராடல் எனப் பொருள் கொண்டாலும், இப்புலவர் தொல்காப்பியர் கூறும் பொருளையொட்டி நிலையாமை என்றே பொருள் கொண்டு, நெடுஞ்செழியனுக்கு நிலையாமையை மதுரையில் நிகழும் ஓண விழாவன்று அவ்வார வாரத்தி னிடை அறிவுறுத்தி நல்வழிப்படுத்துகின்றார் உலகம் புகழவாழ்ந்த நெடுஞ்செழியனது முன்னோரது செல்ல வாழ்வையும், திக்குவிசயத்தால் இந்தியா முழுதையும் ஆண்ட ஒப்பிலா உயர்வையும் கூறி, அவர் களுடைய வழி வந்தவனே என்று நெடுஞ்செழியனை விளிக்கின்றார்

கடலில் கப்பல்களில் சென்று பெருமையைப் பாண்டியர்கள் தமதாக்கிக் கொண்டனர் கடற்கரையி

லுள்ள முதுவெள்ளிலை என்ற ஊரினை வென்று பின் தலையாலங்கானத்து ஏழரசரை ஒரே சமயத்தில் அவன் வென்ற புகழினைப் பாடி, " ஆடுதிறல் உயர் புகழ் வேந்தே" என்று இந்த நயமெல்லாம் தோன்ற அவனை அன்புடன் புலவர் அழைக்கின்றார் " பல்குட்டுவன்கோ, பரதவர் ஏறு" என்று அவன் வெற்றியைப் புகழ்ந்து, அவனுடைய போர்ச் சிறப்பினைத் தொல்காப்பியத்திற்கு உரிய புறத்திணைத் துறைகள் தோன்றப் பாடுகின்றார் கொள்ளார் தேயம் குறித்த கொற்றம் தொல் எயிற்கு இவர்தல், குடுமி கொண்ட மண்ணும் மங்கலம் முதலியன எல்லாம் இப்பாட்டில் வருகின்றன" பாழா யின நின்பகைவர் தேயம் அரசியல் பிழையாமல் அறம் வளர்த்த பெரியோர் சென்ற வழியில் சென்று வளர் பிறைபோல் வளர்க நின் கொற்றம்" என்று வாழ்த்தி, அவனுடைய நட்பினையும் பழிக்கு அஞ்சும் பெருமை யினையும் சிறப்பித்துக் கூறி, அவனைச் செவி சாய்த்துக் கேட்கு மாறு புலவர் செய்கின்றார்" இனி இந்த உலகத்துப் பொருளோடு மேலும் என்ன தொடர்ப்பாடு? பெரிய தொரு கடவுள் நிலை கூறுகின்றேம்; உன் துன்ப மெலாம் கெடுவதாக" என்று சுட்டிக் காட்டுகின்றார்

கரும்பாலை முதலிய பல ஓசைகளோடு விளங்கும் மருத நிலமும், பலபல நிறங்களோடு பூத்துக் கிடக்கும் முல்லை நிலமும், கிளிகடி பூசலும், யானையையும் பன்றியையும் வேட்டையாடும் ஆரவாரமும் என்ற இவை மலையில் எதிரொலிக்க வளம்படைத்துக் கிடக்கும் குறிஞ்சி நிலமும், நிழலும் தன் உருவிழக்கும் பாலைநிலமும், கப்பலில் ஏற்றிவந்த குதிரையோடு வேறுபிற பொருள்களால் சிறந்த நெய்தல் நிலமும், பாண்டியநாட்டைச் சிறப்பிக்கச் சிறப்பிக்கஅதனால் உயருகின்றது மதுரையம்பதி வெளியே சோலைகள், வைகையின் துறைதோறும் பெரும்பாணர் குடியிருப்பு, அகழ்மதில், மதிற்கதவம், அதன்மேல்மலைபோலுயர்ந்த மடம், அதனைத்தாண்டியுள்ளே சென்றால் ஆறு

போன்ற பெரிய கடைத்தெருக்கள், பலபல விழாக்கள், விற்கும் பலபல பொருள்களையும் சுட்டி எழுதி எடுத்துக் கட்டியுள்ள கொடிகள் இவற்றை எல்லாம் பாடிக் கொண்டு, மதுரை ஒண விழாவிற்குக் கொண்டு செல்கின்றார்

பூ விற்பவர், சுண்ணம் விற்பவர், வெற்றிலைப் சுண்ணாம்பும் விற்பவர், பல்வேறு தின்பண்டங்களையும் எல்லா மாந்தரும் சிரித்து மகிழ்ந்து வாங்க வீடு வீடு சென்று விற்பவர், இப்படிப்பலரை ஓண விழாவிற் காணலாம், இங்கு வழிபெற்றுக் கடந்து போவது போரிடைத்தப்பிப் போவது போலாகுமாம் இவ்வா றெல்லாம் திருவிழாவின் ஏழாம் நாள் மாலையில் பகலில் கூடிய நாளங்காடியில் எழுந்த ஆரவாரம் இது செல்வர் களது குதிரை காற்றைப் போலப் போகவும், பெண்கள் போகின்ற மணமெலாம் தெருவிலே வீசவும், பேரிளம் பெண்டிர் குழந்தைகளைத் தழுவித் தூக்கிக்கொண்டு, பூவும் புகையும் ஏந்திக் கடவுளைத் தொழுகின்றனர்.

அந்தணர் பள்ளியும், நோன்பு நோற்கும் பெரியோர் வாழும் நறும் பூஞ்சேர்க்கையும், தராசுகோல் போல அறங்கூறும் சபையும், மந்திரிகள் சபையும், நாற்பெருங் குழுவும் காணலாம் சங்கு கடைவோர், இரத்தினங் களைச் சாணை பிடிப்போர், நகைகள் செய்வோர், துணிகள் விற்போர், ஓவியம் எழுதுவோர் இவர்களை எல்லாம் மதுரையில் நிறையக் காணலாம், பலவகையான பழங்கள், உணவுகள் இவையெல்லாம் மாலையில் விளங்கும் அல்லங்காடியில் வருகின்றன, இரவு வந்ததும் பெண்கள் விளக்கேற்றிப் பூக்களைச் சூடிக்கொண்டு கணவன்மாரோடு இன்பமாய்க் காலங்கழிக்கின்றனர் பரத்தை மகளிர் வாழ்வும் அங்குண்டு குழந்தையைப் பெற்ற பெண்கள் கடவுளை வழிபடச் செல்லுகின்றனர் நடுயாமத்தில் மகளிரும் கடைவிற்ப வரும் தூங்கு கின்றனர் கள்வரைப் பிடிக்ககாவலாளர்கள் மழை பெய்யும் போது திரிந்துவருகின்றனர் பொழுது விடிந்த

தும் வேதம் முழுங்குகின்றது யாழ்கள் இசைக்கின்றன, சூதர் முதலியோர் அரசனை வாழ்த்தி நாழிகை கூறுகின்றனர்

பிற நாட்டிலிருந்து கொண்டுவந்த செல்வங்கள் தெய்வலோகம்போல் மதுரையில் கிடக்கின்றன அரசன் இரவில் பெண்களோடு கூடியிருந்து, காலையில் பள்ளியெழுச்சி பாடியதும் எழுந்து ஒப்பனை செய்து கொண்டு, முருகன்போல் தோன்றிப் போரில் உயிரிக் கஞ்சாது போர்செய்த வீரர்களை யெல்லால் காண வரும்படி அழைத்தும், பாணரையும் விறலியரை யும் புலவரையும் வருகவென வரவேற்றும், அனைவரை யும் ஒருங்கு வைத்து விருந்தூட்டிப் பரிசில் வழங்கு கிறான் இவற்றை எல்லாம் கூறுமுகத்தான் மதுரையை யும் அவனையும் பாடுகின்றார் " நீ குடிகளையெல்லாம் வாழ் வித்து உயர்ந்த ஞானத்தை எய்திச் சுற்றத்தாருட னும் தலைவர்களோடும் இன்பமாய்ப் பலநாள் வாழ்வாயாக" என்று வாழ்த்தி முடிக்கின்றார் புலவர்

நிலையாமையைக் கூறினாலும் உலக வாழ்வினைப் புலவர் இகழ்ந்து ஒதுக்கவில்லை; நிலையாத உலகத்தில் நிலைத்த புகழை நிலைநாட்ட வேண்டும் என்கிறார் தன்னலமே கருதிவாழாது, சுற்றும் தலைவரும் கலை ஞரும் குடிகளும் சிறக்க வேண்டும் என்ற குறிக்கோ ளோடு பிறர்க்கென வாழ்தலே சிறப்பு எனக் கருத வைக்கின்றார் புலவர் மிகச் சிறந்த அறிவையும் பெறுவதே பெருமை; சிற்றின்பத்தையோ, சிறிய நன்மை யையோ கருதி அறத்தையும் மானத்தையும் கைவிடுதல் ஆகாதென்று, இவ்வாறு நிலையாமையை வற்புறுத்த வந்தவர் வாழ்வின் உயர்ந்த குறிக்கோள் களைச் சுட்டி வாழுமாறு தம்முடைய தலைவனை வாழ்த்துகின்றார் அந்நாளைய அரசர் வாழ்வையும், நகர நிலைமையையும் படம்பிடித்து இந்தப் புலவர் காட்டி, இத்தனை செல்வத் தோடும், உயர்ந்த குறிக்கோளோடும் சனகனைப் போல வாழ்வதனை வற்புறுத்துவது ஒரு புதுமையே ஆகும்

பவர்" என்பது குறள் "முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்" என்பது நற்றிணை "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்" என்பது குறள் "ஈன்றஞான்றினும் பெரிதுவக்கும்" என்பது குறள். "ஈன்றஞான்றினும் பெரிதுவந்தனளே" என்பர் நச்செள்ளையார் சங்கப்புலவர்கள் திருக்குறளை எடுத்தாள்கின்றார்களா? திருவள்ளுவர் சங்கக் கருத்துக் களை எடுத்தாள்கிறார்களா? என்று எவ்வாறு கூறுவது? "அறம் பாடிற்றே" என்று கூறும் புறநானூறு அறம் என்பதால் வள்ளுவரின் திருக்குறளையே குறிக்கின்றது என்பாரும் உண்டு திருவள்ளுவமாலை சங்கப்புலவர் ஒருங்கிருந்து பாடியது என்று இன்று நம்புவாரில்லை

தொல்காப்பியத்திற் காணாத வழக்குக்கள் பாட்டிலும் தொகையிலும் அருகி வருபவையாய்த் திருக்குறளில் பயின்ற வருதலால் திருக்குறள் சங்க நூல்களுக்குப் பின்னையது என்று கூறுவாரும் உளர் ஆல், இல் என்ற உருபுகளும், இன் என்பதன் பின்வரும் இல் என்ற உருபும், பொருட்டு, மாட்டு, வேண்டி முதலிய சொல்லுருபுகளும், உயர்திணையில் வரும் கள் விகுதியும், ஒருமையான துவவீற்றின் முன் வரும் எல்லாமும் என்பதும், உயர் திணைப் படர்க்கையில் வரும் எல்லாமும் என்பதும், மரியாதை ஒருமையாக வரும் நீர் என்பதும், வினையடிச் சொற்களின் பின்வரும் உகரச்சாரியையும், துணை வினையாக வரும்வடு முதலியனவும், ஈரேவலாக வரும் வி, பி என்பனவும், தன்மை ஒருமையில் வரும் அன் ஈறும், எதிர்மறை இடைநிலையாக வரும் இல் என்பதும், தன்மையிலேயும் முன்னிலையிலேயும் வரும் வியங்கோளும், செயப்பாட்டு வினையை அமைக்க வரும் படு என்பதும், செயின் என்னும் வினையெச்சப் பொருள் தர வரும், கால், ஆல், ஏல், இல், ஆனும், ஏனும் போன்ற விகுதிகளும், செயற்கென என்ற வினையெச்சத்தின் பொருளில் வரும் செய என்னும் எச்சமும், எதிர்கால வினை யெச்ச ஈறாக வரும் பாக்கு என்பதும், வேண்டாம்

எனப் பிற்காலத்தே மருவிய வேண்டாவாம் என்ற வடிவமும், நன்னூலார் அறிந்த எங்ஙனம் என்ற வடிவமும், போதர என்பதிலிருந்து அமைத்துக் கொண்டது போல் தோன்றும் போதாய் என்ற வடிவமும் குறளில் பயின்று வருகின்றமையால் சங்க காலத்திற்குக் குறள் பின்னையது என்பர்

ஒருவந்தம் போன்ற அரிசமாசமும் (வடமொழியும் தமிழும் கலந்ததொகைச் சொல்) சங்ககால அகவல் ஓசையிலும் வேறான செப்பல் ஓசை வரும் பெண்பா யாப்புப் பயின்று வருவது பிற்கால வழக்கு என்பர் இவை எல்லாம் திருவள்ளுவர் புதியனவாகப் புகுத்தியன ஆகா பேச்சு வழக்கிலோ திசைமொழி வழக்கிலோ பயின்று வழங்குவன நாளடைவில் இலக்கிய வழக்கிலும் புகுவதே இயல்பு, இவை அனைத்தும் சங்ககாலம் அறியாதனவும் அல்ல, திருவள்ளுவர் எல்லார்க்கும் பொதுவானதொரு நூலை எழுத வந்ததன் காரணமாகப் பேச்சு வழக்கில் உள்ளவற்றையும் தடையின்றித் தம் நூலில் ஆண்டார் என்று கொள்வதில் வியப்பொன்றும் இல்லை: வட மொழிச் சொற்கள் வருவதும் இந்த நோக்கத்தின் பயனே ஆம் எப்படிக் கணக்குப் பார்த்தாலும் நூற்றுக்கு இரண்டுக்குமேல் குறளில் வடமொழிச் சொற்கள் இருப்பதாகக் காணோம் பழைய சொல் வழக்காறும் அங்குக் காண்கிறோம்

ஆய்தம், ஆன், வயின், மிசை, கண், உழி என்ற உருபுகளைப் பெறுகுவம், செய்யன்மின், செய்யற்க, வாழிய, வாழி, படாஅதி, அயர்கம், வாழ்வர், செய்கலான், அவலமிலர், உளரல்லர், பெறுதி, இழத்தும், உரைக்கோ, உவ், யான், யா்ம், சொல்லிசை அளபெடை, அன்சாரியை பெற்ற இறந்த காலம், அஃறிணை ஒருமை வினைகள், முதலிய வடிவங்கள் எதிர்மறை வியங்கோளாக வரும் அல்ஈறு, அல்ஈற்று வியங்கோள் முதலியன வருதலும், உன், உம் முதலிய முன்னிலைச் சொற்கள் வழங்காமையும் குறளின் பழமையைக் காட்டும் என்பர்

ஆதலின் சங்ககாலத்தின் முடிவிலோ அதனை ஒட்டியோ இந்நூல் எழுந்ததா கல் வேண்டும் என்று மட்டுமே கூறக்கூடும் சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய பழைய நூல்கள் திருக்குறளை மேற்கோளாக எடுத்தாள்வதும் இதன் பழைமையை வற்புறுத்தும் வள்ளுவரால் சங்கம் அழிந்தது என்ற செவிவழிச் செய்தியும் உண்டு

## பாட்டுடைச்செய்யுள்
## சிலப்பதிகாரம்

**சி**லம்பு காரணமாக விளைந்த நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கும் காவியம் ஆதலால் இது சிலப்பதிகாரம் எனப் பெயர் பெற்றது இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் இயைந்த காவியமாதலால், இயலிசை நாடகப் பொருட்டொடர்நிலைச் செய்யுள் என்றும், நாடக உறுப்புக்கள் பல உடையதாதலால் நாடகக் காப்பியம் என்றும், உரையும் இசைப்பாட்டும் விரவிய காரணத்தால் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும் இது கூறுப்படும்

ஐம்பெருங் காவியங்கள் என்று தமிழில் போற்றப்படும் ஐந்து காவியங்களில் தொன்மைச் சிறப்பு உடையது சிலப்பதி காரம் இதனுடன் ஒரு காலத்ததாகக் கூறப்படுவது மணிமேகலையாயினும் சமயக் கொள்கை யிலும் இலக்கியத் திறனிலும் இரண்டும் வேறுபட்டவை சிலப்பதிகாரம் சமண சமயக் கொள்கைகளைச் சிறப் பிக்கும் போக்கினதாயினும், பௌத்த சமயம் ஒன் றையே போற்றும் மணி மேகலை போல் ஒருதலைச் சார்பானது அன்று இந்த இரு காவியங்களும் சில உண்மைகளை எடுத்துரைத்து, மக்களைத் திருத்த வேண்டும் என்னும் குறிக்கோள் கொண்டனவே யெனி னும், சிலப்பதிகாரம் இலக்கியச் சுவையும் மிகுந்ததாக உள்ளது

இனிய ஒலிநயமும் உணர்ச்சிமிக்க கற்பனை வளமும் நிறைந்ததாக உள்ளது

“ அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும் .
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி காரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்”

என்று பதிகத்தில் (55-60) கூறப்படுகிறது அரசியலில் அறத்தின் ஆற்றல், கற்புடை மகளிரின் பெருமை, ஊழ்வினையின் வலிமை ஆகிய மூன்றும் நூலில் சிறந்து விளங்கும் கொள்கைகளாகும். இவற்றை வலியுறுத்தும் நோக்கத்தோடு இயற்றப்பட்ட ஒரு நூல், காவியச் சுவை மிகுந்ததாகவும் விளங்குதல் போற்றத் தக்கதாகும்

கண்ணகியின் தனிமைத் துன்பம், கோவலனைப் பிரிந்த மாதவியின் துயர், கோவலன் கொலையுண்டபின் கண்ணகியின் ஆற்றாமை ஆகியவை அவலச்சுவை நிரம்பியவை ஆதலின் இந்நூல் துன்பியில் நாடகம் போன்றதாக உள்ளது ஆயினும் முடிவில் ஆறுதலும், அமைதியும், துறக்க இன்பமும் கூறப்படுதலால் துன்பியல் மாறுகின்றது

இதன் காவியச் சுவையிலும், உயரிய கொள்கை களிலும், பெண்மை உற்ற துயரிலும், பெண்மை செய்த புரட்சியிலும் ஈடுபட்ட நெஞ்சினராய் பாரதியார் இந்நூலை வியந்து போற்றியுள்ளார் ‘நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்’ என்றும் அவர் இதனைப் பாராட்டி யுள்ளார்

இந்நூலின் முதல் பகுதியாகிய புகார்க்காண்டத்தில், காவியத் தலைவர்களான கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் நடைபெறுதலும், மாதவியின் ஆடல்பாடல் அரங்கேற்றமும், கோவலன் மனம் வேறுபட்டு அவளை விட்டுப் பிரிதலும் கண்ணகியுடன் மதுரைக்குப் புறப்

படுதலும் கூறப்படுகின்றன அப்பால், மதுரையில் மாதரி என்னும் ஆய்ச்சியின் வீட்டிற்குச் சென்று தங்குதலும், கோவலன் சிலம்பு விற்கச் சென்று பொற் கொல்லனது சூழ்ச்சியால் கொல்லப்படுதலும், கண்ணகி ஆற்றாத் துயருறுதலும், பழிச்சொல் கேட்டுக் கொதித் தெழுதலும், பாண்டியனிடம் வழக்குரைத்தலும், வேந்தன் தவறு ணர்ந்து நொந்து மடிதலும், மதுரை தீக் கிரை யாதலும் அடுத்த பகுதியாகிய மதுரைக் காண்டத்தில் உரைக்கப் படுகின்றன

மலைவளம் காணச் சென்ற சேரனிடம் குன்றவர் தாம் கண்ட கண்ணகியின் செய்தியைக் கூறலும், கேட்ட வேந்தன் பத்தினித் தெய்வத்திற்குக் கல்நாட்டும் முயற்சியை மேற் கொள்ளுதலும், வடநாட்டில் போர் நிகழ்தலும், சேரன் இயத்திலிருந்து கல் கொண்டு வந்து கங்கையில் நீராட்டலும், வஞ்சி மாநகரில் கல் நாட்டி வழிபடுதலும் மூன்றாம் பகுதியாகிய வஞ்சிக் காண்டத்தில் கூறப்படுகின்றன

இந்நூலின் காலத்தைப் பற்றிக் கருத்து வேறு பாடுகள் உண்டு இது சங்ககாலத்து நூலே என்று கருதுவோர் சிலர்; தேவார காலத்திற்கும் பிந்தியது என்போர் ஒரு சிலர்; சங்ககாலத்தை அடுத்துத் திருவள்ளுவர்க்குச் சிறிது பிந்தித் தோன்றியது என்று அறிஞர் பெரும்பாலோர் கொள்கின்றனர்

இந்நூல் தமிழகத்தின் மூன்று பகுதிகளாகிய சோழ பாண்டிய சேர நாடுகளைப் பற்றியும், அவற்றின் தலை நகரங்களைப் பற்றியும், அவற்றை ஆண்ட மூவேந்தர் களைப் பற்றியும் விரிவாக எடுத்துரைக்கின்றது ஆயினும், பல்லவரின் ஆட்சிபற்றி ஒரு குறிப்பும் இல்லை காஞ்சிநகரம், தேவார, திவ்வியப்பிரபந்தக்காலத்தில் பல்லவரின் செல்வாக்குப் பெற்ற நகரமாகக் குறிக்கப் பட்டுள்ளது அது போன்ற குறிப்பு ஒன்றும் சிலப்பதி காரத்தில் இல்லை ஆதலின் இந்நூல் பல்லவர் எழுச்சிக்கு முந்தியது எனலாம் பல்லவர்களைப் பற்றிய பழைய

சாசனங்கள் கிபி மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று கொள்ளப்படுவதால், இந்நூல் கிபி இரண்டாம் நூற்றாண்டினது எனலாம் இந்நூலில் குறிக்கப்படும் இலங்கை மன்னன் கயவாகு என்பவன் இலங்கை வரலாற்று நூலாகிய மகாவமிசத்தில் கயவாகு என்று பெயருள்ளவர் இருவர் உள்ளனர் அவர்களுள் முதற் கயவாகு இரண்டாம் நூற்றாண்டில் ஆண்டவன் சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றுள்ள கயவாகு இவனே எனக் கொள்ளல் மேற்கூறிய கருத்திற்கு அரண் செய்கிறது

இதன் பதிகத்தில் கூறப்படும் செய்திகளை ஆராய்ந்தால் அவை சேரன் செங்குட்டுவனுடைய வரலாற்றோடு இயைந்து வரவில்லை ஆதலின், பதிகம் பிற்காலத்துப் புலவர் ஒருவரால் சேர்க்கப்பெற்றதோ என்று ஐயுற இடம் உள்ளது அன்றிச் செங்குட்டுவ னுடைய வரலாற்றிற்குச் சான்று எனக் கொள்ளப்படும் பதிற்றுப்பத்தின் பதிகம் உண்மையானதா என்பதும் ஆராயத்தக்கது இப்பதிகங்களில் உள்ள முரண்பாடுகள் வரலாற்று ஆராய்ச்சிக்குத் தடையாகின்றன. எனவே, பதிகங்களை ஒதுக்கி நூலை மட்டும் கொண்டு உண்மை காணுதல் நன்று

சிலப்பதிகார வரலாற்று ஆராய்ச்சியில் மயக்கத்தை விளைப்பது மற்றொன்றும் உள்ளது அது இளங்கோ வடிகளோடு ஒரு காலத்தவரான மணிமேகலை ஆசிரியர் மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் வேறு என உணராமல், சங்ககாலப் புலவர் என்பதை அவர்களின் பெயர்களுக்கு அடையாகவுள்ள ஊர்ப் பெயர்களை விளக்கி நிற்கின்றன ஒருவர் மதுரையார்; மற்றொருவர் சீத்தலை என்னும் ஊரைச் சார்ந்தவர் ஆதலின், இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் சீத்தலைச் சாத்தனாரின் காலத்திற்குப் பிந்தியது எனக் கொள்ளல் வேண்டும்

இதில் காணப்படும் சொற்கள் சில, சங்க இலக்கியச் சொற்களின் வேறுபட்டனவாக இருத்தலால், இது மிகப்

பிற்காலத்து நூல் எனக் கூறுவர் சிலர் சொற்கள் சில வேறுபட்டிருத்தல் உண்மையே சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய நூலில் அவ்வேறுபாடு இருத்தல் இயற்கையே, தவிர, சங்கப்பாட்டுக்கள் திணை, துறை, முதலிய வரையறை உடையவை அவற்றின் மரபும் இயல்பும் வேறு பொதுமக்களின் வழக்கில் இருந்த சொற்களும் சொல் வடிவங்களும் அவற்றில் அமைந்த கதை. ஆதலின், அச்சொற்களும் சொல் வடிவங்களும் அவற்றில் இடம்பெறல் அரிது சிலப்பதிகாரம், நாடகப்போக்கில் அமைந்த கதை, ஆதலின், அச்சொற்களும் சொல் வடிவங்களும் இந்நூலில் எளிதில் இடம் பெற்றன

இதில் உள்ள சில நிகழ்ச்சிகளும் கதைகளும்வேறு சில நூல்களிலும் திரிந்தும் திரியாமலும் காணப்படு கின்றன

**"எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்**
**குருகார் கழனியின் இதணத் தாங்கண்**
**ஒருமுலை அறுத்த திருமா வுண்ணி"**

என்று நற்றிணையில் (பாட்டு-216-ல்) கூறப்படும் திருமாவுண்ணியும் கண்ணகியும் ஒருத்தியே என்று சிலர் கொள்வர். அவ்வாறு கொள்ளவேண்டிய காரணம் இல்லை. ஒரே வகையான நிகழ்ச்சி வேறுகாலத்திலும் வேறு இடத்திலும் நிகழ்ந்திருத்தல் கூடும் அன்றிப் பிற்கால நிகழ்ச்சி பற்றிய செய்தியில், பழைய நிகழ்ச்சி பற்றிய செய்தி கலந்து குழைந்து போதலும் உண்டு நீண்ட கதையாக உருவாகும் காவியத்தில், கதை நிகழ்ச்சிகள் பல இவ்வாறு கலப்புறுதலை மற்ற நாட்டுக் காவியங்களிலும் காணலாம் காவியங்களின் வரலாற்றை ஆராய்வோர், ஒரு நாட்டில் அதற்கு முன் வழங்கிய பல கதைகளின் கூறுகளும் சேர்ந்து கலந்து ஒரு நீண்ட தொடர்கதையாக அமைவதுண்டு என்பர்

கீரிப்பிள்ளையைக் கொன்ற மறையோன் மனைவியின் கதை (15 : அடைக்கலக்காதை, 54-75),

வன்னிமரமும் மடைப்பள்ளியும் சான்று காட்டிய கதை (21 வஞ்சின மாலை, 4-6) முதலிய சில கதைகள், பிற்காலத்துப் புராணங்களிலும் காணப் படுகின்றன அவற்றைக் கொண்டு, இந்நூல் புராணகாலத்திற்குப் பிற்பட்டது எனக் கூறல் பொருந்தாது அக்கதைகள் பழங்காலத்திலேயே தமிழ்நாட்டில் கர்ணபரம்பரையாக மக்களிடையே வழங்கி வந்தன என்றும், சிலப்திகார ஆசிரியர் அவற்றைத் தம் நூலில் சேர்த்தார் என்றும், அவருக்குப் பின் புராணகாலத்தில் அவை மேலும் விளக்கப்பெற்றன என்றும் கொள்ளல் பொருந்து வதாகும்

காவியத்தில் கூறப் பெற்ற யாவும் உண்மைச் செய்திகளாக இருத்தல் வேண்டும் என்பது விதி அன்று காவியம் எழுதும் புலவர் தம் கற்பனைகளைச் சேர்த்துச் சுவைகூட்டும் கடப்பாடுடையர்; அன்றியும் தாம் கொண்ட குறிக்கோளை வலியுறுத்தும் பொருட்டுப் பொதுமக்களின் உள்ளம் கொள்ளும் வகையில் அவர்கள் விரும்புவன சேர்த்துக் கவர்ச்சியூட்டும் நோக் கமும் உடையவர் ஆவர் ஆதலின் வரலாற்றை ஆய்வது போல் காவியத்தை ஆய்தல் கூடாது இயற்கைக்கு மாறு பட்ட அற்புத நிகழ்ச்சிகள் பல இந்நூலில் இருத்தலை எடுத்துக்காட்டி, இது நாட்டில் நடந்ததைக் கூறவில்லை என்றும் முழுதும்கற்பனையே என்றும் கூறுவோர் உளர்

அற்புத நிகழ்ச்சிகள் பெருகியுள்ளன என்பதையும், இக்காவியம் ஒன்றிலே தான் அவை மிகக் குறைந்த அளவில் உள்ளன என்பதை யும் கருதல் வேண்டும் செங்குட்டுவன் காலத்தில் கண்ணகிக்குக் கோயில் அமைக்கப் பெற்றதும், இலங்கை முதலிய நாடுகளிலும் கண்ணகி வழிபாடு பரவி, இன்று வரையிலும் இருந்துவருதலும், தமிழ்நாட்டிலும் மற்ற நாடுகளிலும் பிற்காலத்தில் பத்தினி வழிபாடு ஒரு சமயமாக வளர்ந்ததையும், பழைய வஞ்சிமாநகராகிய இன்றைய கொடுங்கோளூரில் உள்ள கோயிலின் தெய்வமாகிய

பகவதிக்கு ஒற்றை முலைச்சி என்ற பெயர் இன்றும் வழங்குதலும், கண்ணகி மந்து என்ற பெயருள்ள ஊர் நீலகிரி மலையில் இருத்தலும், தமிழ்நாட்டுப் பெண் களிடையே நீராடல், தலைமயிர் விரித்தல் முதலியன பற்றிக் காணப்படும் பழக்க வழக்கங்களும்; நம்பிக்கை களும் கண்ணகியின் கதை தமிழ்நாட்டில் நடந்த நிகழ்ச்சி பற்றியதே என்பதையும், இக்காவியம் நாட்டில் நடந்த நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு அமைந்த கற்பனையே என்பதையும் தெளிவாக்குகின்றன

இந்நூல், வேந்தர் வரலாற்றுக்குத் துணைசெய்யி னும் செய்யமாற் போயினும், நாட்டு வரலாற்றுக்குத் துணை செய்யும் சான்றுகள் பொதிந்தது என்பதில் ஐயம் இல்லை ஒரு நாட்டின் வரலாறு என்பது அந்நாட்டை ஆண்ட அரச குடும்பத்தின் வரலாறு மட்டும் அன்று; அக்குடும்பத்தினர் இருவர் மூவரின் வெற்றி தோல்வி களைப் பற்றிய குறிப்புக்களைக் கொண்ட ஏடு மட்டும் அன்று; நாட்டு மக்களின் வாழ்க்கை நிலைகள், பழக்க வழககங்கள், நம்பிக்கைகள், கலைவளர்ச்சி, சமயநிலை முதலான பலவற்றையும் அறிவிக்கும் நூலே உண்மை யான வரலாற்று நூல் ஆகும் இவ்வாறு கொள் வோர்க்குச் சிலப்பதிகாரம் இலக்கியச் சுவை மிகுந்த பெருங்காவியம் ஆவதோடு, வரலாற்றுக் குறிப்புகள் செறிந்த அரிய நூலாகவும் திகழ்கிறது

தமிழகத்தில் பழங்காலத்தில் இருந்த தெய்வ வழி பாடுகள், சமய நிலைகள் முதலிய பலவும் காய்தல் உவத்த லின்றி இந் நூலில் பொறிக்கப்பட்டுள்ளன மக்களின் ஆடையணிகள் பற்றியும், விழாக்கள் பற்றியும் குறிப் புக்கள் உள்ளன கொடு கொட்டி, பாண்டுரங்கம், துடிக் கூத்து, கூடைக் கூத்து, அவிநயக் கூத்து முதலிய கூத்து வகைகள் கூறப்பட்டுள்ளன குரவை, அம்மானை, பந்து முதலிய ஆடல்களும் கூறப்பட்டுள்ளன இவை பற்றிய இசைப் பாட்டுக்களும் உள்ளன கானல்வரி, வேட்டுவவரி, ஆற்றுவரி, ஊசல்வரி முதலாய இசைப் பாட்டுக்களும்

உள்ளன புகார்க் காண்டத்தில் உள்ள அரங்கேற்றுக் காதையில் பழந்தமிழ் நாட்டு இசை, நாட்டியக்கலை களைப் பற்றியும், நாடக அரங்கின் அமைப்பைப் பற்றியும் பற்பல குறிப்புகள் இருப்பது போற்றத்தக்கவை அவற்றிற்கு உரையாசிரியர் தந்துள்ள விளக்கங்கள் மேன்மேலும் பயன்படும் வகையில் உள்ளன

இந்நூலுக்கு அரும்பதவுரை என்னும் பழைய உரையுமே, அதற்குப்பின் அடியார்க்கு நல்லார் எழுதிய உரையுமே ஆகியஇரண்டு உரைகள் உள்ளன அடி யார்க்கு நல்லாரின் உரை முதல் இருபது காதை களுக்கே கிடைத்துள்ளன ஆயினும் அந்த உரையில் கலைகளைப் பற்றியும் பழங்காலத்தில் இருந்து மறைந்த நூல்களைப் பற்றியும் எவ்வளவோ அறிய முடிகின்றது வேறு எங்கும் கிடையாத இசைத்தமிழ் நாடகத்தமிழ் இலக்கணங்கள் அவர் உரையால் அறியக்கிடக்கின்றன

இந் நூலின் முதல் காண்டத்தை 1872-ல் சுப்பராய செட்டியாரும், 1876-ல் ஸ்ரீநிவாசராகவாச்சாரியாரும் அச்சேற்றி வெளியிட்டனர் 1892-ல் இரண்டு உரை களுடன் நூல் முழுவதையும் வெளியிட்ட பெருமை டாக்டர் உவே சாமிநாதையரைச் சார்ந்ததாகும் பிறகு நாவலர் ந மு வேங்கடசாமி நாட்டார் நூல் முழுவதற்கும் உரையெழுதி வெளியிட்டனர் புகார்க் காண்டத்திற்கு மாத்திரம் சர் ஆர் கே சண்முகம் செட்டியார் ஓர் உரை எழுதி வெளியிட்டனர்

சிலப்பதிகாரத்தின் சிறப்பியல்புகள் பல இது தமிழ்நாட்டின் முப்பகுதிகளைப் பற்றியும், மூவேந்தர் களைப் பற்றியும், மூன்று தலை நகரங்களைப் பற்றியும் விரிவாகக் கூறும் நாட்டுக்காவியம் ஆகும் அரச மரபுகள் பற்றிய நூல்போல் தோன்றினாலும், காவியத்தின் தலைவன் தலைவியாக அமைந்துள்ளவர் சோழ நாட்டு வாணிகக் குடும்பத்து மக்களே ஆதலின், இது குடிமக்கள் காவியம் ஆகும் அவ்விருவருள்ளும் கண்ணகியாகிய

தலைவியே சிறந்து விளங்குவதால், பெண்ணினத்திற்குப் பெருமை தரும் காவியமாக இது அமைந்துள்ளது அக்காலத்தில் விளங்கிய சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்களில் ஒன்றையும் பழிக்காமல் பொதுமை போற்றுதல் இதன் மற்றொரு சிறப்பாகும் காவியத்தின் இன்னொரு சிறப்பு நாடாளும் வேந்தனை எதிர்த்துப் பெண் ஒருத்தி நீதியை எடுத்துரைத்துப் புரட்சி செய்த பெருமையாகும்

தன் ஆணைக்குக் குறுக்கே வாய்திறப்போர் இல்லாத வகையில் நாட்டிற்குத் தலைமை தாங்கிப் பெரும்படை உடையவனாய் அரசு நடாத்திய வேந்தன், நங்கை ஒருத்தியின் துயரக் கண்ணீரால் கலங்கி உயிர் நீத்தான்; அதனாலேதான், "கண்ணிணீர், கொல்ல உயிர் கொடுத்த வேந்தன் வாழியரோ" (29 வாழ்த்துக் காதை, வாழ்த்து) என்ற வாழ்த்துரையும் அமைகிறது

இக்காவியத்தில் இன்னொரு சிறப்பும் உள்ளது சோழநாடு, பாண்டி நாடு, சேரநாடு என்று முப்பிரிவாக இருந்த நிலப்பரப்பைத் தமிழ்நாடு என்று ஒன்றாகத் தெளிந்து பாடிய புலவரின் ஒற்றுமைக் கனவு அச்சிறப் பாகும் தமிழ்நாட்டுப் படைகளின் ஆற்றலைத் தமிழாற்றல் என்றே அவர் குறிப்பிடுதல் காணலாம் (26 கால்கோட்காதை 161 அருந்தமிழாற்றல்; மேற்படி 185 - தென்றமிழற்றல் ; 27 நீர்ப்படைக் காதை 5- தென்றமிழாற்றல்)

இவை யாவற்றிலும் சிறந்ததாகப் போற்றத்தக்கது, நூல் முழுதும் விளங்கும் கருத்துத் தூய்மையாகும் ஆசிரியர் இளங்கோவடிகளின் தூய அறநெஞ்சம் ஒவ்வொரு காதையிலும் விளங்குகிறது வேண்டாத வருணனைகளும் அளவு கடந்த புனைந்துரைகளும் இல்லாதது போலவே, வெறுங்காமச்சுவை மிகுக்கும் பகுதி அழகுக் கலைகளைக் கூறும் இடமாயினும், அவளுடன் கோவலன் மயங்கி வாழ்தலைக் கூறும் இடமேயாயினனும், நூலாசிரியர் உயர்ந்த நாகரிக

எல்லையில் நின்று தூய்மையைக் காத்துள்ளார் துறவியராகிய ஆசிரியர் இல்லறத்தின் சிறப்பையும் கற்பின் பெருமையையும் போற்றிக் கூறும் இடங்களில், அரசியலிலும் சமயத்துறையிலும் அவர் மேற்கொண்ட நடுநிலைமையும் பொதுமையுமே விளங்கக் காண் கின்றோம்

"இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்
கற்புக்கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்"

*(15 அடைக்கலக்காதை, 112-4) என்று கதையில் வரும் கவுந்தியடிகள் என்னும் துறவியார் வாயிலாக இளங்கோ வடிகள் பத்தினி வழிபாட்டைப் போற்றியுரைத்துள்ளார்*

"பெண்ணின் பெருந்தக் யாவுள கற்பெண்ணும்
திண்மை உண்டாகப் பெறின்"

*என்று திருவள்ளுவர் போற்றிய பெருமையைக் கண்ணகி யின் வாழ்வில் கண்டார் இளங்கோவடிகள் அதனாலே தான் "பத்தினி கடவுளைப் பரசல் வேண்டும்"(25 காட்சிக்காதை 114) என்று சேரமாதேவி வாயிலாகக் கூறியுள்ளார்*

"இவளோ
கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய
திருமா மணியெனத் தெய்வமுற றுரைப்ப"

*(12 வேட்டுவரி, 47-50) என்று தெய்வம் போற்றி உரைப்பதாகவும் குறித்துள்ளார் காவியத்தலைவியின் கற்பின் சிறப்பில் அவருடைய நெஞ்சம் ஈடுபட்டிருந்தது என்பதும், வழிபாட்டுணர்ச்சியோடு அவர் இதனை இயற்றியுள்ளார் என்பதும் இவற்றால் தெளிவாகின்றன*

சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐந்தும் ஐம்பெருங் காப்பியங்களாம் இவற்றுள் வளையாபதியும் குண்டல கேசியும் கிடைக்கவில்லை முதல் மூன்று காவியங்களும் டாக்டர் உ வே சாமிநாத ஐயரவர்களால் சிறந்த ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளன

சீவகசிந்தாமணி காலத்தாற் சிலப்பதிகாரத்திற்கும் மணிமேகலைக்கும் பிற்பட்டதாயினும், சிறப்புக் கருதி, வழக்காற்றில் முதலில் வைத்து வழங்கப்பட்டு வருவது சிந்தித்தற்குரியதாகும், இப்பெருங்காப்பியமே தமிழ் மொழியில் முதன் முதல் விருத்தப்பாவால் இயற்றப் பட்டுப் பிற்காலப் பெருங்காப்பியமான கம்ப ராமாயணம் முதலிய சீரிய நூல்களுக்குச் சிறந்த வழி காட்டியாய் அமைந்தது பிற்காலக் கவிஞர்கள் இந்நூலைப் பெரிதும் போற்றிக் கற்றமை, அவர்கள் தாங்கள் இயற்றிய நூல்களில் இந்நூலிற் பயின்று வரும் அருந் தொடர்களையும், அணி விசேடங்களையும், அமைப்பு முறைகளையும் பொன்னே போலப் போற்றி வழங்குவதாற் புலனாகும்

இந்நூலை இயற்றிய திருத்தக்கதேவர் சோழர் குடியில் உதித்தவர்; சமண சமய நூல்கள் பலவற்றையும் இளமைப் பருவத்திலே ஐயந்திரிபற ஓதி உணர்ந்த சமண

முனிவர், சங்க காலத்தெழுந்த இலக்கிய இலக்கணங் களை நன்கு பயின்ற வித்தகர்; வட மொழிப் பயிற்சியும் மிக்கவர்; அதனால், வடமொழியில் வழங்கும் க்ஷத்ர சூடாமணி, கத்திய சிந்தாமணி, சீவந்தர சம்பு என்னும் நூல்களை நன்கு பயின்று, அவற்றைத் தழுவியே தமிழில் இப் பெருங்காப்பியத்தை இயற்றியவர் இளமைப் பருவத்திலேயே துறவு மேற்கொண்டு, நற்குணங்கள் பலவற்றிற்கும் ஆதாரமாய்த் திகழ்ந்தவர் இவரது காலம் கி பி 9ஆம் நூற்றாண்டென்பது ஆராய்ச்சியாளர் கொண்ட முடிவு

டாக்டர் உ வே சாமிநாத ஐயரவர்கள், 1887-ல் வெளியிட்ட முதற்பதிப்பில் 3145 கவிகள் காணப்படு கின்றன சைவ சித்தாந்த சமாஜப் பதிப்பில் 3154 கவிகள் அமைந்துள்ளன இந்நூல் சம்பந்தமாக வழங்கும் தனிப்பாடலொன்று இதன் செய்யுட்டொகை 3315 எனக் கூறுகின்றது நச்சினார்க்கினியர், "முந்நீர் வலம்புரி" என்று தொடங்கும் செய்யுட்குக் கூறும் உரையில் 'தேவர் அருளிச் செய்த செய்யுள், இரண்டாயிரத் தெழுநூறே' என்று கூறுவதைக்கொண்டு, மற்றைச் செய்யுட்கள் கந்தியார் என்னும் புலமைச் செல்வியார் ஒருவரால் இடைச்செருகலா யமைந்த கவிகள் என்று சிலர் கருதுகின்றனர் அச்செய்யுட்கள் இன்னவை என்பது புலப்படவில்லை

ழுலியேன் வேன்சோன் என்னும் பிரெஞ்சுஅறிஞர், 1883ஆம் ஆண்டில் பாரிஸ் கீழ்நாட்டுக் பற்றிய கட்டுரையொன்றில் சீவக சிந்தாமணி 3145 பாட்டுக்களை உடையது என்று கூறுகிறார் இக் கூற்று டாக்டர் ஐயரவர்கள் பதிப்பித்த இந்நூலின் முதற்பதிப்பைக் கண்டு கூறியதேயாம்

'இலம்பகம்' என்னும் அதிகாரக் குறியீடு வேறு தமிழ் நூல்களுள் யாண்டும் காணப்படவில்லை வடமொழி நூலான சீவந்தர சம்பு என்னும் உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் நூலில் இப்பாகுபாடு

காணப்படுவதால், இந்நூல் அதனைப் பின்பற்றியதாக லாம் எனச் சிலர் கருதுகின்றனர்

கி பி பதினான்காம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவரென ஆராய்ச்சியாளராற் கருதப்படும் நச்சினார்கினியர் தொல்காப்பியத்திற்கும், பத்துப் பாட்டிற்கும், கலித்தொகைக்கும், குறுந்தொகையுள் பேராசிரியர் உரையெழுதாது விட்ட இருபது செய்யுளுக்கும் விருந்தியுரை எழுதியவராவர் அப்பெரியார் சிந்தாமணியின் சிறப்பினை உணர்ந்து, அதற்குச் சிறந்த முறையில் உரை செய்ய விரும்பினார்; சமண சமயக் கருத்துகள் அந்நூலில் மிகுந்திருப்பதை அறிந்தார்; அதனால், சமண சமயப் புலமை நிரம்பிய பெருமக்களையடுத்து, அச்சமய உண்மைகளைக் கேட்டறிந்து, பின்னர் நூல் முழுவதையும் நன்கு ஆராய்ந்து, அதற்குச் சிறந்த உரை வகுத்தார் என்பர்

சிந்தாமணிக்குப் பழைய உரையொன்றும் இருந்திருக்கவேண்டுமென்பது, நச்சினார்க்கினியர் தம் உரையில் சிற்சில இடங்களில் வேறு உரையைச் சுட்டிக் காட்டி, 'என்பாருமுளர், என்றும் உரைப்பார், ஒரு சொல்லாக்கியும் உரைப்ப; வீந்தாரென்றல் பொருந்தாமை உணர்க என்னுந் தொடர்களைக் கூறுவதால் புலப்படும்

பெயர் பெற்ற உரையாசிரியர் பலர் தாமியற்றிய உரைகளில் சிந்தாமணியிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளனர்

கவிச்சக்கரவர்த்தியார் எனப் பலராலும் போற்றப்படும் கம்பர் தாம் இயற்றிய இராமாயணம் பல்லாற்றலும் சிறந்து விளங்குவதற்குக் காரணம், தாம் சிந்தாமணி என்னும் அட்சய பாத்திரத்திலிருந்து ஓர் அகப்பை முகந்து கொண்டதே எனக் கூறியதாகக் கன்னபரம்பரைச்செய்தியொன்று வழங்கிவருகின்றது இவ்வழக்கை மெய்ப்பிக்கப்போதிய அகச்சான்றுகளைக் கம்பராமாயணத்திற் காணலாம்

பின்னாளில் உலா, மடல், தூது, கோவை முதலிய பிரபந்தங்களைப் பாடிய புலவர்களும், தங்களுக்குச் சிந்தாமணியிடமுள்ள மதிப்பைத் தெரிவிக்க இந்நூலில் பயின்று வரும் செய்திகளைத் தக்க இடங்களில் அமைத்துப் பாராட்டியுள்ளார்கள்

சமணப்பெருமக்கள், இதனை 'மணநூல்' என்றும், 'முத்தி நூல்' என்றும் போற்றிப் பூசையில் வைத்து வணங்கியும் ஓதியும் வரும் வழக்கம் இன்றும் தமிழ் நாட்டில் பல இடங்களில் இருந்து வருகிறது

12ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழநாட்டை ஆண்ட இரண்டாம் குலோத்துங்கசோழன் என்னும் அனபாய சோழன், சிந்தாமணியைத் தன் அவைப் புலவரைக்கொண்டு விளக்கச் செய்து, கேட்டுக் களித்து வந்தான் என்றும், அதைக் கண்ட சேக்கிழார் அதைக் கேட்டுக் களிப்பதை விடுத்துச் சிவ கதைகளைக் கேட்டு நலனெய்துமாறு அவனுக்கு அறிவுறுத்தினார் என்றும், அது காரணமாகவே திருத்தொண்டர்புராணமாகிய பெரியபுராணம் சேக்கிழாரால் பாடப்பட்டது என்றும் திருத்தொண்டர் புராண வரலாறு கூறுகிறது

இந்நூல் நாமகள் இலம்பகம், கோவிந்தையார் இலம்பகம், காந்தருவ தத்தையார் இலம்பகம், குணமாலையார் இலம்பகம், பதுமையார் இலம்பகம், கேமசரியார் இலம்பகம், கனகமாலையார் இலம்பகம், விமலையார் இலம்பகம், சுரமஞ்சரியார் இலம்பகம், மணமகள் இலம்பகம், பூமகள் இலம்பகம், இலக்கணையார் இலம்பகம்,முத்தி இலம்பகம் என்னும் பதின் மூன்று பகுதிகளை உடையது

கோவிந்தையாரொழிந்த காந்தருவ தத்தையார் முதலிய எட்டு மகளிரைக் கதாநாயகனாக சீவகன் மணப்பதே இந்நூல் நுவலும் செய்தியிற் பெரும்பகுதி யாக அமைந்ததனால், இந்நூலுக்கு 'மணநூல்' என்னும் பெயர் வழங்குவதாயிற்று

பவணந்தி முனிவர் என்னும் சமணப் புலவர் பெருமான் இயற்றிய நன்னூல் என்னும் இலக்கணத்திற்கு எழுந்த உரைகளுள் முதல் உரை கண்டவர் மயிலை நாதர் என்னும் சமண அறிஞராவர் அவர் அந்நூலின் 48ஆம் சூத்திரவுரையில், 'தன்மையால் பெயர் பெற்றன சிந்தாமணி, காவியம் தன்னைப் பயில்வார் விரும்பும் பேறுகளையெல்லாம் நல்க வல்லது என்பது அவ்வறிஞர் கருத்து என்பதை அவர் கூற்று அறிவிக்கிறது

கதாநாயகனான சீவகனை அவன் தாயாகிய விசையை சுடுகாட்டில் கருவுயிர்த்தபோது, அந்நிலைமைக்கு வருந்தி, 'சிந்தாமணியே, கிடத்தியால்' என்று மகவை விளித்தது காரணமாக, அவன் வரலாறுணர்த்தும் இந்நூலுக்குச் சிந்தாமணி என்பது பெயராயிற்று என்பதுமுண்டு திருத்தக்கதேவர் நூலின் இறுதில், 'சிந்தாமணி ஓதி உணர்ந்தார் கேட்டார் இந்நீரராய் உயர்வர்' என்று கூறவதால், அவர் இந்நூலுக்கு வழங்கிய பெயரும் சிந்தாமணி என்பதேயாகுமென்பது புலப்படும் சிந்தாமணி என்னும் பெயரால் வழங்கும் பிற நூல்களினின்றும் இந்நூலைப் பிரித்துணரும் பொருட்டுக் கதைத் தலைவன் பெயரை அடையாகச் சார்த்திச் 'சீவக சிந்தாமணி' எனப் பிற்காலத்தார் இந்நூலை வழங்கலாயினர்

'ஸ்ரீபுராணம்' என்பது மணிப்பிரவாள உரை நடையிலமைந்த ஒரு நூல் அது சமணப்பெரியார்களாகிய இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் வரலாற்றை விளக்குவது அந்நூலிலும் இருபத்து நான்காந் தீர்த்தங்கரராகிய ஸ்ரீவர்த்தமானர் புராணத்துள் சீவக சரித்திரம் அமைந்துள்ளது அதிற் கதாபாத்திரங்களின் குறியீடுகளிலும் சரித்திரப்போக்கிலும் சிற்சில மாறுதல்கள் காணப்படுகின்றன

**சிந்தாமணிக் கதைச் சுருக்கம் :** பரத கண்டத்தில் ஏமாங்கத நாடு இசையால் திசை போயது இராசமாபுரம்

அதன் லநகர் அந்நாட்டரசன் சச்சந்தன் என்பவன் விதைட ீதசத்தரசன் அவன் மாமன்; ஸ்ரீதத்தன் என்பது அவன் பெயர் அவன் மகள் விசயை அழகிலும் அறிவிலும் பிற குணநலங்களிலும் சிறந்து விளங்கினாள் சச்சந்தன் அவளை மணந்தான்; அவள் அழகில் ஈடுபட்டு அந்தப்புரத்தை விட்டு அகலானாகித் தனது ஆட்சிப் பொறுப்பை வஞ்சகனான கட்டியங்காரன் என்னும் மந்திரியினிடம் ஒப்படைத்தான்

விசயை கருவுற்றாள் ஓர் இரவு அவள் கண்ட மூன்று கனாக்கள் அவள் வாழ்க்கையில் அடுத்து நிகழும் நிகழ்ச்சிகளை விளக்குவனவாயிருந்தன அவள் தான் கண்ட கனாக்களைச் சச்சந்தனிடம் கூற, அவன் அவை குறிக்கும் தீங்குகளை மறைத்து, நலங்களை நவின்று நங்கையைத் தேற்றினான்

கட்டியங்காரன் அரசனைக் கொன்று ஆட்சி யுரிமையைத் தனக்கே ஆக்கிக்கொள்ளக் கருதிப் படையு டன் அந்தப்புரத்தை முற்றுகையிட்டான் அதனை யறிந்த சச்சந்தன், கருவுற்றிருந்த விசயையைக் காப்பாற்றக் கருதி, அவளை ஒரு மயிற்பொறியிலேற்றி, ஆகாய வழியே அயலிடஞ்செல்ல விடுத்தான் கட்டியங்காரன் அரசனைக்கொன்று நாட்டுக்கு அதிபதியாயினன்

விசயையைத் தாங்கிச் சென்ற மயிற்பொறி அந்நகரைச் சார்ந்த ஒரு சுடுகாட்டில் இறங்கியது விசயை உடனே கருவுயிர்த்தாள்; பிறந்த மைந்தனைக் கண்டு பல வாறு வருந்தினாள் அச்சுடுகாட்டிலிருந்த தெய்வம் விசயையின் தோழி வடிவில் வந்து அவளைத் தேற்றி, அவள் அணிந்திருந்த சச்சந்தன் பெயர் பொறித்த மோதிரத்தைக் கழற்றி மகவுக்கணிந்து, “அம்மணி, வருந்தற்க, நாம் மறைந்திருப்போம் இம்மகவை ஒருவன் வந்து எடுத்துச் செல்வன் அதனால், இது நன்கு வளர்ந்து நலம் பல பெறும்” என்று கூறி அவளுடன் ஓரிடத்தே மறைந்திருந்தது

கந்துக்கடன் என்பவன் இராசமாபுரத்துச் செல்வ வணிகன் அவன் இறந்த தன் குழவியைப் புதைக்கத் தன்னந்தனியனாய் அவ்விடம் வந்தான் அதற்கு முன் பிறந்த அவன் குழந்தைகள் சில பிறந்தவுடன் இறந்தது கண்ட ஊரார் அவனது ஊழ்வினை காரணமாக அவனைப் பலவாறு தூற்றினர் ஆதலின், அதற்கு நாணிய அவன் ஒருவருமறியாதபடி அக்குழவியைப் புதைத்துச் செல்லக் கருதி வந்தவன், அங்குக் கிடந்த அரசக் குழவியை அதன் கையிலிருந்த மோதிரத்தால் அறிந்து அதனை எடுக்க, அது தும்பிற்று, உடனே தெய்வம் 'சீவ' என வாழ்த்த அதனை அசரீரி எனக் கருதிய வணிகன், 'சீவகன்' என்று அக்குழவிக்குப் பெயர் வழங்கி, அதனைக் கொண்டு சென்று, பிள்ளையை இழந்து வருந்திய தன் மனைவி சுநந்தை என்பாளிடம் கொடுத்து, 'இறந்த நின் மைந்தன் பிழைத்தான்!' எனக் கூறி அவளைத் தேற்றினன் சீவகன் அவளாற் சீராட்டி வளர்க்கப்பட்டு வளரலாயினன்

விசையை ஒருவாறு மனந்தேறி, தண்டகாரண்யித் திருந்த தவப்பள்ளியைஅடைந்து, துறவுக் கோலத்துடன் தன் மகனுக்கு நலமுண்டாகும்படி நோற்று வந்தனள்

சீவகன் வளர்ந்து வருங்கால் சுநந்தை நந்தட்டன் என்னும் புதல்வனையும் ஈன்றாள் அவனும் பிறைமதி போல வளர, சீவகன் அவனுடனும் மற்றத் தோழர்களு டனும் அச்சணந்தி என்னும் ஆசிரியரிடம் பயின்று, வில் வித்தை முதலிய பல வித்தைகளிலும் நிகரற்றவனாய் விளங்கினான்

ஒரு நாள் ஆசிரியர் சீவகனுக்கு அவன் வரலாற்றை உணர்த்தினார் அதை யறிந்த சீவகன், கட்டியங்காரனை உடனே கொன்று இழந்த ஆட்சியை எய்தத் துடித்தான். ஆசிரியர் ஓராண்டு வரையில் தன் மனக்கருத்து வெளியா காதபடி அமைந்திருக்குமாறு கட்டளையிட, அவனும் அதற்கிசைந்தான்

நந்தகோன் என்பவன் அரசாங்கப் பசுநிரைக் காவலர் தலைவன் அப்பசு நிரையை மலை வேடர்கள் மடக்கிச் சென்றார்கள் வீரர் பலர் சென்று வேடருடன் பொருது, பசுமந்தையை மீட்கலாற்றாது, புறங்காட்டித் திரும்பினர் அதனையறிந்த நந்கோன், அப்பசு மந்தையை மீட்பவனுக்குத் தன் மகள் கோவிந்தை என்பாளை மணமுடிப்பதாகப் பறையறைவித்தான் சீவகன் தோழருடன் சென்று வேடர்கள் விரட்டிப் பசுக்களை மீட்டு வந்து, கோவிந்தையை மணக்கத் தன் குலம் சம்மதியாதெனக் கருதி, அவளைத் தன் தோழன் பதுமுகனுக்கு மணஞ் செய்வித்தான் இச் செயல் சீவகன் அடைந்த கன்னி வெற்றியாய்த் திகழ்ந்தது

கலுழவேகன் என்பான், வெள்ளிமலையில் வாழ்ந்த வித்தியாதரன் அவன் மகள் காந்தருவதத்தை என்னும் கட்டழகி, யாழிசையிற் சிறப்புற்றவள் சோதிடர் அவள் இராசமாபுரத்து அரசிளங்குமரனை மணப்பாள் எனச் சாதகங் கணித்தனர்

இராசமாபுரத்து வணிகன் சீதத்தன் என்பான் ஒரு தீவை யடைந்து, வாணிகஞ் செய்து, பெரும்பொருளுடன் கப்பலேறித் தன்னாட்டிற்கு வரத் திரும்பினான் கலுழவேகன் அதனை அறிந்து, அவனைத் தன்னிடம் கொணருமாறு தரன் என்னும் வித்தியாதரனை அனுப்பினன் தரன் தனது மாயவித்தையின் ஆற்றலால் அக் கப்பல் முழுகியதுபோல் சீதத்தனுக்குத் தோற்ற வித்து, அவனைக் கரைக்குக் கொணர்ந்து, கழலுவேகனிடம் அழைத்துச் சென்றனன் கலுழவேகன் சீதத்தனை உபசரித்துக் காந்தருவ தத்தையின் சோதிடப் பயனைக் கூறி, “இசையில் இவளை வெல்வானுக்கு இவளை மணம் புரிவி” எனப் பணித்து, வீணாபதி என்னும் தோழியுடன் தன் மகளை அவனிடம் அடைக்கலம் செய்தான்

சீதத்தன் தரன் உதவியால் அம்மகளிருடன் விமானமூர்ந்து வந்து, நீரில் முழுகிவிட்டதாகத் தான் கருதிய

கப்பல் பரிவாரங்களுடன் கரையிலிருக்கக் கண்டு மகிழ்ந்து, தரனிடம் விடைபெற்றுக் கப்பலேறிப் புறப்பட்டு, இராசமாபுரத்தை அடைந்தான்

கலுழவேகன் கட்டளைப்படி சீதத்தன் ஏற்படுத்திய யாழிசைப் போரில் காந்தருவதத்தையை எதிர்த்தாரனை வரும் தோல்வியுற, இறுதியில் சீவகன் அவளை வென்று மணந்தான் அது கண்டு பொறாத கட்டியங்காரன் சீவகனை எதிர்த்துப் போராடச் சிற்றரசர் பலரை ஏவினான் சீவகன் தன் தோழருடன் கூடி அவர்களை எதிர்த்து போராடிப் புறங்காட்டியோடச் செய்தான்

சுரமஞ்சரி, குணமாலை என்னும் இரு நங்கையர் அந் நாள் வழக்கப்படி தாம் தயாரித்த வாசனைப் பொடிகளுள் சிறந்தது எது என்பதை அறிய விழைந்து, தம் தோழியரிடம் அவற்றைக் கொடுத்து, அவற்றின் சிறப்பறிய வல்லாரிடம் காட்டிவரும்படி அனுப்பினர் தோழியர் அவற்றைப் பலரிடம் காட்டியும் உண்மையறிய இயலாமல், இறுதியில் சீவகனிடம் காட்டினர் சீவகன் பல்கலைப் பயிற்சியுடையவனாதலின், அவற்றை ஆய்ந்து, குணமாலையின் சுண்ணமே சிறந்ததெனக் கூறினன் தோழியர் மூலம் அதனை அறிந்த சுரமஞ்சரி வெகுண்டு, "சீவகன் தானே வந்து என்னை விரும்பும்படி யான் நோன்பு நோற்பேன்" என்று கூறித் தன்னை ஆடவர் அணுகாதபடி கன்னி மாடத்தில் இருந்து நோற்றாள்

பின்னர் அந்தணரால் அடியுண்ட நாயொன்றுக்குச் சீவகன் 'பஞ்சநமஸ்காரம்' என்னும் ஐந்து மந்திரத்தை உபதேசிக்க, அது அம்மந்திர மேன்மையால் சுதஞ்சணன் என்னும் தேவனாகி விண்ணுலகடைந்தது அத்தேவன் சீவகனை அணுகி, நன்றி தெரிவித்து, அவன் வேண்டும்போது உதவி செய்வதாகக் கூறிச் சென்றனன்

கட்டியங்காரனது பட்டத்து யானையாகிய அசனி வேகம் மதங்கொண்டோடிக் குணமாலையைக் கொல்ல

முயல, அது கண்ட சீவகன் உடனே அதனை அடக்கி அவளைக் காப்பாற்றினான் அது காரணமாகக் குணமாலை அவனைக் காதலித்தாள் சீவகன் அவளை மணந்தான்

அசனிவேகத்தின் சோர்வைக் கண்ட கட்டியங் காரன் சினந்து, அச்சோர்விற்குக் காரணனான சீவ கனைக் கொணரும்படி வீரரை ஏவினான் வீரர் சீவ கனைச் சூழ்ந்தனர் சீவகன், ஓராண்டு வரையில் கட்டியங் காரனை எதிர்ப்பதில்லை எனத் தன் ஆசிரியருக்கு வாக்களித்திருந்ததால், வந்த வீரரை எதிர்க்காமல், சுதஞ்சணனை நினைத்தான் உடனே சுதஞ்சணன் தோன்றி, அனைவரையும் மயக்கிச் சீவகனை எடுத்துச் சென்று தன் நகரில் இருந்தினன்

வந்த வீரர்கள் அங்கே வந்த ஒருவனை உருத் தெரியாதபடி கொன்று, கட்டியங்காரனிடம் சென்று, சீவகனைக் கொன்று வீழ்த்தியதாகப் பொய் கூறினார் கள் கட்டியங்காரன் அது கேட்டு மகிழ்ந்தான்

சுதஞ்சணன் சீவகனுக்கு மூன்று மந்திரங்களை உபபேசித்தான் அவற்றுள் ஒன்று, இனிய குரலை அளிக்க வல்லது; பிறிதொன்று, விடத்தைப் போக்க வல்லது; மற்றொன்று, வேண்டும் உருவை நல்குவது பின்னர்ச் சீவகன் பூவுலகையடைந்து காட்டில் எதிர்ப் பட்ட வேடனுக்குக் கொலைத்தொழிலை விட்டொழிக்க உபதேசித்தான்; காட்டில் தீயிலகப்பட்டு வருந்திய யானைகளைக் காப்பாற்றினான்; சந்திராப நகரை யடைந்து, அந்நகர் மன்னன் மகனுடன் நட்புக் கொண்டான் அம்மன்னன் மகளான பதுமை என்பவள், பூக்கொய்கையில் பாம்பு தீண்டினமையால், விடந்தலைக் கேறி மயங்கினள் சீவகன், விடத்தைப் போக்கி அவளை மணந்து, சிறிது காலம் அவளுடன் இன்புற்றிருந்து, வேறிடஞ் செல்ல விரும்பி, ஒருவருமறியாவண்ணம் உருமாறிப் புறப்பட்டான்

சீவகன் தக்க நாட்டின் தலைநகராகிய கேமமா புரத்தை அடைந்து, அந்நகர வணிகனாக சுபத்திரன் என்பவனால் உபசரிக்கப்பட்டு, அவன் இல்லத்தை அடைந்தான் கேமசரி என்பவள் அவ் வணிகன் மகள் அவளுக்குச் சாதகங் கணித்த சோதிடர், அவள் எவனைக் கண்டு நாணமடை கின்றாளோ, அவனே அவளை மணத்தற்குரியவன் எனக் கூறியிருந்த னர் அதற்கு இயைய அவள் சீவகனைக் கண்டு நாணியதுடன் அவனைப் பெரிதும் காதலித்தனள் அது கண்ட வணிகன் அவளைச் சீவகனுக்கு மணம் புரிவித்தான்

சீவகன் அவளுடன் இரு திங்கள் இன்புற்றிருந்து, பின்பு அவளை விட்டுப் பிரிந்து, வழியிற் சந்தித்த ஒருவனுக்குத் தன் ஆடையணிகளைத் தந்து, அவனுடைய ஆடையணிகளைப் பெற்றுத் தான் தரித்துக்கொண்டு சென்றான்

ஏமமாபுரம் என்பது மத்திம தேயத்துத் தலைநகரம் சீவகன் அந்நகர்ப் புறச்சோலையை அடைந்து, குளக்கரையிலமர்ந்து, காந்தருவதத்தையையும் குணமாலையையும் நினைந்து வருந்தியிருந்தான் அந்நகரத்தரசன் மகன் விசயன் என்பவன், அச்சோலையை அடைந்து, ஒரு மாமரத்தின் உச்சிக்கிளையிலிருந்த கனியை அம்பால் எய்து வீழ்த்தப் பல முறை முயன்றும் இயலாது வருந்த, சீவகன் அதனை ஓர் அம்பெய்து வீழ்த்தி, அவனுக்கு நண்பனாயினன் அவன் வில்லாற்றலைக் கண்டு வியந்த விசயன், அவனை அழைத்துச் சென்று தன் தந்தையாகிய தடமித்தனுக்கு அறிமுகம் செய்வித்தான் தடமித்தன் தன் மைந்தர் ஐவர்க்கும் சீவகனையே வில்லாசிரியனாக் கினன் சீவகன் விரைவில் அவர்களை வில் வித்தையில் வல்லவர்களாய்த் திகழச் செய்தான் அது கண்டு வியந்த தடமித்தன், தன் மகளாகிய கனகமாலை என்பளைச் சீவகனுக்கு மணமுடித்து மகிழ்ந்தான்

சீவகனைப் பிரிந்து ஆற்றாத நந்தட்டன், காந்தருவதத்தையின் மந்திர ஆற்றலால், அவனிருக்கு

மிடமடைந்து, நிகழ்ந்தன யாவும் அறிந்து, அவனுடன் அந்நகரில் தங்கியிருந்தான்

சீவகனுடைய மற்றத் தோழர்களும் அவனைக் காணக்கருதி, காந்தருவதத்தையால் அவன் இருக்குமிட மறிந்து, அவனைக் காணப்புறப்பட்டார்கள், வழியில் விசயை நோற்றிருந்த தவப்பள்ளியை அடைந்தார்கள்; தங்கள் வரலாற்றை வினவிய விசயைக்கு அதனை விளக்குகையில், சீவகன் செய்திகளையும் விளக்கினார்கள் அது கேட்ட விசயை, சீவகன் தன் மகனே என்பதை அவர்களுக்கு விளக்கி, அவனைத் தன்னிடம் அழைத்து வர வேண்டினள் தோழர்கள் அங்ஙனமே செய்வதாகக் கூறி விடை பெற்று, ஏமமாபுரத்தை அடைந்து, அரசன் ஆனிரையை மடக்கினர் அவர்களை எதிர்க்கச் சீவகனும் நந்தட்டனும் பிறரும் போர்க்கோலம் பூண்டு வந்தனர் சீவகன் தன் தோழர்களைக் கண்டு மகிழ்ந்து, நிகழ்ந்தன யாவுமறிந்து, தன் தாயின் இருப்பைத் தெரிந்து, அவளைக் காணும் பெருவிருப்புடன் அரசனிடம் யாவும் கூறி விடை பெற்றுத் தோழருடன் சென்று தாயைக் கண்டான்

அன்னையும் தன் மகனைக் கண்டு, அளவற்ற மகிழ்ச்சி அடைந்து, "மகனே, நீ உன் மாமனாகிய கோவிந்தன் உதவியால் உன் பகைவனை வெல்வாயாக!" எனக் கூறி வாழ்த்தினள் அவன் அதற்கு உடன்பட்டுத் தவமகளிர் சிலருடன் விசயையைத் தன் மாமன் இருப்பிடத்திற்கு அனுப்பிவிட்டுத் தன் தோழருடன் இராசமா புரத்தை அடைந்து, தோழரை ஒரு சோலையில் இருக்கச் செய்து, மன்மதனுங் கண்டு நாணத் தக்க வடிவுடன் நகர வீதியிற் செல்கையில், அங்குப் பந்தாடிக் கொண்டிருந்த விமலை என்பவள், சீவகன் முன்னே வீழ்ந்த தன் பந்தை எடுக்க வந்து, சீவகனைக் கண்டு காதலித்தாள் அவனும் அவள் அழகில் ஈடுபட்டு, மயங்கி, அவள் தந்தையாகிய சாகரதத்தனுக்குரிய கடையை அடைந்தான்

சாகரதத்தன் கடையில் விலையாகாமல் தேங்கி யிருந்த பொருள்கள் அவன் மகளுக்குரிய கணவன் கடையில் வந்து தங்கும்போது விலையாகும் என்று சோதிடர் கூறியிருந்தனர் சீவகன் வந்ததும் அங்ஙனமே நிகழ்ந்தது அதை யறிந்த சாகரதத்தன் சீவகனை உப சரித்து, அவனுக்குத் தன் மகளை மணமுடித்தனன்

சீவகன் சோலையில் தங்கியிருந்த தன் தோழரை மணக்கோலத்துடன் அடைந்து நிகழ்ந்ததை நவில, தோழர் அவனைக் 'காமதிலகன்' என்று கொண்டாடி னர் அது கேட்ட புத்திசேனன் என்னும் தோழன், "சீவக, இந்நகரில் உள்ள சுரமஞ்சரி என்பவள் ஆடவரைக் கண்ணெடுத்தும் பாராது நோன்பியற்றுகின்றாள் நீ அவளை மயக்கி வயப்படுத்த வல்லையாயின் நானு முன்னைக் காம திலகன் எனப் பாராட்டுவேன்" என்றான்

சீவகன் அங்ஙனமே செய்வதாகக் கூறி, புத்தி சேனனைக் காமன் கோட்டத்தையடைந்து காமன் படிவத்தின் பின்னே மறைந்திருக்கக் கட்டளையிட்டுக் கிழ அந்தணன் வடிவங் கொண்டு சரமஞ்சரியின் கன்னிமாடத்தை அடைந்தான் கன்னிமாடக் காவற் பெண்டிர் அவன் முதுமைக்கிரங்கிச் சுரமஞ்சரிக்கு அவன் வருகையைத் தெரிவித்தனர் சுரமஞ்சரி அவனை அழைத்து உபசரித்து விருந்திட்டுப் பஞ்சணையில் துயிலச் செய்தனள் அவன் பஞ்சணையிற்படுத்து இனிய இசை பாட, அஃது அனைவரையும் வியப்பித்தது

அவ்விசை கேட்ட சுரமஞ்சரி, "இவ்விசை சீவகன் இசையைப் போன்று இன்பம் பயக்கின்றது யான் நாளைக்குக் காமன் கோட்டம் சென்று சீவகனை விரைவில் எனக்களிக்குமாறு காமனை வேண்டுவேன்" எனக் கூறி, அடுத்த நாள் அந்தணனையும் தோழியரை யும் உடன் கொண்டு காமன் கோட்டத்தை அடைந்தாள் அவள் கிழவனை ஓரிடத்திருத்திக் காமனைத் தொழுது, சீவகனைத் தனக்குத் தருமாறு வேண்ட, அங்கு

ஒளிந்திருந்த புத்திசேனன், "நீ அவனை அடைந்தாய்!" என, அவள் வரம் பெற்றதாக மகிழ்ந்து, அந்தணனிருந்த இடத்தை அடைந்தாள்; சீவகன் உண்மையுருக் கொண்டு நிற்கக் கண்டு திகைத்தாள் சீவகன் அவளை அன்புடன் தழுவி, அடுத்த நாள் மணம் புரிந்து கொண்டாள்

பின்னர்ச் சீவகன் விதைய நாட்டரசனும் தன் மாமனுமாகிய கோவிந்தராசனை அடைந்து, மேல் நடைபெற வேண்டுவனவற்றைப் பற்றி ஆலோசித்தான் அப்பொழுது கட்டியங்காரன் இராசமாபுரத்துக்கு வருமாறு தனக்கு எழுதிய கடிதத்தைப் பெற்ற கோவிந்த ராசன், தன் அரசினைத் தன் மகனுக்களித்துப் பரிவாரம் சூழச் சீவகனுடன் இராசமாபுரத்திற்கு அண்மையில் வந்திறங்கித் தான் அமைத்துள்ள யந்திரத் திரிபன்றியை எய்து வீழ்த்துபவனைத் தன் மகள் இலக்கணை மணப்பாள் எனப் பலர்க்கும் செய்தி போக்கினன் செய்தியறிந்த கட்டியங்காரனும் மற்றவரும் வந்து, திரிபன்றி எய்யுந்திறனின்றித்தோல்வியுற்று நின்றனர் சீவகன் வெளிப்பட்டு அத் திரிபன்றினை எய்து வீழ்த்தினன் தான் இறந்தான் என்றெண்ணியிருந்த சீவகனைக் கண்ட கட்டியங்காரன், திடுக்கிட்டு, வெகுண்டு, தன் புதல்வரோடும் சைனியத்தோடும் அவனை எதிர்த்தான் சீவகன் துணைவரோடும் துணைப் படையோடும் கட்டியங்காரனை எதிர்த்துப் போரிட்டு அவனையும் அவன் மக்களையும் கொன்று, அனைவர்க் கும் மகிழ்வையுண்டாக்கித் தன் நாட்டுக்குரியவனா யினன்; இலக்கணையையும் மணந்தான்

பின்னர்ச் சீவகன்தன் வாழ்விற்கு வழி கோலிய கந்துக்கடன் முதலியவர்களுக்கு அவரவர் தகுதிக் கேற்ற சிறப்புக்களைச் செய்துமகிழ்ந்தான் சுதஞ்சணன் படிவத்தைப் பொன்னாற் செய்வித்துக் கோவிலில் அமைத்துச் சிறப்பித்தான் பின்னும் பல நற்காரியங் களைச் செய்து முடித்து, உலகஞ் செழிக்கச் செங்கோலோச்சினான்

சீவகன் அன்னையாகிய விசயை அருகனுக்குக் கோயில் எடுத்துச் சிறப்புச் செய்தாள், சுடுகாட்டில் தன் தோழி போல வந்து தனக்கு உதவி செய்த தெய்வத்துக்கு அச் சுடுகாட்டில் ஒரு கோயில் கட்டுவித்தாள்; தன் மயிற் பொறியை மறவாது இருக்கும் படி தன் இருப்பிடத்தில் சுவரெங்கும் சித்தரிக்கச் செய்தாள், சீவகன் பிறந்த இடத்தை அறச்சாலையாக்கி, நாள் தோறும் ஐந்நூற் றைந்து குழவிகளுக்குப் பாலுஞ் சோறும் வழங்க ஏற்பாடு செய்தாள், தன் மருகியர் எண்மரையும் அணைத்து வாழ்த்தி மகிழ்ந்தாள்; சீவகனை மகனெனப் போற்றி வளர்த்த சுநந்தையின் பேரன்பைப் பெரிதும் பாராட்டி, அவளைச் சிறப்பித் தாள், பின்பு சுநந்தையோடும் மற்றுஞ் சில மகளிரோடும் தவப்பள்ளியை அடைந்து, பம்பை என்னும் தவ மூதாட்டியிடம் அறவுரை கேட்டுத் துறவு மேற் கொண்டாள்

சீவகன் மனைவியர் எண்மரும் ஒவ்வொரு மகனைப் பயந்தனர் சீவகன் அம்மைந்தர்க்குச் சச்சந்தன், சுதஞ் சணன், தரணி, கந்துக்கடன், விசயன், தத்தன், பரதன், கோவிந்தன் எனத் தன் வாழ்க்கைக்கு வழிகோலிய பெரு மக்களின் பெயர்களை வழங்கிச் செய்ந்நன்றி மறவாச் செம்மலாய்த் திகழ்ந்தான்

ஒரு நாள் சீவகன் தன் மனைவியருடன் உவ வனத்தை அடைந்து, சோலைவளங் கண்டு மகிழ்ந்து, ஒரு பலா மரத்தின் நிழலில் தங்கியிருநதான் அங்கு ஓர் ஆண் குரங்கு தனக்குத் துணையான மந்திக்கு ஒரு பலாப் பழத்தைப் பிளந்து, அதன் சுளைகளைக் கொடுத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தது அப்போது திடீரெனத் தோட்டக்காரன் தோன்றிக் கனியைக் கைப்பற்றி, அக் குரங்குகளை விரட்டினன் அதைக் கண்ட சீவகனுக்குச் செல்வம் நிலையாமை தெரியவந்தது அதனால் துறவுள்ளம் பூண்ட சீவகன், தேவியாருடன் சென்று அருகனை வணங்கினன்

அப்பொழுது அங்கு வந்த சாரணர் இருவருள் இரத்தினப்பிரபை என்பவர் தம்மை வணங்கி வேண்டிய சீவகனுக்குத் தவத்தாற் பெறலாகும் நலங்களையும் அவனது முற்பிறப்பின் வரலாற்றையும் விளங்கக் கூறினர் சீவகன் அவரை மீண்டும் வணங்கி ஆசி பெற, அச்சாரணரிருவரும் அவ்விடம் விட்டகன்றனர்

பின்னர்ச் சீவகன் தன் புதல்வன் சச்சந்தனுக்கு முடி சூட்டித் தன் மனைவியர் எண்மரையும் தன் தாய் விசயையுடன் தவப் பள்ளியில் விடுத்து, நந்தட்டன் முதலியவருடன் நகர் நீங்கி, தேவர் சிவிகை தாங்கச் சமவ சரணத்தை அடைந்து, ஸ்ரீவர்த்தமானரைக் கண்டு வணங்கி, சதன்மர் என்னும் கணதரரால் தீக்ஷிக்கப் பெற்று, விபுலகிரியில் தவஞ்செய்தான் அத்தவத்தின் பயனாக உத்தரகுரு என்னும் சித்த க்ஷேத்திரத்தில் நிருவாணநிலை எய்தினன்

சீவகன், மனைவிமார் நோற்று இந்திரராயினர்; தோழர்கள் தவம் புரிந்து தேவர்களாகிப் பொன்னுலகை யடைந்தார்கள்

சீவகன்: ஏமாங்கத நாட்டரசன் இவன் தந்தை சத்தந்தன்; தாயை விசயை இவன் பிறந்தவுடன் விசயை சிந்தாமணி (சவக- 311) என்றதாலும், அந்நூலிலேயே 'சிந்தாமணியின் சரிதம் சிதர்ந்தேன்' (3146) என வருவதாலும் இவனுக்குச் சிந்தாமணி என்னும் பெயரு முண்டென்று தெரிகிறது இவன் விசயை வயிற்றிலி ருக்கும்போதே கட்டியங்காரன் என்னும் அமைச்சனால் இவன் தந்தை கொல்லப் பட்டான் இவன் தாய் வானவூர் தியிலே தப்பிச் செல்கையில் சச்சந்தன் இறந்தான் என்பதைக் கட்டியங்காரன் முரசொலியால் அறிந்து, மூர்ச்சித்து, விமானத்தின்மேல் விழுந்தாள் அது சுடுகாட்டி லிறங்கியது அப்போது தான் சீவகன் பிறந்தான் கந்துக்கடன் என்னும் வணிகன் வீட்டிலே வளர்ந்தான் விசயை துறவியாகித் தவஞ்செய் தாள்

சீவகன் தன் ஆசிரியனால் தன் பிறப்பினுண்மை யுணர்ந்து, ஆசிரியன் ஆணைப்படி ஓராண்டு வரையில் காத்திருந்து, கட்டியங்காரனைக் கொன்று அரசைக் கைப் பற்றினான் அந்த ஓராண்டின் இடையிலே இவனைக் கட்டியங்காரன் சிறைப்படுத்திக் கொண்டு வரும் போது சுதஞ்சணன் என்னும் கந்தருவனால் காப்பாற்றப் பட்டான் பிறகு, தன் மாமன் துணை கொண்டு கட்டியங் காரனைக் கொன்றான் இவன் முற்பிறப்பிலே அன்னப் பறவையைச் சிறைப்படுத்தியதால் இப்பிறப்பிலே சிறைப்பாட்டான் என்பர்

இவன் இசைக்கலை முதலிய பல கலைகளிலும் வல்லவன், யாழின் அமைப்பையெல்லாம் அறிந்தவன் இசையால் கந்தருவப் பெண்ணாகிய தத்தை என்பவளை வென்று மணந்தான் இவளேயன்றி குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணை என்னும் பெண்களும் இவன் மனைவியர் இவன் தன் அன்னையைத் தன் பிறப்புணர்ந்த ஓராண் டின் முடிவிலே கண்டு தன்னுடன் அழைத்து வந்தான் அதுவரை அவள் உயிரோடிருப்பதை அறிந்திலன்

இவன் சமண சமயத்தில் சிறந்த பற்றும் அறிவு முள்ளவன்; சிறந்த வீரன்; வல்லமை மிக்கவன்; ஆட வருக்குரிய இலக்கணங்க ளெல்லாம் அமைந்தவன்; நன்றி மறவாதவன், அருளாளன்; ஊக்கம் மிக்கவன்; வள்ளல்; சமணர்கள் சீவகனைத் தெய்வமாக வழிபடுவர்

இவன் கதை தமிழில் சீவக சிந்தாமணி, சிந்தாமணிமாலை என்னும் நூல்களில் உள்ளது வட மொழியில் உள்ள க்ஷத்திர சூடாமணி, கத்தியசிந்தாமணி, சீவந்தர நாடகம், சீவந்தரசம்பு என்னும் நூல்கள் இவன் கதையையே கூறுகின்றன மகாபுராணத்தின் ஒரு பாகத் திலும், ஸ்ரீ புராணத்தின் ஒரு பாகத்தும் இவன் கதை கூறப்பெற்றுள்ளது

## கொங்குவேளின் பெருங்கதை

பெருங்கதை என்பது உதயணன் என்னும் அரசனது கதையைக் கூறும் காப்பியம் உதயணன் குரு மரபிற் பிறந்தவன்; வத்த நாட்டில் உள்ள கௌசாம்பி என்னும் நகரத்தரசனாகிய சதானிகனுக்கு மிருகாபதி என்பவளிடம் பிறந்தவன் சதானிகன் என்பவன் பாண்டவர் காலத்துக்குப் பிறகு அரசாண்டு வந்தான் அவனுடைய பேரனின் மகனாகிய நிசக்குனு என்பவன் காலத்தில் அத்தினாபுரம் அழிந்து போயிற்று எனவே, அவன் கௌசாம்பி நகரத்தைத் தலைநகராகக்கொண்டு ஆண்டான் அவனுக்கு 16ஆம் தலைமுறையில் சதானிகன் என்னும் பெயருடைய ஒருவன் இருந்தான் அவன் மகனே இக்கதைத் தலைவனாகிய உதயணன் ஆவான் இக்கதையை விஷ்ணு புராணம் கூறுகிறது சூரியன் உதிக்குங் காலத்தில் பிறந்தவனாதலால் உதயணன் எனப்பட்டான்

கௌசாம்பி நகரில் சதானிகனின் மனைவி மிருகாபதி, கருவுற்ற பத்தாந் திங்களில் ஒரு நாள் செவ்வுடை உடுத்து நிலாமுற்றத்தில் படுத்திருந்தாள் அவளைத் தசைப் பிண்டமெனக் கருதிய சிம்புட் பறவை ஒன்று விபுலம் என்னும் மலைக்குத் தூக்கிச் சென்று, உண்மையுணர்ந்து விடுத்துப் பறந்து போய் விட்டது அங்குச் சூரியோதய காலத்தில் மிருகாபதி வயிற்றில்

உதயணன் பிறந்தான் அம்மலையில் தவம் புரிந்து வந்த மிருகாபதியின் தந்தையாகிய சேடகர் தாயையும் பிள்ளையையும் ஆதரித்து வந்தார் ஆங்கிருந்த பிரம சுந்தர முனிவரின் மகனாகிய யூகி என்பனுடன் உதயணன் வளர்ந்து, கல்வி கேள்விகளில் வல்லவனானான் உதயணன் பின்பு தனது யாழின் இசையால் தெய்வ யானை ஒன்றை வசப்படுத்தினான் யான் உண்ணு முன் நீ உண்டால் யான் உன்னை விடுத்துப் பிரிந்து விடுவேன் என்னும் நிபந்தனையுடன் அத்தெய்வ யானை உதயண னிடம் இருந்து வந்தது முதலில் உதயணன் தன் மாமனா கிய விக்கிரமனுடைய அரசுரிமையையும், பின்பு தன் தந்தையின் அரசுரிமையையும் பெற்று ஆண்டான்

உதயணன் ஒரு நாள் தெய்வ யானை உண்ணுமுன் உண்டுவிட்டானதலால் அஃது அவனை விடுத்து நீங்கியது அதனால் வருந்திய உதயணன் யாழுங் கையு மாய் அதனைத் தேடித் திரியுங்கால், உச்சயினி நகரத்தர சனாகிய பிரச்சோதனன் என்பவனால் சிறைப்படுத்தப் பட்டான். இதை உணர்ந்து யூகி அந்நகரத்தில் உள்ள நளகிரி என்னும் பட்டத்து யானைக்கு மதம் பிடிக்குமாறு செய்துவிட்டான் மதம் பிடித்த நளகினாயை அடக்குதற் பொருட்டு உதயணன் சிறையிலிருந்து விடுதலை செய்யப் பெற்றான் உதயணன் அந்த யானையை அடக்கவே, பிரச் சோதனன் மகிழ்ந்து அவனைத் தன் மகளாகிய வாசவதத் தைக்கு யாழ் கற்பிக்குமாறு பணித்தான் அதனால் உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் காதலுண்டாயிற்று உதயணன் வாசவதத்தையுடன் அவ்விடத்தை விடுத்துச் சயந்தி என்னும் நகரம் சென்று, அவளை மணந்து கொண்டான் அவளது இன்பத்தில் மயங்கிய உதயணன் எல்லாவற்றையும் மறந்திருந்தான்

உதயணன் சில நாட்கள் வாசவதத்தையைப் பிரிந்திருந்தால்தான் அரசியலில் அவனது மனம் செல்லும் என்று எண்ணிய யூகி, தான் இறந்து விட்டதாக ஒரு பொய்ச் செய்தியைப் பரப்பினான் மேலும், ஒரு

நாள் உச னன் வேட்டையாடச் சென்றிருந்தபொழுது சாங்கிய தாய் என்பவளது உதவியால் வாசவதத்தையை அழைத்துக் கொண்டு, உதயணன் தங்கியிருந்த வீட்டுக்கும் நெருப்பை வைத்துவிட்டுச் சென்று விட்டான் வேட்டையாடித் திரும்பி வந்த உதயணன் தன் வீடு எரிந்திருப்பது கண்டு, வாசவதத்தையும் இறந்து போனாள் என எண்ணி வருத்தினான் பிறகு இறந்து போன யூகி, வாசவதத்தை ஆகியோரைப் பிழைக்கச் செய்யும் நோக்கத்துடன் இராசகிரி என்ற மலையிலிருந்த பெரியவர் ஒருவரிடம் சென்றான்

இராசகிரிக்குச் சென்ற உதயணன் அந்நகரத்தரசனின் தங்கையாகிய பதுமாபதியை மணந்து, பின்பு கௌசாம்பிக்கு வந்து, அந்நகரை ஆண்டான் அங்கு யூகி, வாசவதத்தையுடன் வந்து சேர்ந்தான் அவர்களைக் கண்ட உதயணன் மகிழ்ச்சி மிகக்கொண்டான் பிறகு உதயணன் மானனீகை, விரிசிகை என்பவர்களையும் மணந்தான் சில ஆண்டுகளுக்குப் பின் வாசவதத்தையின் வயிற்றில் நரவாண தத்தன் என்பவன் பிறந்தான் அவன் வளர்ந்து மதன மஞ்சிகை என்பவளை மணந்தான் மதனமஞ்சிகையை ஒருமுறை வித்தியாதரன் ஒருவன் தூக்கிச் செல்லவே, நரவாணதத்தன் அவனுலகை அடைந்து, ஆண்டிருந்த அரசர்களை வென்று, வித்தியாதரச் சக்கரவர்த்தியாக வாழ்ந்தான் பின்பு உதயணன் தனக்குப் பதுமாபதியினிடம் பிறந்த கோமுகனுக்கு அரச பதவியை அளித்துவிட்டுத் துறவு பூண்டு, தவஞ்செய்யச் சென்றான்

இந்நூல் பெருங்காப்பிய வகையைச் சார்ந்தது ஆசிரியப்பாவால் அமைந்தது உதயணன் உச்சயினி நகரத்துப் பட்டத்து யானையை அடக்கியது முதல், வித்தியாதரன் மதன மஞ்சிகையைத் தூக்கிச் சென்றது வரையில் உள்ள வரலாறே இப்பொழுது கிடைத்துள்ளஃது அவை உஞ்சைக் காண்டம், இலாவாண காண்டம், மகத காண்டம், வத்தவ காண்டம், நரவாண

காண்டம் என்னும் ஐந்து காண்டங்கள் அவற்றுள் உஞ்சைக் காண்டத்தின் முற்பகுதியும், நரவாண காண்டத்தின் பிற்பகுதியும் அழிந்து போய் விட்டன கிடைத்துள்ள பகுதியை டாக்டர் உ வே சாமிநாதய்யரவர்கள் அச்சிட்டிருக் கிறார்கள்

பெருங்கதையை இயற்றியவர் கொங்கு வேளிர் என்பவர் அவர் 'கொங்கு வேள்' என்றும், 'கொங்க வேள்' என்றும் குறிப்பிடப்படுகின்றார் இவர் கொங்கு நாட்டைச் சேர்ந்தவராதலாலும், வேளிர் மரபில் தோன்றியவராதலாலும் இவ்வாறு அழைக்கப் படுகின்றார் இவரது இயற்பெயர் இன்னதென்ற அறியக்கூடவில்லை; வேளிர் என்பார் வேளாண் வகுப்பைச் சேர்ந்த சிற்றரசர் ஆவர் முடிமன்னருக்கு மகட்கொடையளிக்கும் உரிமையை அவர்கள் பெற்றிருந்தனர் கொங்கு நாட்டில் உள்ள விசயமங்கலம் என்னும் ஊரே இவர் பிறந்த ஊராகும்

கொங்குவேளிர் மங்கை என்ற ஊரில் பிறந்தார் என்றும், இந்நூலை இயற்றுவதற்கு இவர் மூன்று பிறப்புக்கள் எடுத்தார் என்றும், சங்கத்தார் கேட்ட கேள்விகட்கு இவர் தம் வேலைக்காரி ஒருத்தியைக் கொண்டு விடை கூறுமாறு செய்தார் என்றும் கொங்கு மண்டல சதகம் கூறுகிறது மங்கை என்பது விசய மங்கலம் ஆகும் இவர் இல்லறம், வானப் பிரத்தம், துறவறம் ஆகிய மூன்று நிலைகளில் இருந்து இந்நூலைப் பாடியிருத்தல் கூடும் சிறந்த கவிஞர்களின் வீட்டு வேலைக்காரர்கள் சிறந்த கல்வியறிவு உடையவர்களாக இருத்தலும் நடக்கக்கூடிய தொன்றே

'பிருகத் கதா' என்னும் நூலை ஆதாரமாகக் கொண்டு இந்நூல் தோன்றியிருத்தல் கூடும் அது குணாட்டியர் என்பவரால் பைசாச மொழியில் இயற்றப் பட்டதென்றும், அதில் பல்வேறு கதைகள் உள்ளன என்றும், பைசாச மொழியிலிருந்த நூலை துர்விநீதன் என்னும் அரசன் வடமொழியிற் செய்தான் என்றும் மைசூர் இராச்சியத்துக் கல்வெட்டொன்று கூறுகின்றது

ூ ıநீதன் என்பவன் கி பி 5 அல்லது 6 ஆம் நூற்ற ஊடைச் சேர்ந்தவன் ஆவான் அவன் கங்க வமிசத்தைச் சேர்ந்தவன்; சமண மதத்தினன் 'பிருகத் கதா' என்ற சொற்றொடர் தமிழில் 'பெருங்கதை' 'மாக்கதை' என்று பொருள்படும் 'பிருகத் கதா' என்ற பெயருடன் பைசாச மொழியில் அமைந்த நூலை இதற்கு முதனூலாகக் கூறுவது பொருத்தமன்று ஏனெனில் அந்நூல் சைவசமயச் சார்புடையது இந்நூலோ சைன சமயச் சார்புடையது பைசாச மொழியில் பரந்து கிடந்த பிருகத் கதையை சேஷமேந்திரர் என்ற மகாகவி வடமொழியில் 'பிருகத் கதா மஞ்சரி' என்ற பெயரில் சுருக்கி இயற்றினார் அது மிகவும் சுருங்கி யிருந்தது கண்டு, சோமதேவபட்டார் என்ற மகாகவி, 'கதாசரித் சாகரம்' என்ற பெயரில் வட மொழியில் ஒரு நூல் எழுதினார் இத்தகைய நூல்களின் துணைகொண்டு, துர்விநீதன் எழுதிய நூலைத் தழுவி இந்நூல் தோன்றியிருத்தல் கூடும் உதயணன் கதையைக் கூறும் மற்றொரு தமிழ் நூல் உதயண குமார காவியம் ஆகும் இதுவும் ஐயரவர்களால் அச்சிடப்பட்டிருக்கிறது

கொங்குவேள் மாக்கதை, உதயணன் கதை என்றும் வழங்கும் இதன் ஆசிரியர் சைனர் சைன சமயக் கொள்கைகள் பல இந்நூலில் விளக்கப்படுகின்றன

இவர் காலம் தெரியவில்லை சிந்தாமணியின் ஆசிரியராகிய திருத்தக்க தேவருக்கும் இவர் முற்பட்டவர் என்பர் டாக்டர் உ வே சாமிநாத ஐயர்

## பௌத்தநெறியில் மணிமேகலை

**த**மிழிலக்கியத்துள் தோன்றியுள்ள காவியங்கள் ஐந்து அவையாவன சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலக்கேசி என்பன இவற்றுள் சிறந்தது சிலப்பதிகாரம் அதனை ஒட்டிப் பெருமையொடு விளங்குவது மணிமேகலை எனவே இரண்டையும் இரட்டைக் காவியம் என்று சொல்லலாம் சிலப்பதிகாரக் கதை மணிமேகலையில் தொடர்ந்து செல்வது இவ்வுண்மையைத் தெளிவுபடுத்தும்

மணிமேகலை என்னும் இந்நூலுக்கு 'மணிமேகலை துறவு' என்னும் பெயரும் உண்டு இந் நூலினை அறிஞர்கள் பலரும் பலவாறாகப் பாராட்டி இருக்கின்றார்கள் பெரும்புலவர்கள் இந்த நூலின் நயத்தில் ஈடுபட்டிருக்கின்றார்கள் பெரு நூல்களுக்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் இந்நூலிலிருந்து மேற்கோள்களை எடுத்துக் காட்டியிருக்கின்றார்கள்

**கதைச் சுருக்கம் :** கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்தவள் மணிமேகலை கோவலனுடைய முன்னோர்களில் ஒருவனுக்கு மணிமேகலா தெய்வம் உதவி செய்ததைக் கொண்டு, மணிமேகலையென்ற பெயரை வைத்தார்கள் கோவலனிறந்ததால் மாதவி துறவு பூண்டு பௌத்த மதத்திற் சேர்ந்தாள் மணிமேகலையையும் துறவு பூண்டு பௌத்த மதத்திற் சேர்ந்தாள் மணிமேகலையை யும் துறவு பூணச் செய்தாள் மணிமேகலை தன்

தோழியுடன் ஒருநாள் உபவனத்திற்கு மலர் கொய்யச் சென்றபோது, மணி மேகலா தெய்வத்தால் மணி பல்லவம் என்ற தீவிற்குச் சென்று புத்த பாத பீடிகையை வணங்கினாள், அதனால் முற்பிறப்பை யுணர்ந்தாள், அங்குக் கோமுகி யென்னும் பொய்கையில் ஆபுத்திரனால் விடப்பட்டிருந்த அமுதசுரபி யென்னும் பாத்திரத்தைத் தீவதிலகை யென்னும் தெய்வத்தின் வாயிலாகப் பெற்றாள்

மணிமேகலா தெய்வம் அங்குத் தோன்றிக் கற்பித்த மந்திரங்களின் உதவியால் வான் வழியே காவிரிப் பூம்பட்டினத்தை யடைந்து, உலகவறவி யென்னும் இடத்தில் பசித்தோர்க்கு அமுத சுரபியின் மூலம் உணவளித்து வந்தாள் இவளை நெருங்கிக் காதல் கொண்டு உரையாடிக் கொண்டிருந்த, சோழன் மகன் ஒரு கந்தருவனால் இறந்தான் அதனால் சோழன் இவளைச் சிறையிட்டான் அங்கும் சிறையிலிருந்தோர் பசியை அமுதசுரபியால் தணித்து வந்தாள் சோழன் மனைவி இவளுக்குத் தீமை பல செய்தாள் அவளுக்கு இவள் அறிவுரை கூறி, விடுதலைபெற்று, அறவண அடிகள் என்னும் முனிவரின் கட்டளைப்படியே, புண்ணியராச னாகப் பிறந்து அரசாட்சி செய்து கொண்டிருந்த ஆபுத்திரனை அவன் நாட்டிற்குச் சென்று கண்டு, அவன் பழம்பிறப்பை உணர்த்தி, மணி பல்லவத்திற்குச் சென்று, அவன் முற்பிறப்பின் என்புக் கூட்டைக் காட்டினாள் பிறகு வஞ்சிமாநகர் சென்று கண்ணகி கோயிலிற் கண்ணகியை வணங்கினாள் எல்லாச் சமயவாதி களிடமும் சமய நெறிகளைக் கேட்டாள் காஞ்சிநகர் சென்று, அங்கு வந்திருந்த அறவண அடிகளிடம் பௌத்த தருமங் கேட்டுப் பௌத்த நெறியை மேற்கொண்டாள்

சாத்தனார் மணிமேகலையின் கதையைக் கூறுகின்ற முறையிலேயே பௌத்த மதக் கருத்துகளைப் பல வழியாலும் எடுத்துச் சொல்லிப் பௌத்த மதத்தைப்

பெருமைப்படுத்துகின்றார் இத்தன்மை இந்நூலின் சிறப்புப் பண்பாக உள்ளது

நிலையாமையை வற்புறுத்தும் ஆசிரியர் அறத்தினை ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாத் தன்மையினையும் தெளிவுபடுத்தியுள்ளார் (6 . 97-104) சுதமதி மணிமேகலையைத் தொடர்ந்து வந்த உதயகுமாரனுக்குக் கூறுவதாக ஆசிரியர் அமைக்கும் அறிவுரைப் பகுதி (4 : 107-121) திட்ப நுட்பங்களோடு சிறந்து விளங்குகின்றது சோழர் பரம்பரையில் பிறந்த மற்றொரு மன்னன், சிறுவனாக இருந்த காலத்துச் செய்த அரிய நிகழ்ச்சிகளை நினைப்பூட்டி, மன்னன் மகன் நெஞ்சில் நாணம் ஊட்டுவதும், பசுமரத்தாணிபோல் உள்ளத்தில் அமையுமாறு உடல் நிலையாமையை வற்புறுத்துவதும் அறிந்துகொள்ளற்குரியன இவ்வாறே மணிமேகலா தெய்வத்தின் கூற்றாக அமைந்த பகுதி அரசியல் அறிவை விளக்கும் வகையில் இன்பம் ஊட்டுவது

> **"கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்,**
> **கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்;**
> **மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை,**
> **மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்**
> **தன்னுயி ரென்னும் தகுதியின் றாகும்"** *(7 : 8-12)*

என்பது அப்பகுதி

மணிமேகலை உதயகுமாரன் இறந்ததும் சிறை செய்யப் படுகின்றாள் மகனையிழந்த இராசமாதேவி வஞ்சனையால் பல இன்னல்களை மணிமேகலைக்கு விளைவிக்கின்றாள் அவ்வகையில் மணிமேகலையின் பெருமையினை உணர்ந்து 'பொறுத்தருள்க' என்று வேண்டிய அவளை நோக்கி, "சென்ற பிறப்பில் உதயகுமரனாகிய இராகுலனுயிரைத் திட்டிவிடம் உண்டதும் பிரிவினைப்பொறுக்க இயலாத நான், தீயில் பாய்ந்து உயிர் விட்டேன் அப்போது நீ எங்கிருந்து

அழுதாய்? உடலுக்கழுதாயோ; உயிர்க்கு அழுதாயோ; உடலுக்காக அழுதேன் என்று சொல்வாயானால் இறந்த உன் மகனைப் புறங்காட்டில்கொண்டு இட்டவர் யார்? உயிர்க்கு அழுதேன் என்பாயேயானால் அது புகும் புக்கில் தானும் தெரிந்து உணர்தல் அருமையாம் உண்மையில் அந்த உயிர்க்கு நீ அன்புடையவளாயிருந்தால் எல்லா உயிர்க்கும் நீ அன்புடையவளாக இருத்தல் இன்றியமையாதது" என வற்புறுத்தினள் (23: 71-79)

இறந்தவர் பொருட்டு இரங்குதலின் பயனின்மை, உயிர், உடல் ஆகியவற்றின் இயல்பை வேறு வேறுபிரித்துணரும் திறம் ஆகியவை இந்நூலில் அமைந்து கிடக்கின்றன மேலும் இவ்வாசிரியரது புலமை நலமும், கவிதை புனையும் ஆற்றலும் அறிந்து இன்புறுதற்குரியன

உண்மைப் பொருளை யுணர்தற்குத் தருக்க அறிவு இன்றியமையாதது மெய்ப்பொருள் அருளுக என்ற மேகலைக்கு அறவண அடிகள் அருள் புரிந்ததாக இருபத்தொன்பதாவது காதையில் கூறப்படுகின்றது

அறவண அடிகள் மணிமேகலைக்குக் கூறும் நெறியில் சாத்தனார், பௌத்த மதக் கருத்துகளை முப்பதாவது காதையில் கூறியிருக்கின்றார்

தண்டமிழ்ச் சாத்தனார் அறிவாற்றல் அமையச் சீரிய வகையில் மணிமேகலையை யாத்துள்ளார்

தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, குறுந்தொகையில் இறுதி இருபது செய்யுள், சீவக சிந்தாமணி ஆகியவற்றிற்குச் சிறந்த உரையெழுதியவர் குறுந்தொகைக்குப் பேராசிரியர் உரையும் , அவர் எழுதாதுவிட்ட இருபது செய்யுட்கு இவர் எழுதிய உரையும் இப்பொழுது கிடைத்தில சிறந்த பல நூல்களுக்கு உரை எழுதிய பெருமையால் இவரைத் 'தமிழ் மல்லிநாத சூரி ' என்பர் வட மொழியில் பல நூல்கட்கு உரை வரைந்தவர் மல்லிநாத சூரி என்பதை வடமொழி வல்லார் அறிவர்

நச்சினார்க்கினியர், மதுரையில் அந்தண வருணத்தில் பாரத்திரத்தில் பிறந்தவர் இவர் பெயர் சிவபிரானுக்குரிய பெயராகும் "நச்சுவார்க் கினியர் போலும் நாகவீச்சுரவனுரே" (திருநா தேவாரம்), "நச்சினார்க்கினியாய் போற்றி" (காஞ்சிப்புராணம்) என வந்திருத்தல் காண்க இவர் சிவபிரான் பெயரைத் தம்பெயராகக் கொண்டிருத்தலாலும், திருச்சிற்றம்பலம் பெரும்பற்றப்புலியூர் என்ற சிவத்தலங்களின் பெயர்களை ஆறெழுத்து மொழிக்கும் ஏழெழுத்து மொழிக்கும் உதாரணமாகக் காட்டியிருத்தலாலும், தமதுரையில் திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார் முதலியவற்றினின்றும் மேற்கோள் காட்டியிருத்தலா

லும் இவர் சைவ சமயத்தினர் என்பது தெளிவாக விளங்குகின்றது

"தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாளன்"

என உரைப்பாயிரத்துப் பாராட்டப்படுதலுங் காண்க

சைவசமயத்தை சார்ந்த இவர், சமண நூலாகிய சீவக சிந்தாமணிக்கு உரையெழுதி யிருப்பதும், அந்நூலில் வரும் அச்சமய மரபுகளை அம்மதத்தவர் போலத் தெளிந்து விளக்கியிருத்தலும் இவருடைய சமரச மனப் பான்மையை விளக்கும் கண்ணன், 'எழுத்துக்களில் அகர மாகின்றேன் யானே' என்று கூறியவாற்றானும் எனப் பகவத்கீதையின் கருத்தைச் (எழுத்-46) சிறப்பாக எடுத்து விளக்கியிருப்பதும்

திருமுருகாற்றுப்படையுரையில் (106-அடி) பரிமேலழகர் கொள்கையை மறுத்து, 'வசிந்து' என்ப தற்குப் பொருள் கூறியிருத்தலால் இவர், பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த பரிமேலழகர்க்குப் பிற்பட்டவர் என்பது தெளியலாம் இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், ஆளவந்தபிள்ளை ஆசிரியர் அவர் கட்குப் பிற்பட்டவர் என்பதும் தேற்றம்

பொருநராற்றுப்படையில் 141 ஆம் அடிக்குப் பொரு ளெழுதுங்கால், "நாயே பன்றி" என்றுஞ் சூத்திரத்து, 'ஆயுங்காலை' என்பதனாற்குருளை யென்பது முடித்தாம்" என்றிவர் எழுதியிருத்தலாலும், கலித்தொகையில் 39, 127 ஆம் செய்யுள்களின் விளக்க வுரையாலும், சீவக சிந்தாமணி 72, 892 ஆம் செய்யுட் களின் விளக்கவுரையாலும் தொல்காப்பியத் திற்கே முதலில் இவர் உரை எழுதினார் என்று தோன்றுகின்றது தொல்காப்பியம் முழுமைக்கும் இவர் உரையெழுதினவர் ஆவர் பொருளதிகாரப் பிற்பகுதி யாகிய மெய்ப் பாட்டியல், படைந்து, தம்மைக்கடைத் தேற்றும்படி

வேண்டினான் இவர் தாம் பாடும் கைசிகா கானத்தினா லுண்டான புண்ணியத்திற் சிறிது உதவி அவனைப் பாவத்தினின்றும் நீக்கி, வீடுபேறடைவித்தார் அந்த ஏகாதசி அன்று முதல் கைசிக ஏகாதசி அன்று வரை கைசிக ஏகாதசி வழங்குகிறது

இப்பெரியார் திருக்குறுங்குடியிலே திருமாலடி சேர்ந்தார்

**நம்பியாண்டார் நம்பி :**

(11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ) தமிழ் நாட்டு சைவப் பெரியார் சோழ நாட்டில் தென்னாற்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற் கருகிலுள்ள திருநாரை ஊரில் ஆதி சைவர் குலத்தில் பிறந்தார் இவர் தந்தை அங்குள்ள கோயில் கொண்ட பொள்ள பிள்ளையாரை வழிபடுவார்

நம்பியாண்டர் நம்பியின் குழந்தைப் பருவத்தில் இவர் தந்தையார் ஒரு நாள் வெளியூருக்குப் போனபோது பிள்ளையாரை வழிபட இவர் சென்றார் தம் தந்தை கொண்டுவரும் உணவினைப் பிள்ளையார் உண்பது வழக்கமென்றெண்ணியிருந்த இவர், தாம் கொண்டு சென்ற உணவையும் உண்பாரென எதிர்பாத்தார் உண்ணாமலிருப்பதைக் கண்டார்; பன்முறை வேண்டினார் எனினும் பிள்ளையார் உண்ணாமையால் தம் வழிபாட்டிலே தவறிருக்குமென் றெண்ணிக் கல்லிலே தலையை மோதிக்கொண்டிறக்க முயன்றார் உடனே பிள்ளையார் இவரைத் தடுத்துக் தம் துதிக்கையால் உணவை எடுத்தண்டார் தந்தை யுணர்ந்து மகிழ்ந்தார் பொல்லாப் பிள்ளையார் மீது இரட்டை மணிமாலை யொன்று பாடினார்

இவர் அப்பொழுது சோழநாட்டையாண்ட இராசராசசோழன் வேண்டுகோளின்படி, பொல்லாப்

பிள்ளையார் அருளால் மூவர் தோவாரப்பதிக ஏடுகள் சிதம்பரந் திருக்கோயிலில் இருப்பதையறிந்து, அவற்றை யெடுத்துத் திருமுறைகளாக வகுத்தார்

இவர் இயற்றியவை திருநாரையூர் விநாயகர் திருவிரட்டைமணிமாலையும், கோயில் திருப்பண்ணியர் விருத்தமும், திருத்தொண்டர் திருவந்தாதியும், ஆளுடைய பிள்ளையாரான சம்பந்தர் வழிபாடாகத் திருவந்தாதி, திருச்சண்யை விருத்தம், திருமும்மணிக் கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்னும் ஆறு நூல்களும், திருநாவுக்கரசுத் தேவர் திரு ஏகாதசமாலையும் ஆகிய பத்து நூல்களுமாகும்

இவற்றுள் திருத்தொண்டர் திருவந்தாதி என்பது சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகையை ஆதரவாகக் கொண்டு, அக்காலத்தில் வழங்கிய கதைகளை அமைத்துச் சிவனடியாரான அறுபத்து மூன்று நாயன் மார்களின் வரலாற்றையும் சுருக்கிக் கூறுவதாகும் பெரியபுராணம் பாடுவதற்கு இதுவும் திருத்தொண்டத் தொகையும் ஆதரவாக இருந்தன

**நம்பிள்ளை :**

இப்பெரியர் திருவரங்கத்திற்குத் தெற்கேயுள்ள நம்பூர் என்ற ஊரில் அவதரித்தவர் வரதராஜர் என்பது இவருடைய இயற்பெயர் திருக்கலிகன்றிதாசர் என்ற பெயர் ஆசாரியரால் இடப்பட்டது கந்தாடை தோழப்பரால் லோகாசாரியர் என்ற திருப்பெயர் இடப்பட்டது ஆசாரியரான நஞ்சீயர் இவருடைய குணாதிசயங்களைக் கண்டு, 'நம்பிள்ளையோ' என்று தழுவிக் கொண்டார்; அது முதல் நம்பிள்ளை என்ற திருநாமம் வழங்கலாயிற்று தென்சொற் கடந்து வடசொற் கடற்கு எல்லை தேர்ந்தவர் திருவாய் மொழிக்கு நூறு உரு அர்த்தம் நிர்வகித்த தம் ஆசாரியரான நஞ்சீயருக்குச் சதாபிஷேகம் செய்தவர்

**நம்மாழ்வார் :**

*பரதகண்டத்தில் வடகோடியில் அவதரித்த புத்த பகவானைப்போல் தென்கோடியில் அவதரித்துப் பரஞானச் சுடரை வீசிய பெரியார் ஸ்ரீ சட கோபர் என்ற நம்மாழ்வார் இவர் அருளிய ஞானச் செல்வத்தின் பயனாக விளைந்ததே 'ராமானுஜ சித்தாந்தம்' என்று கூறுவர் அதனாலேயே இவரை ஸ்ரீவைஷ்ணவ குலபதி என்றும்,இவருடைய அருளிச்செயல்களைத் தமிழ் மறை என்றும் போற்றுவதும், கோயில்களிலும் இல்லங்களி லும் இவரைத் தொழுகுலமாக வைத்து நித்தமும் வழிபடுவதும் வைணவர்க்கெல்லாம் பொதுக்கடமையா யின இவருடைய ஞானப்பெருக்கு கங்கை நாடுகளிலும் பரவியதாகும்*

*350 ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த 'இந்தி ராமாயண' ஆசிரியர் துளசிதாசர் சடகோபாலரை தலைமையாகக் கொண்ட வைஷ்ணவாச்சாரியாரின் சம்பந்தம் பெற்றவர் பிரம்மாணம் மூலம் தெரிகிறது இக்காலத்து வடநாட்டு மடாதிபதிகளான இந்துக்களில் நூற்றுக் கணக்கானவர்களும் அவ்வாறே வைஷ்ணவஆசாரியத் தொடர்புடையவராயிருக்கின்றனர்*

*இவர் ஆழ்வார்திருநகரி என வழங்கும் திருக்குருகூரில் ஆண்ட சிற்றரசர் குலத்துக் காரியார் என்பவர்க்கு, மலைநாட்டுத் திருவண்பரிசாரம் என்ற தலத் தினரான உடையநங்கையார் என்ற தேவியிடம் புத்பிரராய் அவதரித்தவர் மிக்க இளம்பருவத்தே இறைவனருள் , அவனை நேரே தரிசிக்கப்பெற்றுப் பரமஞானியாய் யோகத்தில் ஆழ்ந்து வேறு உலக சிந்தையற்று இருந்தவர் திருக்கோளூடர் அந்தண முனிவரான மதுரகவிகள் இவர் மகிமைகளை உணர்ந்து, இவரை வழி பட்டுக் பேரருள் பெற்றனர். பரஞான பரமபக்திகளாலும் ஈசனருளாலும் தாம் கண்ட உத்தம தத்துவங்களைத் திருவாய்மொழி, திருவிருத்தம்,*

திருவாசிரியம், பெரியதிருவந்தாதி என்ற நான்கு திவ்யப் பியபந்தங்ககளால் உலகோருய்ய அருளிச் செய்து, இளம் பருவத்தே அவாவற்று வீடு பெற்றருளினார்

இவர் காலம் ஏழு முதல் ஒன்பது வரையுள்ள நூற்றாண்டுகட்கு இடைப்பட்ட காலமெனக் கொள்ளத்தகும் 10 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீமத் நாதமுனிகள் என்ற ஆச்சாரியார் தலைவர் திருவாய் மொழிக்கு இயல்,இசைகள் வகுத்து பிரபலம் பெறச் செய்தனர்

சடகோபாலருக்கு மாறன், பராங்குசன் என்ற வேறு திருநாமங்களும் உண்டு மாறன் என்பது இவர் தந்தை பெயருடன் இணைந்து காரிமாறன் எனவும் வழங்கும் ஆழ்வார்களுள் தலைமையும் பெருமையும் உடையவ ரானதால் நம்மாழ்வார் என்ற திருநாமம் இவருக்கு சிறப்பாக உரியதாயிற்று

இவ்வாழ்வாருடைய அருளிச் செயல்களில் திருவாய்மொழி சிறப்பாக போற்றப்படுவதாகும் இத் திவ்ய பிரபந்தத்துள் இறைநிலை, உயிர் நிலை, உபயநிலை, விரோதி நிலை, புருடார்த்த நிலை என்றஐந்தனுண்மைகளும் கூறப்பட்டுள்ளன இந்த அர்த்தபஞ்சக ஞானமே முத்தியடைவிக்க வல்லது என்பர் சமய நூலோர் இவற்றுள் இறைநிலையில் வேதவேதாந் தங்களால் முடிவாக எடுத்துரைக்கப் பட்ட பரம் பொருள் திருமாலே என்பது இவர் தம் துணிபு அப்பரமான்மா, தன்போல நித்தியமாயுள்ள சித்து (அறிவுடைப்பொருள்), அசித்து (அறிவில் பொருள்) என்ற இரண்டினையும் தன் அவயவங்களாகக் கொண்டு இணைந்து, சிருஷ்டி, திதி இலயங்களை நிகழ்த்திய வண்ணம் எல்லாக் கரணங்களும் தானேயாகி உள்ளது. அது தூலமாய் விரிவும் நிலையே படைப்பு என்றும், சூக்கும மாய்ச் சுருங்கும் நிலையே இலயம் என்றும், இவற்றின் இடைப்பட்டதே காப்பு என்றும் கூறப்படும்

இம்முத் தொழில்களையும் அப் பரமான்மாவே மூவுருவாக நின்று இயற்றுகிறதென்பதும், இச்செயல்கள் எல்லாம் நித்தியமாகப் புரியும் அவன் மாய விளையாட்டுக்களே என்பதும் ஆழ்வார் கொள்கைகள்

பரம்பொருளானது மூலவித்து தேவர், மக்கள் முதலிய சேதனர்களும் பிற அசேதனர்களும் அம்மூல வித்தின் பரிணாமமாக அமைந்தனவே ஆதலால் மக்கள் தகுதிக்கும் பக்குவத்துக்கும் ஏற்பச் சமய பேதங்கள் அமைந்துள்ளன என்றும், அச்சமய தெய்வங்கள் யாவும் மூலப்பரம்பொருளின் திருவுருவங்களே என்றும், அதனால் அவரவர் தத்தம் கடவுளரை வழிபடக் குறையில்லை என்றும், அவ்வழிபாடுகள் யாவும் முடிவில் முதற்கடவுட்கே உரியவாம் என்றும் கூறுவர் இப்பெரியார்

சீவான்மா தன் மாயா பந்தங்களை அகற்றிப் பரமான்மாவை அடைவதற்கு ஆழ்வார் தெளிந்த உத்தமநெறி பிரப்த்தி என்ற மார்க்கமாகும் அஃதாவது, இருவகைப் பற்றுமற்று ஈசனருளையே இடையறாது நினைந்து, தனக்கொரு பாரமுமின்றி அவனொ ருவனையே சரணமடைதலாம் கீதை முடிவில் கண்ண பிரான் அருச்சுனனுக்கு காட்டியருளியதும் உரிய துமான முத்தி வழி இதுவே என்றும், பரமஞானிகட்கும் இது வேண்டத்தக்கது என்றும் ஆழ்வார் தெளிய அருளிச் செய்வர்

இனி, தாமுகந்த பரம்பொருளான திருமால், காத்தற்றொழிலை மேற்கொண்டு உலகோர்க்கு அருள்புரிந்த அற்புத வரலாறுகள் ஆழ்வார் உள்ளத்தைக் பெரிதும் கவர்ந்தன அப்பகவானது அவதார விசேடங்களிலும் திருக்கோயிலிருப்புக்களிலும் ஈடுபட்டு, ஈசனருளால் முத்தி பெற்ற பத்திமான்களெல் லாம், பிரபக்தி நெறி நின்று பேறு பெற்றவர்களே அன்னோரைப் பின்பற்றித் தம் பத்திப் பெருக்கைச் செலுத்துவதற்கு இவ்வாழ்வார் பெரிதும் உவந்தருளிய

அவதாரமூர்த்தி கண்ணபிரானே யாவர் இவ்வாறு கண்ணனைத் தாம் சிறப்பாகப் பற்றுதற்கு, அவன் தம் மனத்துள் நின்றுகொண்டு, தன் காரியமாக எனக்கே ஆட்செய் எக்காலத்தும் என்று இடைவிடாது உணர்த்தி வருதலே காரணம் என்கிறார் இவ்வாழ்வார் இவ்வாறு பகவானுடைய அருண்மழை ஆழ்வாரிடம் தேங்கிய நிலையில், அவனும் இவரும் தாயுங் குழந்தையும் போலவும், உத்தம நாயக நாயகியர் போலவும் ஒரு வரையொருவர், ஆர்வத்தோடு பருகியும், கூடி யனுபவிக்கு நிலையில் தன் வசமற்றும், புகழ்ந்து பாடி ஈடுபட்டு நிற்பர்

பரமனை அடையும் பெரும்பேறு, அவனருளால் கைகூடுவதன்றிக் கேவலம் ஆன்மாவின் முயற்சியால் அடையக்கூடியதன்று என்பதே இவர் திருவுள்ளம் அவனது அருளுக்கு உரியநிலைக்களமாகத் தன்னை ஆக்கிக் கொள்ளுமளவே ஆன்மா செய்யக்கூடியதாகும் இவ்வாறு பகவான் இவருடன் இணைந்த நிலையில் இவர் அருளிச் செய்த பாசுரங்கள் அருமை பெருமை வாய்ந்தவை

ஆழ்வார் தாமருளிய திருவாய்மொழியைத் தாமே பாடிய பிரபந்தமாகக் கூறவும் துணிந்திலர் பகவானே தம் வாக்கின்நின்று கொண்டு தம்மைத்தாமே பாடிய ' இருந்தமிழ்நூல் ' ஆக அதனைக் கூறுகின்றார் இங்ஙனம் எதிர்பாராத இறையருள் தனக்கு வாய்த்தது போலவே, ' இக்கவிபாடும் பரமகவிகளா ' தத்தம் காலத்துள்ள புலவர்களிடமும் அவ்வருள் வெள்ளம் பாயத்தடை யில்லை என்பதே இவர் கருத்து ஆகவே, அப்புலவர் குழாத்தை நோக்கி, 'செஞ்சொற் கவிகாள், உயிர் காத்தாட் செய்ம்மின் ' என்று கூவியழைத்துத் தாம் பெற்ற பேற்றை அவர்க்குக் கூறுவாராயினர்

அகப்பொருட்டுறைகளை இழிவான பொருளா கவே கொண்டு, மக்களைத் தலைவராகப் பாடிவந்த

பழைய புலவர் மரபை மாற்றி, அவற்றை உத்தமமான பகவத்விஷய காமமாக்கிப் பரமனிடம் காதல் பெருகப் பாடும் முறைக்கு வழிகற்பித்தவர்களுள் நம்மாழ்வாரும் ஒருவர் ஆவர் பகவானைத் தலைவனாகவும், சீவான் மாவைத்' தலைவியாகவுங் கொண்டு, அகப்பொருள் நயங்கள் அமைய ஆழ்வார் பாசுரங்கள் பலவும் விளக்குகின்றன

பரம்பொருளான திருமாலை, சாம்ராச்சிய சக்கரவர்த்தியாகக் கொண்டு ஆழ்வார் கூறும் அரிய செய்தியொன்றும் இங்கே குறிப்பிடத் தகும் 'சாம்ராச்சியக்கொள்கை' என்றால், அது ஈசனதேயாயி னும், ஆட்சிக்கேடுகள் உடையதுதானே அம்முறையில் பகவான் ஆட்சியிலும் அமைந்த குறைகள் பல அப்பிராகிருதமான பரலோகத்து ஆன்மாக்களை மாயாபந்தம் அற்றவராகவும், அதனால் அந்தமிலின்ப மான சுதந்தரம் பெற்றவராகவும், செய்து பரமபிராகிருத லோகத்தவரான தேவர்,மனிதர் முதலிய ஆன்மாக்களை மாயைவசப்படுத்திப் பெருந்துயரங்களில் ஆழ்த்து கிறான் இத்தகையை ஆட்சியில் நீதிகளை எடுத்துக் கூறுவாரைப் பல்வகையினும் சோதிக்கிறான் அச்சோத னைக்குத் தளராது நிற்பவரானால், அவர்க்குவீடாகிய பதவியளித்துத் தன் வசப்படுத்தி விடுகிறான் இவை யாவும் அவன் மாய மயக்குக்களே, இம்மயக்கெல்லாம் நீக்கி, ஆன்மாக்களுய்யுமாறு செய்யும் திருவுள்ளம் தம் பெருங்கருணையால் நம்மாழ்வார்க்கு உண்டானது அதை இவர் தம்போன்ற பெத்தான்மாக்களுக்கு உபதேசிக்கலாயினர் மேலே கூறியபடி, பிராகிருத லோகத்தவரை சமய பேதங்களால் பிளவுபடும் படி செய்துவரும் ஈசனது மாயமெல்லாம், தன் தத்துவ நிலையை அறியாமல் உலகோர் மயங்கும்படி வைத்த உபாயங்களே என்றும் , இவ்வுண்மையுணர்ந்து ஆன் மாக்கள் தன்னை ஒருமிக்கப் பற்றுவராயின், நித்திய மாகத்தான் திருவிளை யாடல் புரிதற்கு வகுத்துக்

கொண்ட லீலா விபூதி' யான இவ்வுலகம் யாவும் பாழடைந்துபோம் என்ற கருத்தே அவ்வாறு வேறு படுத்தற்குக் காரணமென்றும், இவற்றை நன்குணர்ந்த அனைவருமே அவனைச் சரணாகதியாகப் பற்ற விரை யுங்கள் என்றும் ஆழ்வார் உபதேசிக்கின்றார்

யாவரும் ஒருங்கு திரண்டு, சரணாகதியான சத்தியாக்கிரத்தைப் பகவானிடம் புரிவோமாயின், அவனது மாய ஆட்சி முறை முற்றும் மாறவும், அதனால் மக்கள் எல்லாம் விடுதலை பெற்ற நித்தியானந்த வாழ்வான சுதந்திரத்தை இம்மையிலே அடைந்துய்யவும் தடையில்லை என்பது நம்மாழ்வாரின் அற்புத உபதேசம் இங்கு அவரருளிய முடிவான பொன்மொழி, 'ஒக்கத் தொழுகிற்றிராகில் ஒன்றுங் கலியுகமில்லையே' என்பது

இவ்வாறே வேதாந்த முடிவுகளான அரிய பெரிய தத்துவங்கள் இவர் அருளிச் செயல்களில் மலிந்து திகழ்வன இவை யாவும், முன்னோர் அருளிய ஈடுமுதலிய பேருரைகளால் அறியத் தக்கவை

**திருவழுந்தூர் :**

இவ்வூர், தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத் துக்கும் மாயவரத்துக்கும் இடையே உள்ளதாகிய தேரழுந்தூர் என்னும் புகைவண்டி நிலையத்தின் தென்கீழ்பால் இரண்டு மைல் தொலைவில் உள்ளது இது பாடல் பெற்ற தலமும், வரலாற்று இயைபுடையதும் ஆகும் அகத்திய முனிவர் தமக்கு நேர்ந்த ஒரு சாபத்தை நீக்கும் பொருட்டு இத்தலத்துக்கு வந்து, சிவபெரு மானைக் கருதித் தவம் புரிந்திருக்க, வான் வழியே ஊர்ந்து சென்ற ஓர் அரசனது தேர், அம்முனிவருக்கு நேரே பறந்த காரணத்தால், நிலத்தில் விழுந்து அழுந்தியமைப்பற்றித் தேரழுந்தூர் என்றாயிற்றெனப் புராணங் கூறும். இதனை, அழுந்தூர் எனவும் வழங்குவர். திருவழுந்தூர் என்பது

தேரழுந்தூர் எனச் சிதைவுற்றிருக்க வேண்டுமென்று அறிஞர்கள் கூறுவர்

சிவன் கோயில் இவ்வூரின் கீழ்பால் உள்ளது மேற்குப் பார்த்த வாயிலையுடையது இக்கோயிலுக்கு மாமடம் என்றும் பெயர் சில முனிவர்களுக்கு வேதம் ஓதுவித்தமையால் இறைவன் திருப்பெயர் ஓதுவித்தார் (அத்தியாபகேசர்) எனப்படும் அம்பிகையின் திருப்பெயர் சவுந்தராம்பிகை தீர்த்தம் வேத தீர்த்தம் வேதங்களும், அகத்தியர் முதலிய முனிவர்களும் ,விண்ணவர்களும், திக்குப்பாலகர்களும் பூசித்துப் பேறுற்றதென்பர் இத்தலம் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடிய தேவாரங்களையுடையது

**திருமால் கோயில் :**

திருமங்கை மன்னன் பாடிய கோயில் இவ்வூர் மேல்பாகம் உள்ளது திருமால் கோயில் கொண்ட (அர்ச்சாவிக்கிரக) கோலங்களில், இங்குள்ளது நின்ற திருக்கோலம் பெருமாள் திருப்பெயர் ஆமருவியப்பன், அம்பிகையின் திருப்பெயர் செங்கமலவல்லித்தாயார் கோயில் கிழக்கு நோக்கியது; கருடவிமானம் என்னும் பெயரினது தீர்த்தம் தரிசனபுஷ்கரிணி

உபரிசிரவசு என்னும் ஓர் அரசனும், தரும தேவதையும் இத்தலத்துப் பெருமானைப் பூசித்துப் பேறுற்றனர் என்பர் காவிரியாறும் பெண் வடிவில் வந்து பூசித்துப் பேறு பெற்றமை தமிழ் நாவலர் சரிதையால் அறியப்படுகின்றது அதற்கு அறிகுறியாகக் காவிரியின் படிமம் ஆமருவியப்பனுக்கு அருகில் உள்ளது

கம்பர் இவ்வூரினரென்பர். கம்பராமாயணம் சிறப்புப்பாயிரத்து (தனியன்) ' ... சோழ நாட்டுத் திருவழுந்தூர்த் தாசிபாடியது' என்னும் தலைப்பில், 'கம்பன் என வருவதாலும், தமிழ் நாவலர் சரிதையில், 'நீ எந்தவூர் என்று சோழன் கேட்டதற்குத் திருவழுந்தூர்த்

தாசிபாடியது' என்னும் தலைப்பில், 'கம்பன் பிறந்தவூர் அழுந்தூர்' எனவரும் தனிப்பாடலாலும் இது தெளிவுறும் ஆமருவியப்பன் திருக்கோயிலுள், கம்பருக்கு ஒரு சிறு கோயில் உண்டு காலஞ்சென்ற செல்வக்கேசவராய முதலியார் தாம் எழுதிய கம்பர் என்ற நூலில் அமைத்திருப்பதும் இப்படிமமே இவ்வுருவுடன் இணைந்துள்ள ஒரு பெண் படிமமும் இங்க உண்டு இது, அவர் தம் காதற்கரிய திருவொற்றியூர் வள்ளி என்பாளது திருவுருவம் ஆகும் என்று தமிழ் நாவலர் சரிதைப் (80,81,84) பாடல்களால் ஊகிக்கப்படுகிறது இது தவிர, இவ்வூரில் கம்பர் மேடு என வழங்கும் ஓர் இடமும் உண்டு இது கம்பர் தங்கி வாழ்ந்திருந்த இடம் என்கின்றனர்

**வரலாறு :**

உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி என்னும் சோழன் இவ் அழுந்தூர் வேளின் மகளை மணம் புரிந்துகொண்டவனென்பது, தொல்காப்பியம் அகத்திணையியல் 30 ஆம் நூற்பாவில், நச்சினார்கினியர் உரையால் அறியலாகிறது

சோழன் கரிகாற் பெருவளத்தான் இவ் இளஞ்சேட் சென்னியின் புதல்வனாவான் "உருவப் பஃறேர் இளையோன் சிறுவன் " எனப் பொருநர் ஆற்றுப்படை (130) கூறும் இவன், தஞ்சை நீடாமங்கலத்துக்கு அருகில் உள்ளதாகிய வெண்ணி யென்னும் ஊர்ப்புறத்து நேர்ந்த பெரும்போர் ஒன்றில், ஏனை இருபெரு வேந்தரோடு, பதினொரு குறுநிலமன்னவரையும் புறங்கண்டு வென்றான், அவ்வெற்றியைப் பாராட்டித் திருவழுந்தூரினர் (அவன் மாமன் முதலோர்) ஒரு பெருங்கொண்டாட்டம் கொண்டாடினர் என்றும், அதன் பெரிய ஆரவாரம் வெகுதூரம் பரவிய தென்றும், அக நானூறு 246 ஆம் செய்யுள் கூறுகிறது

**கல்வெட்டு :**

இவ்வூர்ச் சிவன் கோயிற் கல்வெட்டுக்கள் 'மூன்றாங்குலோத்துங்கன் காலத்தவை' என்றும், செயங்கொண்ட சோழவளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் திருவழுந்தூர் திருமடம் உடைய நாயனார்' என வருவதால் நாட்டின் பெயரும் கோயிலின் பெயரும் (சம்பந்தர் தேவாரம் குறிப்பது) பிறவும் அறியலாகும்

**திருவாய்மொழி :**

நம்மாழ்வாரால் அருளிச் செய்யப்பட்ட பிரபந்தங்கள் நான்கனுள் இறுதிப் பிரபந்தமாகும் வாய்மொழி என்பதற்கு, வேதம் என்பது பொருள் திரு என்பது இதனுடைய ஒப்புயர்வற்ற சிறப்பினை விளக்க வந்த அடைமொழி 'மாயா வாய்மொழி உரைதர வலந்து' (பரிபாடல்) என்ற இடத்து வாய்மொழி என்ற சொல் மறை என்ற பொருளைப் பயந்து நிற்றலைக் காணலாம்

தமிழ் கூறும் நல்லுலகத்து வழக்கிலும் செய்யுளிலும் இலைமறைகாய்போல் மறைந்து கிடக்கும் வேதாந்த விழுப்பொருளாகிய தத்துவங்களை எல்லாம் குன்றின்மேல் இட்ட விளக்கைப்போன்று எல்லாரும் அறியத் தெளியக் கூறுவது திருவாய்மொழி தத்து வப்பொருள்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயந்திரிபற உணர்த்துவதனால், தோன்றா உபநிடதப் பொருள் தோன்றலுற்றார் தமக்கும் சான்றாக இருப்பது; மாமறையுள் அயிர்த்தார் அயிர்த்த பொருள்களை எல்லாம் வெளியாக்குவது; இராமாநுசரால் மொய்ம் பால் வளர்க்கப்பட்டது 'பழுதிலா ஒழுகலாற்றுப் பல சதுப்பேதிமார்காள் இழிகுலத்தவர் களேனும் எம் அடியார்களாகில் தொழுமின், நீர் கொடுமின், கொள்மின் என்று நின்னொடும் ஒக்க வழிபட அருளி னாய்' என்னும் மறையின் பொருளை அநுஷ்டான பர்யந்தமாக்கியது; பிள்ளை லோகாசா ரியர் அருளிச்

செய்த சித்தாந்த சாஸ்திரங்கள் (இரஹஸ் யங்கள்) 18க்கும் மூலமாக இருப்பது; இதில் உள்ள பத்துப்பத்துக்களும், ஆயிரம் திருபாசுரங்களும், இறை வன் உயிர்களை அளிப்பான் எடுத்த பத்து அவதாரங் களையும், அவனுடைய ஆயிரம் திருப்பெயர்களையும் நினைவூட்டுவன;

சித்தர்க்கும், வேதச்சிரம் தெரிந்தோர் கட்கும், செய்தவர்க்கும், சுத்தர்க்கும், தொண்டு செய்யும் பக்தர்க்கும், ஞானப்பகவர்க்கும், பண்டு சென்ற முத்தர்க்கும் இன்னமுதமாய், ஆயிர மாமறைக்கும் அலங்காரமாய், அருந்தமிழ்க்குப் பாயிர மாய், நாற்கவிக்கும் படிச்சந்தமாய்ப் பனுவற்கெல்லாம் தாயாய் இரு நால் திசைக்குத் தனிக்தீபமாய், படித்தாரை உயிர் உருக்கி, உணர்வுருக்கி, உடலுருக்கி, உடலத்தினுள்ள செயிர் உருக்கொண்ட நம் தீங்கை எல்லாம் உருக்கி, முகில் வண்ண வானத்து மாயப்பிரான் அடியார்கள் குழாங் களோடு உடன்கூட்டிப் பேரின்ப வெள்ளத்து இருக்கச் செய்வது; இதனை ‘மோக்கமாலை’ என்றும், ‘தெய்வக்கவி’ என்றும் பெருமக்கள் கூறுவர்

இறைவன்நிலை, உயிர்நிலை, உயிர் இறைவனை அடைதற்குரிய வழியின்நிலை, அவ்வழியிற் செல்லும் போது உண்டாகும் தடைகளின்நிலை, தடைகளை நீக்கி இறைவனை அடைந்த பின்னர்ப் பெரும் பேற்றின் நிலை என்னும் இவ் வைந்து பொருள்களும் இத்தருவாய் மொழியிற் கூறப்படுகின்றன

உயர்வற, திண்ணன்வீடு, அணைவது, ஒன்றும் தேவும் என்னும் இந்நான்கு திருப்பதிகங்களும் இறைவன் நிலைகளையும்; பயிலும் சுடர்ஒளி, ஏந்நாளும் இறையோ னும், கண்கள் சிவந்து, கருமாணிக்கம் என்னும் இந்நான்கு திருப்பதிகங்களும் உயிரின் நிலையினையும்; நோற்ற நோன்பு, ஆராவமுதே, மானேய்நோக்கு, பிறந்தவாறும் என்னும் இந்நான்கு திருப்பதிகங்களும் இறைவனை

அடைதற்குரிய வழியின் நிலையினையும்; எம்மாவீடு, ஒழிவில்காலம், நெடுமாற்கு அடிமை, வேய்மரு தோளிணை என்னும் இந்நான்கு திருப்பதிகங்களும் தடைகளின் நிலையினையும் கூறுவனவாம் மற்றை எண்பது திருப்பதிகங்களும் இவ் வைந்து பொருள் களையும் விரித்துக் கூறுகின்றன இவற்றுள் முக்கிய நோக்கம் வீடாகிய பேறு மற்றைய நான்கு பொருள் களும் அதன் பொருட்டுக் கூறப்படுகின்றன

இனி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் மூன்று பிரபந்தங்களில், தனி மந்திரங்கள் மூன்றனுள், திருமந்திரம், சரமச்லோகம் என்னும் இரண்டு மந்திரங்களின் பொருள்களை அருளிச்செய்து, இறுதிப் பிரபந்தமாகிய இத்திருவாய் மொழியில், மந்திர ரித்தினமாகிய துவயத்தின் பொருளை அருளிச்செய்கிறார் என்றும் கூறுவர் பெரியோர்

'ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் பிரபத்யே, ஸ்ரீமதே நாராயணாயநம:' என்னும் மந்திர ரத்தின மாகிய துவயத்தின் பின் வாக்கியத்தின் பொருளைத் திருவாய்மொழியின் முதன் மூன்று திருப்பதிகங்க ளாலும், முன் வாக்கியத்தின் பொருளை அதற்குமேல் மூன்று மூன்று திருப்பதிகங்களால் உபாயத்திற்குத் தகுதியாக இறைவனுடைய குணங்களை யும், ஆன்மாவிலும் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் தமக்கு நசை அற்ற படியையும், அவனோடு தமக்குண்டான நிருபாதிக சம்பந்தத்தையும் அருளிச்செய்து, பத்தாவது திருப்பதிகத்தால் தாம் வேண்டினபடியே, ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்டு திருமோகூர் என்னும் திவ்விய தேசத்திலே தங்கு வேட்டையாக வந்து தங்கி, இவர்க்கு அர்ச்சிராதி கதியையும் காட்டிக்கொடுத்து, இவர் வேண்டிக் கொண்டபடியே 'என் அவா அறச் சூழ்ந்தாயே' என்று இவர்தம் திருவாயாலே அருளிச்செய்யும்படி பேற்றினை அளித்தபடியை அருளைச்செய்திருத்தல் இங்ஙனம்

அருளிச்செய்திருக்கும் அழகு வேறு எந்த நூலிலும் காண்பது அரிது இத்தமிழ் மறைக்கே உரிய தனிச்சிறப்பாகும் இது

தத்துவஞானத்தின் சிகரமாய் விளங்கும் இந்நூலில், அகப்பொருள் சம்பந்தமாய் அமைந்த பாசுரங்கட்குக் கருத்து என் எனின், இறைவனுக்கும் உயிர்கட்கும் உள்ள சம்பந்தத்தைத் தெரிவிப்பதேயாகும் இப் பாசுரங்களில் கூறப்படும் கல்வியாவது, இறைவனை நேரில் கண்டாற்போன்று அறிவினால் கண்டு அனுபவித்தல், பிரிவாவது, புறக்கண்களால் காணவேண்டும் விரும்பி, அது பெறாமையாலே மனத்தின் அனுபவத்துக்கு வந்த கலக்கம் ஆயின், பேரருட் கடலாகிய இறைவன், இவர் அனுபவத்தை முடிய நடத்தாதே இவ்வனுபவத்தைப் பிரித்ததற்குக் கருத்து என் எனின், திருவயோத்தியிலும் கிருஷ்ணாவதாரத்தில் திருக்குரவையிலும் பிரிந்த பிரிவுபோன்று, இவர்க்கு அனுபவிப்பித்த குணங்களைப் பொறுப்பித்தலும் மேன்மேல் என் வேட்கை பிறப்பித்த லும் ஆம் இப்படியுள்ள கலவியாலும் பிரிவாலும் ஆழ்வார்க்கு வந்த நிலையே அந்யாபதேசப் பேச்சால் அகப்பொருள் துறைப் பாசுரங்களாக அமைந்தன 'சேர்ப்பாரைப் பட்சிகளாக்கி ஞானகர்மங்களைச் சிறகு என்று குரு ஸப்ரம்ஹசாரி புத்ர சிஷ்ய ஸ்தாநே பேசும்' என்றார் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்

இந்நூலுக்கு ஐந்து வியாக்கியானங்கள் உள்ளன அவற்றுள், நம்பிள்ளை அருளிச்செய்ய, வடக்குத் திருவீதிப் பிள்ளை எழுதிய 'ஈடுமுப்பத்தாறாயிரப்படி' என்னும் வியாக்கியானமே மிகமிக உயர்ந்தது இவற்றை 'பகவத்விஷயம்' என்று வழங்குதல் மரபு பகவானைப் பற்றிய விஷயம் என்பது பொருள்

**திருவாய்மொழிப்பிள்ளை**

பாண்டிய நாட்டில் குந்தி என்ற நகரத்தில் வைகாசி விசாக நட்சத்திரத்தில் அவதரித்தவர் திருமலை யாழ்வார் என்பது இவருடைய இயற்பெயர் திருவாய்

மொழியினிடத்தில் இவருக்குள்ள பற்றினால் திருவாய் மொழிப் பிள்ளை என வழங்கப்பட்டார் பிள்ளை லோகாசாரியரிடம் பஞ்ச சமஸ்காரம் பெற்றவர் ஈடு முதலிய வியாக்கியானங்களையும், ஸ்ரீ பாஷ்ய சுருதப் பிரகாசிகைகளையும், ஆசார்யஹிருதய தத்துவத்திரயம் முதலிய ரகஸ்யங்களையும், முறையே, நாலூர் ஆச்சான் பிள்ளை, அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், கூரகுலோத்தம தாசர் இவர்களிடம் காலக்ஷேபம் கேட்டவர் கலகங்காரணமாக வெளியேயிருந்த நம்மாழ்வார் விக்கிரகத்தை மீண்டும் கொண்டு வந்து ஸ்தாபித்துக் கோயிலையும் அவ்வூரையும் புதுப்பித்தவர் ஆழ்வார்திருநகரியில் வாழ்ந்து வந்தவர் மணவாள முனிகட்கு ஆசாரியர்

**மாறனலங்காரம் :**

தமிழில் அணியிலக்கணத்தைத் தனியே எடுத்து விளக்கும் நூல்களில் தண்டியலங்காரத்துக்கு அடுத்துச் சிறந்த நூல் மாறனலங்காரம் இது நேரே வடமொழி நூல்களைத் தழுவி எழுந்ததன்று தமிழ்த் தண்டியலங் காரத்தையும், தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்களையும் தழுவி, வழி நூலாகத் தோன்றியது.

இதன் ஆசிரியர் ஆழ்வார் திருநகரித் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் காலம் 16ஆம் நூற்றாண்டின் பிற் பகுதி மாறன் என்பது நம்மாழ்வாரின் ஒரு பெயர் இந்நூலிற் காட்டப் பெற்ற பல உதாரணப் பாக்கள் நம்மாழ்வாரைப் பொருளாகக் கொண்டு இந்நூலாசிரிய ரால் இயற்றப்பட்டவை அவ்வாழ்வார் மீது கொண்ட ஆராத அன்பினால் மாறனலங்காரம் எனப் பெயர் தந்தார் தண்டியலங்காரம் போல இலக்கண விதிகளை யும் அவற்றை விளக்கும் உதாரணங்களையும் பெரும்பா லும் ஆசிரியரே இயற்றியிருக்கிறார்

நூலைத் தொடங்குமுன், நன்னூலார் கூறியிருப்பது போலப் பொதுப்பாயிர, சிறப்புப்பாயிர இலக்கணங்கள் கூறப்படுகின்றன இந்நூல், பொதுவியல், பொருளணி

யியல், சொல்லணியியல், எச்சவியல் என்ற நான்கு இயல்களைக் கொண்டது

இவற்றுள், பொதுவியலில், செய்யுளியல்பு, காப்பிய இலக்கணம், செய்யுள் நடை முதலிய பொதுச் செய்திகள் தண்டியலங்காரத்தினும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன பொருளணியியல், தன்மையணி முதல் பாவிகம் ஈறாக 64 அணிகளை விளக்குகிறது தண்டியலங்காரம் 35 அணிகளே கூறுகிறது சொல் லிலக்கண, பொருளிலக் கணச் செய்திகள் சிலவற்றை எடுத்துப் பூட்டுவில், இறைச்சிப் பொருள், பொருண்மொழி என்ற தனித் தனி அணிகளாக இவ்வாசிரியர் கூறியிருக்கிறார் மற்ற அணியிலக்கண ஆசிரியர்கள் இவற்றை அணிகளாகக் கூறவில்லை இலக்கியங்களிற் கண்ட சில பொருள் நயங்களை அடிப்படையாகக் கொண்டு வகை முதலடுக்கு, இணையெதுகை, உபாயம், புகழ்வதினி கழ்தல் முதலிய அணிகளைப் புதியனவாகச் சேர்த்திருக் கிறார் இது நேரே வடமொழி நூல்களைத் தழுவி எழுந்ததன்று தமிழ்த் தண்டியலங்காரத்தையும், தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்களையும் தழுவி, வழி நூலாகத் தோன்றியது

இதன் ஆசிரியர் ஆழ்வார் திருநகரித் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் காலம் 16ஆம் நூற்றாண்டின் பிற் பகுதி மாறன் என்பது நம்மாழ்வாரின் ஒரு பெயர் இநநூலிற் காட்டப் பெற்ற பல உதாரணப் பாக்கள் நம்மாழ்வாரைப் பொருளாகக் கொண்டு இந்நூலாசிரி யரால் இயற்றப்பட்டவை அவ்வாழ்வார் மீது கொண்ட ஆராத அதன்பினால் மாறனலங்காரம எனப் பெயர் தந்தார் தண்டியலங்காரம் போல இலக்கண விதிகளை யும் அவற்றை விளக்கும் உதாரணங்களையும் பெரும்பா லும் ஆசிரியரே இயற்றியிருக்கிறார்

நூலைத் தொடங்குமுன், நன்னூலார் கூறியிருப்பது போலப் பொதுப்பாயிர, சிறப்புப்பாயிர இலக்கணங்கள் கூறப்படுகின்றன இந்நூல், பொதுவியல், பொருளணி

யியல், சொல்லணியியல், எச்சவியல் என்ற நான்கு இயல்களைக் கொண்டது

இவற்றுள், பொதுவியலில், செய்யுளியல்பு, காப்பிய இலக்கணம், செய்யுள் நடை முதலிய பொதுப் செய்திகள் தண்டியலங்காரத்தினும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன பொருளணியியல், தன்மையணி முதல் பாவிகம் ஈறாக 64 அணிகளை விளக்குகிறது தண்டிலங்காலரம் 35 அணிகளே கூறுகிறது சொல்லிலக்கண, பொருளிலக்கணச் செய்திகள் சிலவற்றை எடுத்துப் பூட்டுவில், இறைச்சிப் பொருள், பொருண்மொழி என்ற தனித் தனி அணிகளாக இவ்வாசிரியர் கூறியிருக்கிறார் மற்ற அணியிலக்கண ஆசிரியர்கள் இவற்றை அணிகளாகக் கூறவில்லை இலக்கியங்களிற் கண்ட சில பொருள் நயங்களை அடிப்படையாகக் கொண்டு வகைமுதலடுக்கு, இணையெதுகை, உபாயம், புகழ்வதினிகழ்தல் முதலிய அணிகளைப் புதியனவாகச் சேர்த்திருக்கிறார்

சொல்லணியியலில் மடக்கணியின் வகையும், 32 சித்திர கவிகளும் கூறியுள்ளார் அணியிலக்கணம் அவ்வவ்வாசிரியர் கொண்ட கொள்கைக்கேற்ப மேன் மேலும் பெருகி வந்திருப்பதற்கு மாறனலங்காரம் ஒரு நல்ல சான்று

இறுதியில் உள்ள எச்சவியல் மிகச் சிறியது இது செய்யுளில் நிகழும் சில குற்றங்கள், மலைவுகள் முதலியவைகளைக் கூறுகிறது தண்டியலங்காரத்தில் இவை சொல்லணியியலிலேயே கூறப்படுகின்றன

பாயிரம் உட்பட 327 நூற்பாக்களைக் கொண்டது இந்நூல் இதற்குத் திருப்போரை காரி ரத்தினக்கவிராயர் எழுதிய சிறந்த விரிவுரை ஒன்று உண்டு உரையாசிரியர் நூலாசிரியரின் மாணவர் இருவரும் சிறந்த வைணவர் மாணவரே உரையெழுதியதால், நூலைப் பற்றி உரையிற் கூறும் கருத்துகளை நூலாசிரியர் கருத்துகளாகவே மதிக்கலாம்

## முத்தமிழ்

## தொன்னூல் விளக்கம்

இது பழைய இலக்கணங்களை விளக்கமாகக் கூறும் ஓர் இலக்கண நூல் இதனை இயற்றியவர் இத்தாலியிற் பிறந்து, தமிழ் நாட்டிற்கு 1708-ல் வந்தவராகிய வீரமாமுனிவர் தமிழ் பயின்றபின், கிறிஸ்தவ சமயச் சார்பான தேம்பாவணி முதலிய பல இலக்கிய நூல்களை இயற்றினார் பின்னர், இத்தொன் னூல் விளக்கத்தை எழுதினார்; எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியாகிய ஐந்திலக்கணங்களும் இந்நூலுள் அமைந்திருத்தலால், இந்நூலுக்கு 'ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம்' எனப் பெயரிட்டனர்

இந்நூலுக் குரிய தெளிவான உரையையும் பல விளக்கமான எடுத்துக் காட்டுகளுடன் இந்நூலாசிரியரே வரைந்துள்ளனர் இவர், அகத்தியம்,தொல்காப்பியம், வீரசோழியம், நன்னூல், யாப்பருங்கலம், வெண்பா மாலை, தண்டியலங்காரம், இலக்கண விளக்கம், இலக்கணக்கொத்து,பிரயோக விவேகம், முத்துவீரியம் முதலிய இலக்கணங்களையும், சங்க நூல்கள், சிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய இலக்கியங்களையும் செம்மையாகப் பயின்றவர் என்பது தெரிகிறது இவர் வடமொழி இலக்கணங்களைச் சிற்சில இடங்களில் ஒப்புமை காட்டிச் செல்வதனால், இவர் வடமொழி யையும் தெளிவுடன் பயின்றவராகக் காணப்படுகின்றார்

ஐந்திலக்கணங்களையும் ஒருங்கே கூறுவன தொல்காப்பியம், வீரசோழியம்,இலக்கண விளக்கம், முத்து வீரியம் ஆகிய நான்கு நூல்கள் இவற்றுள் தொல்காப்பிய 1610 சூத்திரங்களையுடைய, மிகவும் விரிந்த நூலாகும் வீரசோழியம், வடமொழி இலக்கணத்தை ஒப்புமை காட்டிச்செல்லும் ஒரு சுருங்கிய நூல் இலக்கண விளக்கம், பண்டைய இலக்கண நூற்பாக்களைச் சிற்சில இடங்களில் எடுத்துக்கொண்டு, 941 சூத்திரங்களையுடையதாயுள்ள பரந்த நூலாகும்

முத்துவீரியம், 1283 சூத்திரங்களைக் கொண்ட, பழைய இலக்கணங்களின் வழியே செல்வதான ஒரு விரிந்த நூல் வீரமா முனிவர், ‘பழையன கழிதலும் புதியன புகுதலும் புலமையின் மிக்கோர் விதி’ (சூ 370) என அமைத்துக் கொண்டு, ஐந்திலக்கண நூல்களுள் வேண்டாத பல நீக்கியும், இக்காலத்திற்கேற்றவாறு வேண்டிய சில புதிய கருத்துகளைச் சேர்த்தும் சுருக்கமாக 370 சூத்திரங் களால் இந்நூலை முடித்துள்ளனர்

பிற இலக்கண நூல்களுள் நூற்பாவின் அடிகள் மிக்கிருக்கும் இந்நூலிலுள்ள நூற்பாவின் அடிகள் சுருங்கியனவாகவும், பொருள் எளிதில் விளங்கும்படி தெளிவாகவும் இருக்கும் எழுத்ததிகாரம் 3 இயலாக்கப் பட்டு, 40 நூற்பாவினாலும், சொல்லதிகாரம் 12 இயலாக் கப்பட்டு, 102 நூற்பாவினாலும், பொருளதிகாரம் 13 இயலாக்கப்பட்டு, 52 நூற்பாவினாலும் யாப்பதிகாரம் 3 இயலாக்கப்பட்டு, 100 நூற்பாவினாலும் அணியதிகாரம் 6 இயலாக்கப்பட்டு, 70 நூற்பாவினாலும் ஆக்கி இத் தொன்னூல் விளக்கம் முடிந்துள்ளது

இந்நூலிலுள்ள 370 நூற்பாவினுள், நன்னூலுக் குரிய 38 நூற்பாவினைச் சிதையாமல் அப்படியே எடுத்து அமைத்துக் கொண்டார் சில விடங்களில் நன்னூற்பாக்களின் வடிவத்தைச் சிறிது மாற்றி அமைத்துள்ளார் இவ்வாறே, நம்பி அகப்பொருளி

லிருந்து 6 நூற்பாவினையும், இலக்கண விளக்கத்தி லிருந்து 2 நூற்பாவினையும், முத்து வீரியத்திலிருந்து 2 நூற்பாவினையும், முத்து வீரியத்திலிருந்து 2 நூற்பா வினையும் எடுத்துக்கொண்டார் இன்னும், தண்டி முதலிய நூற்களிலுள்ள நூற்பாக்களிலிருந்து சில அடிகளையும் சொற்றொடர்களையும்எடுத்தமைத்துக் கொண்டுள்ளார்

ஒவ்வோர் அதிகாரத்தின் இறுதிச் சூத்திரங்களுள் அவ்வதிகாரங்களில் இன்னின்ன பொருளைக் கூறியுள் ளேன் என்றுஇவர் சுருக்கிக் கூறியுள்ளார் ஒவ்வோர் அதிகாரத்தின் முதலிலும் பொதுக் கடவுள் வணக்கம் அமைத்திருக்கிறார் தாமியற்றியுள்ள தேம்பாவணி முதலிய நூற்களிலிருந்து சிலவற்றை, இலக்கண விதிகளுக்கு மேற்கோளாக எடுத்தாண்டுள் ளார் பல நூற்பாக்களின் தலைப்பில், அந்தந்த நூற்பாவி லுள்ள இலக்கணப் பெயரை ஆங்கில மொழியிலும் குறிப்பிட் டிருக்கின்றார் இனி, இவர் ஒவ்வோரதி காரத்திலும் புதுமையாகக் கூறியுள்ளன வற்றுள் ஒரு சிலவும் பிறவும் காண்போம்

எழுத்ததிகாரம்

மெய்யெழுத்துக்கள் புள்ளி பெறுவனபோன்று, எகர ஒகரத்திற்கும் பண்டைக் காலத்தில் புள்ளியுண்டு தொல்காப்பியரும், 'மெய்யினி யற்கை புள்ளியோடு நிலையல்' 'எகர ஒகரத்து இயற்கையு மற்றே' என்றார் இக்கருத்தை நன்னூலாரும் முத்து வீரியரும் தழுவினர் எகர ஒகரமாகிய உயிர்க்குற்றெழுத் திற்கும் மெய்யெழுத்திற்கும் வரும் புள்ளியின் வேறு பாட்டைக் காட்டுவதற்காக இவர், குற்றெழுத்திற்கு நீட்டல் புள்ளியை வைக்க வேண்டுமென்றும், மெய் யெழுத்திற்குச் சுழித்தல் புள்ளியை வைக்க வேண்டு மென்றும் புதுமையாக அமைத்துக் கொண்டு 'நீட்டல் சுழித்தல் மெய்க்கிருபுள்ளி' (சூ 12) என்று முறை

நிரணிரையாகக் கூறி, எனவும் மேற்கோள் காட்டி யுள்ளார்

நன்னூலார், 'தோன்றல், திரிதல், கெடுதல் விகாரம் மூன்றும் மொழி மூவிடத்துமாகும்' என்று விகாரத்தை மூன்று வகைப்படுத்தினர் முனிவர், 'திரிபு, அழிவு, ஆக்கம், திரட்டு நால்விகாரம்' (சூ 21) என்று திரட்டு விகாரம் ஒன்றையும் வட நூல் கருத்தைத் தழுவிச் சேர்த்துக்கொண்டார்; இங்கே வடமொழிப் புலமையைக் காட்டுவதற்காகத் 'திரிதல் = ஆதேசம், கெடுதல் = உலோபம்; மிகுதல் = ஆகமம்; கலத்தல் = சங்கீரணம் என வடநூலார் கூறுவர்' எனக் காட்டி யுள்ளார், தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தியாக வருவனவே திரட்டு-கலத்தல்-சங்கீரணம் எனப்படும் நன்னூலார், 'இடையுரி வடசொலின் இயம்பிய கொளாதவும் உணர்தல் யாவர்க்கும் நெறியே' என்றார் இங்கே வடசொலின் என்ற நன்னூலார் கருத்தையும், முத்துவீரியம் மொழியியலுள்ள 26 ஆம் நூற்பா முதல் 44 ஆம் நூற்பாவரைக் கூறியுள்ள கருத்துகளையும் தழுவி,

> **"இருமொழி ஒருமொழியெனச் சங்கீர்தமாய்**
> **நிலைமொழி யீற்றுயிர் நீங்கலும், அதனோடு**
> **அணைமொழி முதற்கண், அ ஆ ஆதலும், இ ஈ ஏ ஆதலும்**
> **உ ஊ ஆதலுமாம்"**

என மூன்று சந்திகளுக்கும் சுருக்கமாக ஒரு சூத்திரத்தை அமைத்துக் காட்டினர் முனிவர் ; இன்னும், 'சிவனைப் பணிவோன் சைவன் எனத் தனிமொழியில் முதலெழுத்துத்திரிவது ஆதிவிருத்திசந்தி எனக் கொள்க' என உரையில் காட்டியுள்ளார் இவர் கூறும் எழுத்ததி காரம் சுருங்கிய நூலாகையால் இவர் கூறாது விடுத்த புணர்ச்சி விதிகளுக்கு இவ்திகார இறுதிச் சூத்திரத்தின் உரையில், நன்னூலிலிருந்து 38 சூத்திரங்களை மேற்கோளாக எடுத்தாண்டு இவ்திகாரத்தை முடித்துக் கொள்ளுகின்றார்

**சொல்லதிகாரம் :**

ஆகுபெயர், தொல்காப்பியத்தில் 12 என்றும் காண்கின்றோம் முனிவர் முதல், சினை,கருவி, காரியம், பண்பாகிய ஐந்தாகுபெயர்களைச் சிறப்பாகக் கொள்ளுகின்றனர் (சூ49) மேலும், இதன் உரையில் 'சில நூலாசிரியர் ஆகுபெயர் பன்னிரண்டும் பிறவுமா மென்றுங் கூறுவர்' என்பதனையும் வரைந்து, இவற்றிற்கும்மேற்கோள் தந்துள்ளார் ஆகுபெயருக்குக் காரணம் கூறும்போது, காரணங்காட்டாது, 'அதன் பயன் கொள்ளுவது ஆகுபெயர்' (சூ54) என்கின்றார், ஒன்று முதல் எட்டு வேற்றுமைகளைக் கூறும்போது, ஒவ்வொரு சூத்திரத்தின் இறுதியில்,இவ்வேற்றுமைகளை முறையே, 'கருத்தா, கர்மம், கரணம், சம்பிரதானம், அபாதானம், சேஷார்த்தம், அதிகரணம், சம்யோதனம் என வட நூலார் கூறுவர்' என்று வட நூலுடன் ஒப்பிட்டுக் காட்டுடிகின்றார்

வீரசோழியம், பிரயோக விவேகம், முத்துவீரியம் ஆகிய இலக்கண நூல்களில் கூறியுள்ள வடநூல் இலக்கணக் கருத்துகளைத் தழுவித் தமிழ் நூல்களில் வந்து வழங்கும் வடசொற்களுக்கு விதிகளையும் (சூ86) கூறுகின்றார் இவ்வாறு கூறும் இச்சூத்திரத்தில் "இன்னாருக்கு மகன் இவன் என்னும்போது, 'ஏயன்' என்னும் பிரத்தியயம் - விகுதி புணர்ந்து, கார்த்திகையின் மகன் என்பது, 'கார்த்திகேயன் 'என்றாகும்" என்பது போன்ற பல வடசொல் மேற்கோளைக் காட்டித் தெளிவுபடுத்தி விளக்குகின்றார் மேலும், பிர, அப, அபி, பபி, அப முதலிய 18 உபசர்க்கங்களைச் சொற்களில் அமைத்துக் காட்டும் பான்மை சிறந்த பயனுள்ளதாகத் தோன்றுகிறது

எதிர்மறையைக் காட்டும் பகுபதத்தில், வருமொழி முதலில் உயிரானால், நிலைமொழியாக,'அன்' **என்னும்** எதிர்மறைச் சொல் வரும் என்பது முனிவர் கருத்து "எதிர்மறைப் பகுபதத்தியைந்த மொழி முதல்

உயிரெனில் அன்னும் வடநடையே" (சூ 87) என்று கூறி, அனங்கன் அங்கமிலான் என்று காட்டுகின்றார், 'அன்' என்பதிலுள்ள னகர மெய் (சிறப்பு னகரம்) தமிழுக்கே உரியது வடமொழியில் இவ்வெழுத்துஇல்லை வடமொழியில் எதிர்மறையைக் காட்டுவது 'ந' என்பதே இந்த நகரத்திற்கப் பின்னர் மெய்வரின் (ந + மலன்) நகரத்தின் மெய் கெட்டு 'அமலன்' என்று புணரும்; உயிர் வரின் (ந + அங்கன்) நகரத்தின் மேலுள்ள (ந் + அ) அகர உயிர் முன்னாக வந்த (அ + ந்) 'அகங்கன் ' என்றாகும் என்பதே வடநூலார் கொள்கை, இக்கொள்கையைத் தழுவியே,நேமிநாதரும்,

> "நேர்ந்த மொழிப் பொருளை நீக்க வருநகரம்
> சார்ந்ததுதான் ஆவியேல் தன்னனாவி முன்னாகும்"

(நேமி 11)

என்று கூறியுள்ளார் இப்புணர்ச்சி விதியைச் சிறிது மாற்றிக் கொண்ட சுவாமிநாத தேசிகரும்,

> "அ, அந் . . . . . . மறையினுள் ஒன்றாகும்"

(இலக்கணக்கொத்து 100)

என்று அகரமெடுத்த தந்நகரமெய்யைக் கூறி, 'அநங்கன்' என்று மேற்கோள் காட்டினார் இங்கே, முனிவர் தமிழுக்கே சிறப்பாகவுள்ள னகரமெய்யைக்வறி வடநூலுடன் மாறுபடுகின்றார்

பண்டைத் தமிழிலக்கண அணிகள் கூறும் எதிர்மறை விதியின் கொள்கையிலிருந்து, முனிவர் வேறுபட்டுக் கூறும் எதிர்மறை விதியின் இடைச் சொற்கள் பல உண்டு;

ஏன், ஏம், ஓம், ஆய், ர, ர், ஆன், ஆள், ஆர், அ, ஆ, ஆது, ஆகியன (சூ 114) எதிர்மறை ஏவலொருமை விகுதிகள் என்றும்,

ஏல், அல், அன்மோ, அற்க என்பன (சூ 114 எதிர்மறை ஏலலொருமை விகுதிகள் என்றும்,

ஆமின், அன்மின், அர்பீர் என்பன (சூ 121) எதிர்மறை வினையெச்ச விகுதிகள் என்றும் கூறு கின்றார்

முனிவர் பிறிதோரிடத்தில், அன்மை, இன்மை களைப் பற்றிக் கூறும்போது (சூ126) அதன் உரையில், 'ஒன்றன் இயல்பு மறுக்கும் அன்மையும்', ஒன்றன் இருப்பு மறுக்கும் இன்மையும்' என்று கூறியுள்ளது நாம் போற்றுதற்குரியது இவ்வாறே, பல புதிய கருத்துக் களைக் காட்டிச் சொல்லதிகாரத்தைச் சுருக்கமாக முடிக்கின்றார் முனிவர்

**பொருளதிகாரம் :**

இவ்வதிகாரத்தின் தொடக்கத்தில்,இறை வணக்கம் கூறுமிடத்து (சூ143) முத்துவீரியர் கூறியுள்ள இறை வணக்கப் பாவினை (முத்து பொருள் 1) அப்படியே எடுத்த மைத்துக் கொண்டார் முனிவர் பின்னர் பொருளதி காரத்தைத் தொடங்குமுன், 'பொருள் நூலைத் தந்த செந்தமிழுணர்ந்தோர், அகப் பொரு ளெனச் சிற்றின்ப மொன்றையும், புறப் பொருளெனச் சேவகமொன்றையும் விரித்துரைத்தார் யான் அங்ஙனங் கூறாமல், அறமுதல் நான்கிற்கேற்ப இப்பொருளதி காரத்தைக்கூறத் தொடங்குகின்றேன்' என்று (சூ144) உரையில் கூறு கின்றார் ஆகையால், அகத்திணை, புறத்திணை களைக் குறித்துப் பண்டைத் தமிழ் நூலோர் சென்றவாறு செல்லாமல், அவற்றை மாற்றி அமைத்துக் கொண்டனர் இவ்வாசிரியர்

முதற்காரணம், நிமித்தகாரணம், துணைக்காரணம், ஆகிய மூன்று காரணமாகப் பல தமிழ்ப் புலவரும், பத்துக்காரணமாகச் சுவாமிநாததேசிகரும் (இலக்கணக் கொத்து 34) கொண்டனர் மேற்கூறிய மூன்று காரணத்தோடு குறிப்புக் காரணமொன்றைச் சேர்த்து, இவற்றாலுண்டாகும் காரியம் நான்கினையும் கூட்டி,

இவ்வெட்டின் வழியாக அகத்திணைப் பொருள் (சூ158) தோன்றும் என்கின்றார் முனிவர் ஒழுக்கம், நூல், புறக்கரி ஆகிய மூன்றின் வழியாகப் புறத்திணைப் பொருள் (சூ161) பிறக்கும் என்கின்றார் நெருப்பை-வன்னியைக் கொண்டு யாகத்தைப் புரிவதால், அந்தணரை, இடுகுறிக் காரணப்பெயராக,'வன்னியர்' என்று நால்வகை வருணத்தாரைக் குறிப்பிடும்போது (சூ183) கூறுகிறார்

மொழிக்கு உரிமையைப் பற்றிக் கூறும்போது, முத்துவீரியர் கருத்துகளைத் தழுவி (முத்து - எழு-மொழி-26-30) தேவர் மொழியை, 'சனுக்கிரகம்', சங்கதம்' என்றும் இழிசினர் மொழியை, 'அவப்பிரஞ்சம்' என்றும், எல்லா நாட்டிலும் எல்லாராலும் வழங்கும் மொழியை, 'பாகதம்' என்றும், இப்பாகதம்,தற்பவம், தற்சமம், தேசிகம் என மூன்று வகைப்படும் என்றும் (சூ191) கூறிவிட்டு, இவற்றின் பொருளை உரைப்பகுதியில் பல எடுத்துக்காட்டுக் களுடன் தெளிவுபடுத்துகின்றார் இந்நூலாசிரியர்

நம்பி அகப்பொருளுள் அகத்திணையியலில் கூறியுள்ளவாறு, ஐந்திணைக் கருப்பொருளைக் கூறிவிட்டுத்தாம் எடுத்துக்கொண்ட அகத்திணையைச் சுருக்கி முடித்துக்கொள்கின்றனார் முனிவர் பின்னர், நன்னூலுள் சொல்லதிகாரத்தில் கூறியுள்ள இருவகை வழக்கு (சூ194), பத்துவகைக் குறிப்புச் சொல் (சூ195), மரபுச் சொல் (சூ197), அடுக்குத் தொடர் (சூ198) ஆகிய பொருள்களைத் தாமியற்றும் பொருளதிகாரத்தில் அமைத்துக் கொண்டார் இவ்வாசிரியர் இன்னும் புறத்திணையானது வெட்சி முதல் தும்பையிறுதியாக எழுவகைப்படுதலுமாகும் என்று கூறிவிட்டு, அதன் உரைப்பகுதியில் வெண்பா மாலையிலிருந்து பல செய் யுட்களை மேற்கோளாகக் காட்டி இப் புறத் திணையை முடித்துக்கொள்கின்றார் இப்புலவர்

**4. யாப்பதிகாரம் :**

*முன்னோர் செய்யுளியல் கருத்துகளுள் பலவற்றை எளிய நடையில் விளக்குகின்றார் முனிவர் ஆங்காங்கு உரைப்பகுதிகளில், பல்காயனார், கையனார், காக்கைப் பாடினியார், நற்றத்தனார் முதலிய பல ஆசிரியர் கருத்துக்களை மேற்கோள் காட்டுகின்றனார் தொல்காப்பியச் செய்யுளியலின் உரையில் பேராசிரியர் எடுத்துக் காட்டுவதும்,முத்துவீரியத்தில், 'இருகுறள் சவலை ஒருவிகற்பாகும்' (முத்து-யாப்பு-செய்8) என்று கூறப்படுவதுமாகிய சவலை வெண்பாவிற்கு 'இருகுறள் ஒரு விகற்பத்தான் வருவது சவலை வெண்பாவாகும்' (சூ.222) என இலக்கணங்கூறி, அதன் பொருளை விளக்கிக் கூறுகின்றார்*

*வடநூலார், பாவொடு, பாவினத்தை, 'பத்தியம்' என்பர் என்றும், அவையில்லாமல், 'கொன்றைவேந்தன்' என்பது போன்ற பாவின் நடைபோல வருவனவற்றைக் 'கத்தியம்' என்பர் (சூ 256) என்றும் முனிவர் கூறுகின்றார் காப்பிய இயல்பைக் கூறும் பகுதியில், 'புராணம்' என்பதை விளக்கும்போது 'பலகதைகளைப் புனைந்துரைப்பது புராணமாகும் ' (சூ255) என்கின்றர் வச்சணந்திமாலையில் வரும் பாட்டில் பொருட்களையும் இலக்கண விளக்கத்தில் வரும் பாட்டின் கருத்துகளையும் தழுவி, இறுதியில்'செய்யுள் மரபியல்' எனப் பெயரிட்டு, அவற்றின் பொருளைத் தெளிவாக விளக்கி யாப்பதிகாரத்தை முடிக்கின்றனர் இவ்வாசிரியர்*

**அணியதிகாரம்:**

*நன்னூலில் கூறியுள்ள எண்வகைப் பொருள் கோளையும், பத்துவகை எச்சங்களையும் எடுத்தமைத்துக் கொண்டு, அவ்விரண்டினையும் முறையே, 'மறிநிலையணி' (சூ 304) என்பர் 'முனிவர் தண்டியாசிரியர் கூறியுள்ள 35 வகைப்பட்ட பொருளணிகளுள்*

*சில நீக்கியும், சில புதிய அணிகளைச் சேர்த்தும் 30 வகையாகப் பொருளணியியலை முடித்துக்காட்டு கின்றார் தண்டியார் பல அணிகளுக்கு விளக்கங்கூறாமல் அவற்றின் பெயர்களைமாத்திரங் கூறியுள்ளார் முனிவர், ஒவ்வோரணிக்கும், 'இதரேதரம் என்ப இரு பொருள் மாறலே' (சூ 531) என்பது போன்ற விளக்கமுங்கூறிச் செல்லுகின்றனர்*

*தற்குறிப்பேற்ற அணியினை, ' ஊகாஞ்சித அணி (சூ 346) என்று கூறி, அவ்வாறு கூறுதற்குரிய காரணத்தையும் இவர் காட்டுகின்றார் பிறிதோரிடத்தில், 'விடையில் வின அணி ' (சூ 362) என்றும், 'வினவில் விடை அணி' (சூ 363) என்றும் கூறுவன சிறப்பாகத் தோன்றுகின்றன இறுதியில், 'எழுத்துச் சொற்பொருள் யாப்பணி என்றிவண், வழுத்திய ஐம்பொருள் வழக்கம் சுருக்கித் தொன்னூல் நடையொடு முத்தமிழ்த் தொன்னூல் விளக்கம் துளக்கிய வாறே' (சூ 370) என்று கூறி இத்தொன்னூல் விளக்கத்தை முடிக்கின்றார் வீரமாமுனிவர்*

## பிள்ளைப்பாட்டும்
## பிள்ளைத்தமிழும்

இது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களிலே ஒன்று இது பிள்ளைக் கவியென வழங்கப்படுதலை வெண்பாப் பாட்டியலாலும், பிள்ளைப் பாட்டென வழங்கப்பட்டிருத்தலைப் பன்னிரு பாட்டியலாலும் அறிகிறோம் 'குழவி மருங்கிலும் கிழவதாகும்' என்ற தொல்காப்பிய சூத்திரத்தை ஆதாரமாகக் கொண்டு இந்நூல் அமைந்ததென்பர் 'மருங்கென்றதனால் மக்கட் குழவியாகிய ஒரு மருங்கே கொள்ளப்படும் 'தெய்வக் குழவியின்மையின்' என எழுதப்பட்டிருந்தும், கடவுளரையும் கடவுட் பெண்டிரையும் குழவிப் பருவத்தினராகக்கொண்டு பிற்காலத்தே பிள்ளைத் தமிழ் நூல்கள் பல எழுந்தன இந் நூல் ஆண்பாற்பிள்ளைத் தமிழென்றும், பெண்பாற் பிள்ளைத் தமிழென்றும் இருபாற்படும்

தாங்கள் போற்ற விரும்புபவரைக் குழந்தையாக வைத்துக் காப்பு முதலிய பத்துப் பருவங்களை அமைத்துப் பாராட்டுவது இதன் இலக்கணம் இந்நூலில் மூன்று மாதம் முதல் இருபத் தோராம் மாதம் வரை ஒற்றித்த மாதமாகிய பத்து மாதங்களிலும் பத்துப் பருவங்களைச் சிறப்பித்துப் பாடுவர் குழந்தைகள் மூன்றாம் ஆண்டினும், ஐந்தாம் ஆண்டினும், ஏழாம் ஆண்டினும் கேட்பிக்கினும் இழுக்காகா தென்று பன்னிரு பாட்டியலும், குழந்தை யின் ஐந்தாம் ஆண்டினும், ஏழாம் ஆண்டினும் பாடினும் இழுக்காகாதென்று வெண்பாப் பாட்டியலும்

தெரிவிக் கின்றன மற்றும் ஆண்பாற்காயின் பதினாறு ஆண்டள வும், பெண்பாற்காயின் பூப்பு நிகழும் வரையி லும் கேட்பித்தல் இழுக்காகாதென்பது இந்திரகாளியர் மரபு எனினும் அரசன் இளையனாயினும் முடி சூடிய பின் பிள்ளைக்கவி பெறலாகாதே என்பதைத், 'தொன் னிலை வேந்தர் சுடர்முடி சூடிய பின்னர்ப் பெறா அர் பிள்ளைப் பாட்டே' எனப் பன்னிரு படல மேற்கோட் சூத்திரம் ஒன்று வலியுறுத்துகின்றது

தொல்காப்பியர் கூறிய வனப்பு எட்டனுள் ஒன்றாகிய விருந்தைப் பொதுவிதியாகக் கொண்டே பல பிரபந்தங்கள் எழுந்தன அந்நிலையாக இந்நூல் ஆசிரிய விருத்தத்தை நான்கு அடியாக ஒப்புக்கொண்டு, வண்ண விருத்தய அதாவது ஓரடிக்குப் பதினாறு கலை வகுத்து, இவ்வாறாக நான்கடிக்கும் அறுபத்து நாலு கலை வகுத்துப் பாடுவதாகும் இவ்வாறு பொய்கையார் களவியல் தெரிவிக்கிறது பிள்ளைப்பாட்டு நெடுவெண் பாட்டாய் வருதல் வேண்டுமென்பதைப் புலவர்கள் தெளிவாகக் கூறியிருத்தலைப் பன்னிருபாட்டியல் குறிக்கக் காண்கிறோம் ஆனால், அவ்வாறமைந்த நூலொன்றும் வழக்கிலில்லை

சந்தப்பாக்களால் விரவி வருகின்ற இந்நூலின் பத்துப் பருவங்களையும் பாடவேண்டிய முறைமையை நோக்குமிடத்துக் காப்புச் செய்யுளை ஒன்பதாக வேனும், பதினொன்றாகவேனும் பாடுதல் வேண்டுமென்பதும், பருவங்கள் பத்தையும் தம்மில் ஒப்புக் கொண்டு பாடு மிடத்து ஒற்றைப்படப் பாடுதல் சிறப்புடைத் தென்றும், இரட்டிக்கப் பாடின் ஓசை பெயர்த்துப் பாடுதல் வேண்டுமென்பதும் வரையறை இவ்வரை யறையை மீறிப் பருவத்திற்கான பாட்டுக்களின் எண்ணிக்கையைக் குறைத்துப் பாடிய நிலையையும் பருவ எண்ணிக்கையை மிகுத்துப் பாடிய நிலையையும் காண்கிறோம்

ஒவ்வொரு பருவத்திற்கும் எவ்வேழு பாடல்களையு டையதாகச் சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத்

தமிழும், ஐந்தைந்து பாடல்களையுடையதாகக் கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழும், மும்மூன்று பாடல்களையுடையதாகப் பழனிப்பிள்ளைத் தமிழும், ஏதுமே வரையறையின்றிப் பருவத்திற்குப் பருவம் பாட்டுக்களின் எண்ணிக்கை மாறுபட்டனவாக ஆண்டாள் பிள்ளைத் தமிழும் இருக்கக் காண்கிறோம் மேலும் பருவம் பத்தே வரையறையாக இருந்தும், பதினொரு பருவம் கொண்டதாக ஆண்டாள் பிள்ளைத் தமிழும் , பன்னிரண்டு பருவங்களைப் பெற்றதாகத், தில்லைச் சிவகாமியம்மை பிள்ளைத் தமிழும் அமைந்திருக்கக் காண்கிறோம்

பத்துப் பருவங்களையும் தந்தை, தாய், பாட்டன், பாட்டி போன்றவர்களைச் சிறப்பாகக்கொண்ட சுற்றத்தின் அளவாக வைத்துப் பாடுதல் மரபாகும்

இனி நூலின் போக்கான பத்துப் பருவங்களை நோக்குவோம் ஆண்பாற்பிள்ளைத் தமிழுக்கும் பெண் பாற் பிள்ளைத் தமிழுக்கும் பொதுவாயமையும் முதல் ஏழு பருவங்களின் விளக்கத்தைக் காணலாம் அவை முறையே காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி என்பனவாகும்

காப்புப் பருவத்துத் திருமால் முதலிய தெய்வங் களைப் பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைக் காக்க வேண்டுமென்று பாடுவர் திருமாலும், அரனும், பிரமனும், பிள்ளையாரும், முருகனும், கதிரவனும், வடுகனும், எழுவர் மங்கையரும், இந்திரனும், சாத்தனும், குபேரனும், நீலியும், முப்பத்துமூன்று தேவர்களும், திருமகளும், பாமகளும், சந்திரனும் காப்பில் வருதற்குரிய கடவுளாவர் இவ்வரையறையிலும் உடன் பாடில்லா நிலை புலனாகின்றது கடவுளரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட நூல்களில், காப்புக்குரியவர் அவராக அமையும்பொழுது, அவரை விடுத்து, வேறு கடவுளர்களைக் கூறுவது மரபாயிற்று

காக்கின்ற தொழிலைச் செய்கின்ற காரணத்தால், திருமாலைக் காப்புப் பருவத்து முதற் கடவுளாகக் கொள்ள வேண்டுமென்ற வரையறை இருந்தும், பாட்டுடைத் தலைவர்களின் தொடர்புக்கும் சூழ் நிலைக்கும் ஏற்ப முறையை மாற்றிப் பாடினர் தஞ்சை சரஸ்வதி மஹால் வெளியீடுகளான-இயற்றியோர் யாரெனத் தெரியாத நூல்களான-சிவயோக நாயகி பிள்ளைத் தமிழிலும் முறையே ஐந்தாவது பாடலிலும் எட்டாவது பாடலிலும் திருமாலைக் காப்புப் பருவத்தமைத்துப் பாடினர்

காப்புப் பருவம் அமைக்கின்ற முறையிலே, மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் தமது நூலான சேக்கிழார் பிள்ளைத் தமிழிலே பெரு மாறுதலைச் செய்துள்ளார் காப்பிற்குரியவராகக் கூறப்பட்ட தெய்வங்களை யெல்லாம் விடுத்துத் திருத்தொண்டர் களையெல்லாம் காப்பில் வைத்துப் பாடியுள்ளார் காப்புப் பருவமென்பதைத் தெய்வ வணக்கமெனக் கூறியும், பன்னிரு ஆழ்வார்களைக் காவற் கடவுளாகக் கூறியும் அமைகிறது வைகுந்த நாதன் பிள்ளைத்தமிழ் சத்தியஞான பண்டாரம் பிள்ளைத் தமிழிலே ஐந்தெழுத்தும், திருவெண்ணீரும் காப்புப் பருவத்திலே வைத்துப் பாடப்பட்டுள்ளது

காப்புப் பருவத்தில் கூறப்படும் கடவுளராகிய விரிசடைக் கடவுளையும், எழுவர் மங்கையரையும் செய்யுளில் கூறுமிடத்து, அவர்தம் கொலையகற்றியும், இயற்றிய கொடுமையகற்றியும் மங்கலமாகப் பாடவேண்டுமென்பதைப் பன்னிரு பாட்டியலும் நவநீதப் பாட்டியலும் வற்புறுத்துகின்றன

இரண்டாவது செங்கீரைப் பருவம் இது ஐந்தாம் மாதத்து நிகழ்வது கூறுவது 'கீர்' என்பதற்குச் 'சொல்' எனப் பொருள்கொண்டு, தொடையமைதிகள் இல்லாத ஒன்றைச் செந்தொடை எனக் கூறுவதுபோலச் சொல்லுக்குரிய அமைதியில்லாததைச் செங்கீரென்றார்

என அமைத்து, இது குழந்தைகள் மழலையைக் காட்டிலும் இளமைப் பருவத்தையுடையதான பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்ப தாகுமெனா ஒரு சாரரும், 'ஆடுக செங்கீரை' எனும் செய்யுள் வழக்கைக் கொண்டு, குழந்தை ஒரு காலை முடக்கி, ஒரு காலை நிமிர்த்தி, இரண்டு கைகளையும் நிலத்திலூன்றி, முகத்தை மேல் நிமிர்த்தாடுதலாகிய பருவத்தைக் குறிப்பதாகுமெனப் பிறிதொரு சாராரும் கூறுவர்

மேற்கூறியவாறு ஆடுகின்றபொழுது சுற்றத்தார் செவ்விய சொற்களைச் சொல்ல வேண்டு மென்று வேண்டிக் கொள்வதாக இரண்டு கருத்துக் களையும் சேர்த்து அமைப்பாரும் உண்டு குழந்தை தலையெடுத்து முகமசைத்தாடும் நிலையையே பெரிதும் கூறுவர் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழிலும், மங்களாம்பிகை அம்மை பிள்ளைத்தமிழிலும் இரண்டு கருத்துகளையும் வைத்துப் பாடப்பட்டிருத்தலைக் காண்கிறோம்

மூன்றாவது தாலப்பருவம், ஏழாம் மாதத்து நிகழ்வது கூறுவது தாலாட்டென்பது தாலென மருவி வழங்கியது குழந்தைகளைத் துயிலச் செய்வார் தம் நாவை அசைத்தலும், பாட்டுப் பாடுதலும் வழக்கம் 'தாலே தாலேலோ' என்னும் சொல்லிறுதியுடன் இப்பருவச் செய்யுட்கள் முடிகின்றன தாலாட்டென்பது தனியான பிரபந்த நூலாகவும் வழங்குகிறது

நான்காவது சப்பாணிப் பருவம், ஒன்பதாம் மாதத்து நிகழ்வது கூறுவது குழந்தையைக் கையோடு கை சேர்த்துக் கொட்டும் விளையாட்டாகிய சப்பாணி கொட்டும்படி வேண்டுவது

ஐந்தாவது வருகைப்பருவம் பத்தாம்- பதினோரம் மாதம் வருவது தவழ்ந்து, நிமிர்ந்து நிற்க வழங்கும்

பருவமிது இதனை வருகைப் பருவமெனவும் வழங்கப் படுகிறது

ஆறாவது வருகைப்பருவம், பதின்மூன்றாம் மாதத்து நிகழ்வது கூறுவது தளர் நடையிட்டு வரும் குழந்தையை வாவென்று அழைப்பதாகக் கூறுவது இது வாரானைப் பருவமெனவும் வழங்கப்படுகிறது

ஏழாவது அம்புலிப் பருவம், பதினைந்தாம் மாதத்து நிகழ்வது கூறுவது மதியைக் குழந்தையோடு விளையாட வாவென்று அழைத்தலைக் கூறுவது இப்பருவம் ஏனைய பருவங்களினும் பாடற்கரிய தென்பதைப் 'பிள்ளைக் கவிக் கம்புலியாம்' என்ற பாடலடி விளக்குகிறது அவ்வாறு மதியை அழைக்கின்ற போது சாம, பேத, தான, தண்ட வகையால் முறையே அம்புலிக்கும் பாட்டுடைத் தலைவர்க்கும் ஒப்புக் கூறுதலும், வேற்றுமை கூறுதலும், வரின் விளையும் நன்மை கூறுதலும், வாராவிடின் நிகழும் துன்பம் கூறுதலும் மரபு சாம மென்பதற்கு இன்சொல் என்று பொருள் கொண்டு பாடுதலாகிய மரபையும், அதுவும் ஒப்பிலடங்கும் நிலையையும் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழிலே விரிவாகக் காணலாம் முதன் மூன்று முறையிலே பொருந்தாதாரையே தண்ட முறையில் வைத்துப் பாடுவரென்பர் ஒரு சாரார் வைகுந்தநாதன் பிள்ளைத் தமிழில் தான, தண்டம் எனும் இரு முறையே வைத்துப் பாடப்பட்டுள்ளது

இவ்வேழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத் தமிழுக்கும் பொது அடுத்த மூன்று பருவங்களுக்கு ஆண்பாற் பிள்ளைத் தமிழில் சிற்றிற் பருவமும், சிறுதேர்ப் பருவமும் சிறுபறைப் பருவமும் பாடப்படும் சிற்றிற் பருவத்துச் சிற்றிலிழைத்து விளையாடும் சிறுமியர் பாட்டுடைத் தலைவர் சிற்றிலை அழிக்கின்ற போது, 'எமது சிற்றிலை அழியாதொழிக' எனப் பாடுவர் சிறுபறைப் பருவத்துப் பாட்டுடைத் தலை

வரைச் சிறுபறை முழக்கும்படியும், சிறுதேர்ப் பருவத்துச் சிறுதேருருட்டும்படியும் பாடுவர்

இனி, வெண்பாப் பாட்டியலும் நவநீதப் பாட்டியலும் பெண்பாற் பிள்ளைத் தமிழில் சிற்றில் சிதைத்தல் முதலான மூன்றனையும் பாடுதலாகாதென்று கூறிய மைந்தன அம்மூன்றற்கும் நிகராகக் கழங்கு, அம்மானை, ஊசல் என்பவைகளைக் கொள்க என்று சிதம்பரப் பாட்டியலும் இலக்கண விளக்கப் பாட்டிய லும் கூறுகின்றன

பன்னிரு பாட்டியல், சிற்றிலிழைத்தல் சிறுசோறாக் கல், குழமகன், ஊசல், காமவேள் நோன்பு போன்றவை பெண்பால் நூலுக்கு உரியவை எனக் கூறுகின்றது, பிங்கலந்தையென்னும் நூல் குழமணம், நோன்பு, நீராடல், பாவையாடல், அம்மானை, கழங்கு, பந்தடித்தல், சிறுசோறடுதல், சிற்றிலிழைத்தல், ஊசலா டல் என்பவை பெண்பால் நூலில் வைத்துப் பாடுதற்குரியன என்கிறது

பெரும்பாலான பிள்ளைத் தமிழ் நூல்களில் அம்மானை, நீராடல், ஊசல் போன்றவைகளே வைத்துப் பாடப்பட்டுள்ளன சிவயோக நாயகி பிள்ளைத் தமிழிலே கழங்காடுதலும், ஆண்டாள் பிள்ளைத் தமிழிலே காமவேள் நோன்பும் வைத்துப் பாடப் பட்டுள்ளன

இவ்வாறு கூறப்படும் இலக்கண வரையறைகளில் ஒத்த, முடிபில்லாத இப்பிள்ளைத்தமிழ் இலக்கியம் தமிழிலக்கிய உலகிலே இடைக்காலத்தே தோன்றி, இக்கால வரையிலே நல்ல வளர்ச்சியைப் பெற்றிருக்கக் காண்கிறோம் முதல் நூலாகக் கிடைக்கும் ஒட்டக் கூத்தரின் குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழைத் தோற்றுவாயாகக்கொண்டு, குமரகுருபர சுவாமிகளின் மீனாட்சியம்மை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் நூல்களாலும், சிவஞான சுவாமிகளின் அமுதாம் பிகையம்மை பிள்ளைத் தமிழ் நூலாலும், பகழிக் கூத்தரின் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் நூல்களாலும்

சிறப்புற்று, தற்கால நிலையிலே கம்பன் பிள்ளைத்தமிழ், மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் மங்களாம்பிகை, சேக்கிழார், காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் நூல்களாலும் காந்தி பிள்ளைத்தமிழ் அளவாக வளர்ந்திருக்கக் காண்கிறோம் முகம்மதியக் கவிகளும் நபிநாயகப் பிள்ளைத் தமிழ், முகைதீன் பிள்ளைத் தமிழ், ஆண்டவர் பிள்ளைத் தமிழ் போன்ற நூல்களின் மூலம் இப் பிரபந்த வகையை வளர்த்தனர்

பிள்ளைத் தமிழில் சிறப்பாக உள்ள சில நூல்களின் திறத்தை நோக்கும்பொழுது, முதல் நூலாகக் கிடைப்பது இரண்டாம் குலோத்துங்கனைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு ஒட்டக்கூத்தரால் பாடப் பட்ட குலோத்துங்கன் பிள்ளைத் தமிழாகும் இந் நூலாசிரியர், நூல் முழுவதும் நல்ல சந்தங்களைக் கையாள்கிறார் சந்த முறைகளோடு படிக்கும்பொழுது நூலின் சிறப்பு விளங்கு கிறது ஏனைய நூலாசிரியர்களெல்லாம் இவருடைய சந்த அமைப்பைப் பின்பற்றியிருக்கக் காண்கிறோம்

தமிழிலக்கியங்களிலே வரலாற்றுக்குத் துணை புரியும் நூல்கள் மிகச் சிலவே அந்நிலையிலே இந்நூல் பெரிதும் துணை புரிகிறது இராசாதி ராசன், இராச ராசன், இரண்டாம் இராசேந்திரன் போன் றோர்கள் செய்த பெரும் போர்களும், அவர்களோடு குலோத்துங் கனுக்கமைந்த உறவு முறைகளும் தெளி வாகக் கூறப் பட்டுள்ளன

பிள்ளைத் தமிழென்றவுடனேயே தமிழ் பயில்வார் நினைவுக்கு வருவதெல்லாம் குமரகுருபர சுவாமிகள் இயற்றிய மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழும், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழுமாகும் நூலாசிரியர் தமிழினிடத்தே தெய்வத்தன்மையைக் கண்டதையும், பாராட்டும் தெய்வங்களையெல்லாம் தமிழ்த் தொடர் பும், தமிழின்பால் வேட்கையுமுடையவர்களாகக் கூறு வதையும் காண்கிறோம் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் வருகைப் பருவத்தமைந்த, 'தொடுக்குந் கடவுட்

பழம் பாடற் றொடையின் பயனே' என்ற பாட்டைப் படித்தின் புறாத தமிழறிஞர்களே இருக்க முடியாது பொருளாழமும், உள்ளத்தை வயப்படுத்தும் இன்தமிழ் நடையும் பயின்று வரும் இது போன்ற செய்யுட்களை இந்நூலில் பலவிடத்தும் காணலாம் அம்மையிடத்துச் சிவனடியார் ஈடுபடும் திறத்தையும், அம்மை அவரது உள்ளத்துப் பெருக்கெடுத்தோடும் பேரானந்த வெள்ளமாயமையும் நிலையினையும், முத்தப் பருவத்தமைந்த, 'உருகி யுருகி நெக் குடைந்து ' என்ற பாடலில் அழகாகக் கூறுகிறார் கற்பனைகளமைத்துப் பாடுவதில் வல்லவரான ஆசிரியர் தெய்வங்களைப் பற்றியும் கற்பனை செய்து பாடும் திறத்தை முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் வருகைப் பருவத்து, 'மழவு, முதிர் கனிவாய்ப் பசுந்தேறல் ' என்ற பாட்டிலே காணலாம் மற்றும் முருகன் ஆதிப்பிரானயிருந்தும், வள்ளியம்மையின் 'தேனூறு கிளவிக்கு வாயூறி நின்ற' திறத்தைச் செங்கீரைப் பருவத்தமைந்த, 'மீனேறு குண்டகழி ' என்ற பாட்டிலே சுவை ததும்பப் பாடுகின்றனர் இன்னும் ஆசிரியர் கையாளும் உவமைகளும் அணிகளும் நூலுக்குப் பெரிதும் சுவை தந்து நிற்கின்றன

பகழிக் கூத்தரியற்றிய திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழை, 'இது பிள்ளைத் தமிழாயினும் பெரிய தமிழ்' எனப் பாராட்டுகின்றனர் இவர் வைணவராக இருந்தும், இந்நூலைப் பாடித் தமது தீராத வயிற்று நோயைத் தீர்த்துக்கொண்டாரென்பது வரலாறு இந்நூலில் சொற்சுவையும், பொருட்சுவையும், பலப்பல சந்தச் சுவைகளும், கற்பனை, அலங்காரம் முதலிய பல நயமும், பக்திப்பெருக்கும் சிறந்திருக்கக் காண்கிறோம் தமது நூலின் முத்தப் பருவத்து முதற் பாடலில் 'வலம்புரிகள் ஈன்ற முத்திற்கும், மருப்பில் விளை முத்திற்கும், நெற்பயிரின் குளிர் முத்தினுக்கும் விலையுண்டு முருகா,

நின் கனிவாய் முத்தந்தனக்கு விலையில்லை' என்ற கருத்துப் படப் பாடும் திறம் போற்றுதற்குரியது நூலின் பல விடத்தும் ஆசிரியரின் தெய்வ வழிபாட்டையும் இன்சொல் திறத்தையும் காண முடிகிறது

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களியற்றிய சேக்கிழார் பிள்ளைத் தமிழென்னும் நூலில், ஆசிரியர் சேக்கிழாரின் சைவ சித்தாந்தப் பேரறிவையும், அவரியற்றிய திருத்தொண்டர் புராணம் மக்களது அறியாமையைப் போக்க உதவும் சிறப்பினையும் தெளிவாகக் கூறுகின்றனர்

சேக்கிழார் தமது நூலின் அவையடக்கத்துப் பாடிய 'செப்பலுற்ற பொருளின் ' என்ற பாட்டைத் தொடர்பு படுத்திச் செங்கீரைப் பருவத்துப் 'பொருவரிய தொண்டர்கள் புராணத்து ' என்ற பாடலைப் பாடியிருக்கும் நயம் போற்றற்குரியது இது பெரியோர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அமையும் நூல்களில் சிறப்பானது

